ஓம்
பரப்ரஹ்மணேநம:.

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாத
ஆசாரியசுவாமிகளின் முதன்மைச்
சீடருளொருவராகிய
ஸ்ரீ தோடகாசிரியர்
தேவவாணியிற் றிருவாய்மலர்ந்தருளிய




தோடகமென்னும்

# வேதசார சமுத்தரணம்.

ஸ்ரீ திருக்களர் ஆண்டவரென்னும்
ஸ்ரீ வீரசேகரஞான தேசிக பாதசேகர நியாய சந்திர
வேதாந்த பாஸ்கர மஹா மண்டலேஸ்வர
ஸ்ரீ சுப்பய்ய ஞானதேசிகேந்திர சுவாமிகள்
தமிழில் செய்யுள் வடிவமாய் இயற்றியருளிய
மூலமும்,

ஸ்ரீ சிதம்பரம் பொன்னம்பலஞான தேசிகர் மடாலயம்
ஸ்ரீ சிதம்பரஞான தேசிகர் பாதசேகரராகிய
ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள்
இயற்றிய
உரையும்.

நா. முனிசாமி முதலியார்
அவர்களால் பிரசுரிக்கப்பட்டு
சென்னை "ஆனந்தபோதினி" பவர் பிரஸ்ஸில்
பதிப்பிக்கப்பட்டன.

 1921 [விலை அணா 8.

ஓம்

பரப்ரஹ்மணேநம:

# உபோத்காதம்.



அநந்தகல்யாண குணங்கள் நிறைந்த மகாதேவாது அனுக்கிரக லீலாவிக்கிரகமாகிய ஸ்ரீசங்காபூஜ்ய பகவத்பாத ஆசாரிய சுவாமிகள் அஸ்தாமலகரென்னும் நாமம் வாய்ந்த சீடனைத் தமக்கடிமையாக்கிய பின் பதுமபாதாதி சீடத் திருக்கூட்டங்களோடு ஒருகால் சிருங்ககிரியென்னும் புரியில் ஸ்ரீ சாரதாம்பிகையைப் பூஜித்துக்கொண் டிருக்குங்காலத்தில் தமது தருமத்தில் வழுவாது நடப்பவரும் ஜீவகாருண்யமே உருவானவரும், அதிவிநயரும் தேசிகசேவையிற் றற்பரும், மிகுந்த சமாகிதசித்தருமாய ஆனந்தகிரியென்னும் நாமம்வாய்ந்த ஒருவர் அத்வைதஸ்தாபனுசிரியராகிய ஸ்ரீ ஜகத்குரு சந்நிதியைச் சரணுகதியாயடைந்து ஊசிசெல்வழி நூற் செல்வதுபோலவும், கட்கிமை போலவும். உடற் குயிர்போலவும், அனவாதம் ஆத்தம் அங்கம் தானம் சற்பாவம் என்னும் நான்குவிதப் பணிவிடைகளையும் அளவில்லாத அன்போடு செய்துவந்தனர். அக்கால், சாஸ்திரங்களிற் பிரவிருத்தி சிறிதுமின்றிக் கேவலம் சேவையிலேயே அன்புபூண்ட அவ்வன்பரைத் தயாநிதியாய் மான்மழுவொழித்துமறை முதற் பொருளையுணர்த்திவந்த விறைவர் தமது திருவுளத்தடைத்துப் பதுமபாதாதி முனிவர்கள் சாந்தி பாடமாகிய சிரவணஞ் செய்யும் பொழுது தமது திருவார்த்தையைச் சிரவணித்துய்யுமாறு கருணை புரிந்தனர். இங்ஙனம் நடந்து வருஞான்று அவ்வன்பர்.

ஒரோர்காற் றமது தேசிகேந்திரர் சேவைமுடியா திருப்பிற் சிறிது பொறுத்து வருவார்' அவ்வக்கால் உலகநாயகனுகிய குரவர்

பெருமான் சாந்திபாடஞ் செய்பவரை நோக்கிச் சிறிது பொறுங்கள்; கிரி சிறிதுபோதில் வந்துவிடுவன் பின்னர்ச்சிரவணஞ் செய்யலாமென்று திருவாய்மலர்ந்தருளுவார். அதுகுறித்துச் சர்வ வித்யா சம்பன்னராகிய பதுமபாதாதி முனிவர் மனங்கள் தப்பித்துக் கொண்டே வந்தன. சிறிதுநாட்கழித்து ஒருநாள் அவர் தேசிகர் பெருமான் பரிவட்டம் சுத்தஞ்செய்ய நதிக்குச் சென்றிருக்குங்கால் சாந்திபாடஞ் செய்யச் சகஸ்திரக் கணக்காகச் சீடர் கூடி யிருக்கச் சாந்திபாடம் நடக்க ஆக்ஞைபுரிய வேண்டுமென்று குரவர் பெருமானைப் பதுமபாத முனிவர் பிரார்த்தித்தபொழுது அவர் வாராமலிருக்கச், சிறிதுபொறுங்கள் கிரியும் கணப்போதில் வந்து விடுவன் என்று தேசிகேந்திரர் திருவாய்மலர்ந்தருளினர் அதைச்செவியுற்ற பதுமபாத முனிவர் சகியாதவராகிச் சாஸ்தித்திலன திகாரியாய்க் குட்டிசம் போலச் சடமாய்ப் புத்தியீனனாய்த் தன் வேலையைச் செய்துகொண்டிருக்கும் அவனுக்காக என் எதிர்பார்க்க வேண்டுமென்று பீதியோடுந் தெரிவிக்க; அதைத் திருச்செவியுற்ற தயாசமுத்திரமாகிய தேசிகர் பெருமான் பதுமபாதரது மிகுந்த கர்வம் நீங்கும்பொருட்டும் பக்தர்கள்பால் அனுக்கிரகத்தை வெளியிடும் பொருட்டும் தமது அன்பனுகிய கிரியின்பால் சதுர்த்தச வித்தைகளும் உளவாமாறுதிருவுளத்திலக்கணமே கருணைபுரிந்தருளினர் குரு பான்றிருவருளால் அவ்வித்தைகளைப் பூரணமாகப் பெற்ற அவ்வன்பர் பாதங்கடோறும் நான்கு சகணங்கள் வாய்ந்த தோடகசந்தத்தால் மறைமுடியாவையுந் தொகுத்துச் சுருதிசார சமுத்தாணம் என நாமஞ்சூட்டி இந்நூலைச் சகந்நாயகனுகிய தேசிகர் பெருமான் றிருவடியிற் சமர்ப்பித்தனர். அதன் சொற்பொருளமைதியும் தேசிகன் சேவையின் வலியால் விரைவில் இவ்வாறு இயற்றியதையும் பத்மபாதர் கண்ணுற்று தமது கர்வத்தை விடுத்துப் பொறுத்தருளுமாறு ஸ்ரீ

9/1

சங்கரமுனிவர் திருவடித் தாமரையில் விழுந்து அனேகங்கோடி நமஸ்காரம் செய்தனர். கருணையே திருவுருவமாய எமதுயிர்க் கிறைவர். அதனை அவ்வாறே பொறுத்தருளினர் என்பது சங்கர திக்விஜயத்தின் கண்ணுள்ள இந்நூலவதரித்த சரித்திரத்தின் சங்கிரகமாம்.

இத்தகைய அருமையும் அருளும் வாய்ந்த நூல் தேவவாணி யுணர்ந்தார்க்கே யன்றித் தமிழ்மக்களுக்குப் பயன் படாமை கருதி ஸ்ரீ திருக்களர் ஆண்டவரென்னும் ஸ்ரீமத் வீரசேகர ஞான தேசிகர் பாதசேகரராகிய நியாய சந்திர வேதாந்த பாஸ்கர ஸ்ரீமத் மஹாமண்டலேசுவர சுப்பய்ய ஞான தேசிகேந்திர சுவாமி கள் தமிழில் செய்யுள் வடிவமாய் இயற்றியருளிய மூலமானது கூரிய மதியுடையோர்க்கன்றி ஏனையோர்க்குப் பயன் படாமை கருதி ஸ்ரீமத் பொன்னம்பல ஞான தேசிக சுவாமிகள் மடாலயம் ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் பாதசேகரராகிய சுப்பய்ய சுவாமிக ளியற்றிய உரையும் சேர்த்து. நா. முனிசாமி முதலியார் அவர் களால் பிரசுரிக்கப்பட்டது.

7-4-1921.



ஓம்
பரப்ரஹ்மணே நம:

# தோடகமென்னும் வேதசார சமுத்தாரண மூலமும் உரையும்.

## பாயிரம்.

### வன்னி விநாயகர் துதி.

மங்கல வுருவனாகி மருவுதற் கரிய னாகிச்
சங்கையி றுரியாதீதந் தனிலொளி ரொளிய தாகி
யெங்கணற் குரவனாகி யின்பமே யீயும் வன்னி
யைங்கர விறைவன் பொற்று ளனுதினம் போற்றுவாமால்.

### பஞ்சமூர்த்திகள் வணக்கம்.

மறைநெறி யொழுகு மருந்தவர்க் கருளும்
வன்னியைங் கரனைமா வடிவே
லுறைதிருக் கரனை மதுமுனிக் கருளு
முயர்திரு புவனநா யகனை
நிறைதரு கருணை நிலயம தாகி
நிகழ்திரி புவனநா யகியைச்
சிறையறுத் தருளும் வீரமா தவனைத்
தினம்பணிந் திடரொழித்திடுவாம். (2)

### சங்கர பூஜ்ய பகவத் பாதாசாரிய சுவாமிகள் வணக்கம்.

பெண்மை பாதிய னென்பெயர் பெயர்க்கவோ விடத்தை
யுண்மை யார்கள னென்பதை யொழிக்கவோ வுலகில்
வெண்மை மாமலை விட்டொரு விரத்தனுய்ப் போந்தே
தண்மை யேதருஞ் சங்கர முனிவனைப் பணிவாம். (3)

### பத்மபாதாதி நால்வர் வணக்கம்.

கங்கையிற் கமலமீது கதிசெயுங் கழலி னானைப்
புங்கவ ரீச னான புனிதனைக் குரவன் பாத
பங்கய வருளாற் பாடும் பரமனைப் பெருமை வாய்ந்த
வங்கையா மலக னென்னு மமலனைப் பணிகுவாமே. (4)

### பரமகுரவர் வணக்கம்.

முடிமறை யறையு மெமையெமக் கருளு முத்திரா
மேசதேசிகனைத்,துடியிடை யுடையர் துரும்பென வருளுந்
துகளறு துறவிறை யவனைச்,சடையிறை யடியின் மனமுற
வருளுஞ் சத்தறி வம்பரா ரியனைத், திடமுடன் மனத்திற்
சிந்தைசந் ததமுந் திகழ்தரப் புரிந்திரு ளிரிப்பாம். (5)

### அருளிறை வணக்கம்.

சீர சாகரஞ் சிறிதெனக் கருணையிற் சிறந்த
நார சேகர னருள்கரி முகனமக் குறுஞ்சம்
சார சாகரந் தணந்திடச் சமிவனந் தனிலாம்
வீர சேகர முனிவரன் மிளிர்பதந் தொழுவாம். (6)

### அவை யடக்கம்.

சங்கரதே சிகனருளா லறையுமறைச் சாரசமுத் தரண
மான, விங்கிதனைத் தமிழ்மொழியி லெளியனேன் யாத்திடுக
விதயத் தோரல், பொங்கரவி னிறைதனதா யிரமுகத்தா
லரன்புகழைப் புகழ னோக்கி, யிங்கொருபுன் கிருமியதை
நிகர்புகழ விதயமுன லிணைய தாமே. (7)

### நூற்றோகையுங் கூறுவான் றுணிந்த வேட்கையும்.

இவ்வெழி லமுத நூலை யிருசதத் தொருபத் தின்றாஞ்
செவ்விய செய்யுளாலே சிறியனுஞ் செப்ப றானு
மெவ்விதத் தினுமென் சிந்தை யின்பறி வுருவில் வாழ
வவ்வித மலது வேறோ ராசையைப் பற்றி யன்றால்.

பாயிரம் முற்றிற்று.

இதந்தரு மறையின் பொருளினை வடிக்கு மினிமையாந்
தோடகத் திரையை, விதம்பெறத் தமிழி லாக்கிட யாமெம்
விருப்புயிர்த் துணைவனு மெந்தைச், சிதம்பர சபையி லுமை
யொடு நடிக்குஞ் சிலம்படி மனத்தினிற் பதித்துச், சிதம்பர
ஞான தேசிகன் றனது சீரடி சென்னி சேர்த்திடுவாம்.

9-1



ஸ்ரீ கணேசாயநம:

# நூல்.

(அவதாரிகை)—இம்முதற் செய்யுளால் ஈசுவரனையுங் குருவையும் வணங்குகின்றார்.

மூவுல கிறையா மரியினை முனிவர் தொழுவனை முதிர்ந் தசத் துவனை, மேவருஞ் சத்தி தனயனற் சுதனை மிளிர்பர மேட்டியீட் டினனைத், தூவுகொண் மூவி லமலகம் புரையு முருவனை வசிட்டதூய் குலனைச், சிவநாயகனை யுக்கிர தவ னைச் சிந்தையிற் றினம்பணிந் திடுவோம். (1)

(பதவுரை)—மூவுலகிறையா மரியினை-மூவுலகிற்கு நாதனும் அஞ்ஞானத்தைக் கெடுப்பவரும், முனிவர் தொழுவனை - மனன சீலரால் துதிக்கத் தக்கவரும், முதிர்ந்த சத்துவனை - மேன்மை யான சைதன்யரும், மேவருஞ்சத்தி தனயனற்சுதனை-பொருந்து தற்கரிய மாயாசத்தியின் காரியப்பிரபஞ்சமான புத்திரனை நல்ல புத்திரனாக வுடையவரும், மிளிர்பரமேட்டி யீட்டினனை - விளங்கு கின்ற இரணிய கர்ப்பனை யுண்டாக்குபவரும், தூவு கொண்மூ வில் அமலகம் புரையும் உருவனை - மழை துளிக்கும் மேகமின்றிய பரிசுத்த ஆகாயம்போன்ற சொரூபரும், சிவநாயகனை - சீவனை நியமிப்பவரும் ஆன, உக்கிரதவனை - பிரக்ஞானகனரான ஈசுவ ரனை, சிந்தையிற் றினம் பணிந்திடுவோம் - மனதா லெப்போதும் வணங்குவாம்.

(பதசாரம்)—மூவுலகிறை அரியென்பதாதியால் இம்முதற் செய்யுளில் இஷ்டதேவதை குருவணக்க வழியாக இயற்ற விரும்பிய பிரகரணத்தின் விஷய, சம்பந்த, பிரயோஜனங்களை யுங் குறிப்பாற் கூறுகின்றார். ஆக்ஷேபம் "சாஸ்திரவேக தேசத் துள்ளதாய் அதன் காரியத்தைப் பிரதி பாதிப்பது பிரகரணம்" என வதனிலக்கண முணர்ந்தார் கூறுவர். "ஓர் பலனைக்

குறித்து இயற்றப்பட்ட பொருட் கூட்டத்தின் முழு நிறை வைக்கூறு நூல் சாஸ்திரம்" என வதனி லக்கணமாம். சுருதி சார சமுத்தரண மென்னு மிப்பிரகரணம் நிர்க்குணப் பிரஹ்மத் தின் ஒன்ரூந் தன்மையைக் கூறுஞ் சிறந்த யுக்தி மாத்திரங் கூறு கின்றமையின் சாரீரக சாஸ்திர வேக தேசத்துள்ளதும் சமன் வயம், அவிரோதம், சாதனம், பலம் என்னும் அர்த்த நான்கையுங் கூறுகின்றதேனும் சாஸ்திரார்த்தத்தைச் சுருக்கிக் கூறுகின்ற மையின் சாஸ்திர காரியத்தைக் கூறவதாயுமிருக்கின்றது. அதனு லும் இஃது அதனுடைய விஷய சம்பந்த பிரயோஜனங்களே யுடையதாகின்றது; இதனுல் விஷய சம்பந்த பிரயோஜனங் களே வேருகக் கூறுங் கஷ்டத்தால் யாது பலன்?

சமாதானம்; இங்ஙனங்கூறிய துண்மையே அங்ஙனமேனும் கேட்போரின் முயற்சிக் கேதுவாக சாரீரக சாஸ்திரத்துள்ள விஷய சம்பந்த பிரயோஜனங்களேயே பிரகரணுரம்பத்தில் நினை ப்பிக்கின்ரு ரென்பதாற் ரூேடமின்ரும். இங்ஙனம் முதற் செய்யுள் விஷய முதலியவற்றைக் கூறுங் கருத்துடையதாகுங் கால் வினுவின் விடையாக இச்செய்யுள் கூறத்தக்க தென்று முதற்கண் வினுக் காட்டப்படுகின்றது. ஆக்ஷேபம்; பிரஹ்மம் அறியப்படினும் அறியப்படாவிடினும் விஷய சம்பந்த பிரயோ ஜனமின்மையால் இப்பிரகரணம் ஆரம்பிக்கத்தக்கதன்று எங்ஙன மெனின், பிரஹ்மம் வேதாந்த சாஸ்திரத்தினு மன்னியத்தால் அறியப்படின் இதற்கு விஷயமின்று. எது எதனுலேயே அறி யப் படுகின்றதோ அது அதற்கு விஷயம். எங்ஙனம் கண் முத லிய வற்ருல் ரூப முதலியவைபோன்று. அன்னிய சாதாரண மின்மை விஷயமாம். மற்றும் வேறு பிரமாணத்தா லறியப்படா விடின் அக்காலா காயபூப் போன்று சாஸ்திரத்தாற் கூறமுடி யாது; எங்ஙனமெனின், யாது ஒரு போதும் புத்தியில் விளங் காத விசேஷண முடையதோ அவ்வசக்கியத்தைக் குறித்து எங் ஙனஞ் சாஸ்திரங் கூறும்? கூறமுடியாது. ஆகவே சாஸ்திரத் திற்கு பிரஹ்மத்தோடு சம்பந்த மின்று. சேர்க்கை நீக்க மின்மை சம்பந்தமாம். எது எதனுனேயே அறியப்படுகின்றதோ

வேறென்று லறியப்படுகின்றதின்றே. அது அதனோடு சம் பந்த முடையதாகின்றது. எங்ஙனம் வியாகரணத்தால் சப்தத் தின் நன்மை யறியப்படுகின்றமையின் அதற்கதனோடு சம்பந்த மாம். பிரஹ்மம் முற்றிலும் அறியப்படாமையின் அசக்கியத் தைக் கூற ஆரம்பித்தமையின் இங்ஙனம் (வியாகரணத்தால் சத்தத்தின் நன்மை போன்று) வேதாந்த சாஸ்திரத்தால் பிரஹ் மம் அறியப்படுவதின்று. அறியப்படாமையால் சம்பந்தமின்று. விஷய சம்பந்தமின்றேற் பலனுமின்றாம் எனெனின் அது அத னைச் சார்ந்திருத்தலின்.

சமாதானம், பிரஹ்மம் முற்றிலும் அறியப்படினும் அறியப் படாவிடினும் இங்ஙனங் கூறிய ஆக்ஷேபம் பொருந்தும்; ஆனா லவ்விரண்டு மின்று. எங்ஙனமெனின், பிரஹ்மாதி பதங்களாலும் உலகத்தாலும் அறியப்படுகின்றமையின் முற்றிலும் அறியப்படா மையின்று. பிரஹ்ம சத்தம் பெரிய பொருளின் சம்பந்தமாய் தேசத்தாலுங், காலத்தாலும், வஸ்துவாலும் அனவச்சின்ன வஸ் துவை நிலை பெறுத்துகின்றது; அங்ஙனமே உலகத்திலும் நானென்று பிரத்தியகான் மாவறியப்படுகின்றமையின் அனவச் சின்ன வஸ்துவை நிலைபெறுத்துகின்றது. இவ்வான்மா வுண்மை யிற் பிரஹ்மமேயாம். இதனால் பிரஹ்மம் முற்றிலும் அறியப் படாததன்று; பிரமாணத்தா லறியப்படாமையின் முற்றிலும் அறியப்பட்டது மன்று. பதம் நினைப்பிப்பதாலும் உலக வடிவ எழாவது பிரமாண மொன்றுண்டெனவுடன் படாமையாலும் பதத்தாலும் உலகத்தாலு மறியப்பட்டது பிரமாணத்தா லறியப் பட்டதாகாது. ஆகையால் பிரஹ்ம முற்றிலும் அறியப் படாமையான் விஷயமும் அறியப்படாமையாற் சம்பந்தமும் பொருந்துகின்றது. விஷய சம்பந்த முண்மையால் பலனுமுண் டெனக் கூறுகின்றார் மூவுலகிறை என. ஆண்டு மூவுல கென்ப தாலாகாயாதி வுலகு சத்திரி நியாயத்தாற் கொள்ளற்பாலது. மூவுலகிறையும் அரியும் என உம்மைத் தொகையாம். தனது மாயாப் பிரதிவிம்ப கூட ஸ்த்சைதன்ய பரமாத்மா மூவுலகிறை யாம் அவ்வுலகிற்குக் காரணராதலினானும் நியந்தாவாதலினாலும்

மூவுலகிறையெனப்படுகின்ருர்; அவரே அரிக்கின்றமையின் அரி யெனப்படுகின்ருர் எதை அரி (அழி)த்தலினு லென்னுமவா நிகழ அதே அஞ்ஞானத்தை யரித்தலினு லென்று பொருளாற் பெறப்படுகின்றது. வாக்கியத்தா லுதித்த புத்தி விருத்தியி லேறிய பிரத்திய காத்மா அஞ்ஞானத்தைக் கெடுப்பது. இத ஞல் வாக்கியார்த்த ஞானத்தால் அஞ்ஞான நாசம் பிரகரணத் தின் பிரயோஜனமென்று கூறப்பட்டதாகின்றது. கூறவே மூவுல கென்றது அனர்த்தம் அதன் காரணம் ஆன்மாவின் அஞ்ஞானம், புருஷார்த்த மென்பது அஞ்ஞான நாசம் அதன் காரணம் ஆன்ம ஞானம் எனப் பொருளால் அனர்த்தம் அதனேது, புருஷார்த் தம் அதனேது ஆகிய விவைகள் வேறு லாபமாக குறிப்பிக்கப் பட்டன துதிக்கத்தக்கவரென்பதால் கூறத்தக்கவரென்பதாம். இதனுல் வேதாந்த சாஸ்திரத்திற்குப் பிரத்யகாத்மாவோடு பிரதி பாத்திய பிரதி பாதக லக்ஷண சம்பந்தமாம்; விஷயமும் அன்ய சாதாரணமாகாமையாகக் காட்டப்பட்டது. இங்ஙன மிச்செய் யுட்கு பிரகாரணாம்பத்தில் அவாவப்பட்ட விஷய சம்பந்த பிர யோஜனம் வருணிக்கப்பட்டது. இனி, பத சம்பந்தங்கூறு வாம்:—மூவுலகிறையாமரியினே வணங்குகின்றேன் என சம்பந் தம். எப்படிப்பட்டவரை யென விசேஷண வேட்கை வரமற் றைய பத மனைத்துஞ் சேர்க்கப்படுகின்றது. துதிக்கத்தக்கவர் என்பதால் வேதார்தங்களாற் பிரதிபாதிக்கத்தக்கவர் என்று அன்ய சம்பந்த நீக்கத்தால் விஷயங் கூறப்பட்டது; அங்ஙனமே வேதாந்தங்களினுற் கூறப்படுவதே என்று சேர்க்கையின்மை நீக் கஞ் சம்பந்தம் எனச் சம்பந்த நிரூபணமும் ஈண்டே காணத்தக் கது. முதிர்ந்த சத்துவம் என்ருல் உத்கிருஷ்டமான அந்தக்கர ணம்; அந்தக்கரணம் சத்துவ மிகுதியோடிருக்கையில் தத்துவ மசி வாக்கியத்தி லந்தக்கரண பரிணும வடிவஞான முதயமாகின் றது. இதனுல் சத்துவ சத்தத்தால் லக்ஷணயால் ஞானம் லக்ஷிக் கப்படுகின்றது. அவ்வந்தக் கரணபரிணும ரூபமும் சத்துவ காரியமுமாகிய ஞானம் சொரூபஞான வியாப்தமாகவுண்டாகின் றமையின் சத்துவசத்தால் லக்ஷித லக்ஷணயால் சொரூபஞானம்

லக்ஷிக்கப்படுகின்றது. அதனுல் முதிர்ந்த சத்துவமெனின் உதார சைதன்ய மென்பது பொருள் அன்மொழித்தொகையால் மேன்மையான சைதன்யர் என்பதாம். பாமேட்டி ஈட்டினன் என்பதால் பிரஹ்மா முதலானவர்களுக்கும் காரணத்தன்மையால் எல்லாவற்றினு மேன்மை' யென்பது பொருள். சர்வகாரணத்தன்மையால் சர்வோத் கிருஷ்டங் கூறப்படுமாயின் " கூடினும் விடினுந் தருமந்தருமியைக் கலக்கும்'' என்னு நியாயத்தால் விகாரமுடைமை பெறப்பட்டது. அங்ஙனமாகவே நித்திய முக்தத்தன்மை பொருந்தவில்லை யென்னுஞ் சங்கையை ஆகாய திருஷ்டாந்தத்தால் நீக்குகின்ருர் தூவுகொண்மூ வென உருவமென்பது சொரூபம்.

எங்ஙனம் ஆகாயம் மேகாதிகளிருப்பினு மின்றேனும் நிரவயவத்தன்மையால் அசங்கமாயும் நிஷ்கிரியமாயுமிருக்கின்றதோ அங்ஙனமே யிதுவுங் கிரியையின்றியதுஞ் சங்கமின்றியதுமாம் என்பது பொருள். ஆக்ஷேபம் "அது வுண்டாக்கியதுவே நுழைந்தது. வேருகக் காண்போனின்று. நீ யதுவாயிருக்கின்ருய்'' என்பது முதலிய சுருதிகளில் ஜீவபரமாத்மாக்களின் அபேதங் கேட்கப்படுகின்றமையானும் ஜீவனுங்கர்த்தா போக்தாவாயிருத்தல் பிரசித்தியாதலினுனும் மீண்டும் ஆன்மா விகாரமுடையதே யென்று சங்கித்து ஆன்மாவின் கர்த்துருத்துவம் அந்தக்கரண உபாதியாலாக்கப்பட்டதாகலின் இங்ஙனமின்றெனச் சமாதானங் கூறுகின்ருர் சிவனுயகன் என; அஞ்ஞானவஸ்தையில் ஜீவனை நியமஞ் செய்வதாக விருப்பதால் ஜீவனுயகனும். சுழற்றும் மணி போன்று முன்னிலை மாத்திரத்தால் எல்லாக் காரியகாரண சமூகத்தையு மியக்குகின்றமையின் நிர்விகாரத்தன்மை பொருத்தமுடையதென்பது பொருள். முதிர்ந்த சத்துவனை யென்றவிடத்திற் குறிப்பித்த விஞ்ஞான கனத்தன்மையினை வெளிப்படையாகக் கூறுகின்ருர் உக்கிரதவனை என. உக்கிரமெனின் அதிகம் அல்லது அடங்காமையாம் தவமெனின் ஞானமாம் இதனுல் மிகுந்த ஞானமுடையவரென்பதாம் "எவருக்கு ஞானவடிவந்தவசோ'' என்னு முண்டக சுருதியால் பிரஞ்ஞானகன ரென்

பது பொருள். இங்ஙனமாய மூவுலக நாதனுகிய அரியையெப் போதும் வணங்குகின்றேனென தெய்வ வணக்க பரமாகக் கூறப் பட்டது. இனி, குரு வணக்க பரமாக விங்ஙனமாம்:—வசிட்ட தூய் குலனே - சூத்திர கருத்தாவான வேதவியாசரும், மூவுல கிறையாமரியினே - மூவுலக நாதனுனவரியும், முதிர்ந்த சத்து வனே-மிகுந்த சத்துவ குணத்தோடுங் கூடியவரும், உக்கிரதவனே- சர்வஞ்ஞரும், மேவருஞ்சத்தி தனயனற்சுதனே - காண்டற்கரிய சத்தி முனிவரின் புத்திரரின் புத்திரரும், பரமேட்டியீட்டினனே- பிரஹ்மாவிற்குச் சமானரும், தூவுகொண் மூவில் அமலகம்புரையு முருவனே - மேக நீங்கிய வாகாயத்தைப்போல நீல வருணரும் ஆகிய வியாசபகவானே; சிந்தையிற் றினம் பணிந்திடுவாம்-மனதா லெப்போதும் வணங்குவாம். ஸ்ரீ வசிஷ்ட பகவானுடைய பரம் பரையிலுண்டானமையின் ஸ்ரீ வியாசபகவான் வசிட்டதூய்குலன் எனப்படுகின்றார். “ நாராயணன் வியாசர், நேரே சங்கரன் சங் கரர்” என்னும் புராணப் பிரசித்த வசனத்தால் மூவுலகிறையா மரியினே யென்றது வியாச பகவானே. ஏண்டு தப சென்றது ஆலோசனே வடிவஞானம். அல்லது மூவுலகிறையா மரியென் பது மட்டில் தேவதா நமஸ்காரமாகவும் மற்றையது குரு நமஸ் காரமாகவுஞ் சிலர் கூறுவர்.

(அ-கை)—இங்ஙன முதற் செய்யுளாற் பிரகரணாரம்பத்தி லபேக்ஷிக்கப்பட்ட விஷய சம்பந்த பிரயோஜனங்களைக் கூறி யிப்போது “கர்மத்தாற் சம்பாதிக்கப்பட்ட வுலகங்களைப் பிராஹ்மணன் ஆராய்ந்து வைராக்கிய மடைக செய்யப்படாதது செய்கையாலின்று அதனே யறியும் பொருட்டு அவன் சுரோத் திரியராயும் பிரஹ்ம நிஷ்டராயுமுள்ள குருவை சமித்தைக் கையிற் கொண்டவனுய்ச் சென்றடைந்தான். அந்த வித்வானுன வர் சமீபத்தில் வந்தவனும், நன்றாய்ச் சாந்த சித்தமுடையவனும் சமத்தோடுங் கூடியவனுமானவன் பொருட்டு எதனு லக்ஷரமான புருஷனே அறிவானே அந்த உண்மையான பிரஹ்ம வித்தை யைச் சத்தியமாகச் சொன்னார்” என்பன முதலிய வுபநிஷத்

வாக்கியங்களை ஆதரித்து நித்யா நித்ய விவேகாதி சாதன சதுஷ்டய சம்பன்ன பிரஹ்ம வித்தையின் அதிகாரியைக் கூறுகின்றார்.

சகல லோகமுந் தொழிலினிற் சனித்திடு மதனாற்
புகலு நாசம துறுமெனப் புந்தியூ டோர்ந்தே
யகல லாயில ததைத்தொழி லாலுற லரிதென்
றகில மீதினின் றடைந்தனன் விரத்தியை யொருவன் (2)

(ப-ரை)—ஒருவன் சகல லோகமும் - எல்லா வுலகங்களும், தொழிலினில் - கர்மத்தினால், சனித்திடுமதனால் - உண்டாகின்றமையின், புகலும் நாசமதுறுமெனப் புந்தியூடுஓர்ந்து - கூறுகின்ற வழிவை யடையுமென்று மனதா லாராய்ந்து, அகில மீதினின்று - எல்லாவற்றினின்று, விரத்தியை - வைராக்கியத்தை, அடைந்தனன் - அடைந்தான். (அ-கை) என் வைராக்கிய மடைந்தானெனிற் கூறுகின்றார். தொழிலால் - அனுஷ்டிக்கப்பட்ட கர்மத்தினால், அகல லாயிலத்தை - நாசமற்ற பலத்தை, உறல் அரிதென்று - அடையப்படமாட்டாதென்று என்பதாம்.

(ப-ம்)—புண்ணியவானான வொருவன் நான்குவித கர்மங்களாற் சம்பாதிக்கப்பட்ட எல்லா வுலகங்களையும் நாசமுடையதாக மனதா லாராய்ந்து கர்மத்தா லழிவற்ற பலம் அடையப்படமாட்டாதென்று எல்லாச் சாதன சாத்தியங்களினின்று வைராக்கியத்தை யடைந்தான் என்பது பொருள். (2)

(அ-கை)—எல்லாச் சாதன சாத்தியங்களினின்றும் வைராக்கியமடைந்த புருடன் என் செய்தானெனிற் கூறுகின்றார்.

அவிநாசி பதம்மறி வேட்கையனா யழகார்துற வாநெறி மேவினனோர், தவமாயதி யாநெறி யேயுளனாய்த் தனதுண்மை யுணர்ந்தவ னுயருநூற், கவியாகிய சற்குரு வைச்சரணா கதியாக வடைந்தெழு மன்புடனே, புவிமீது பணிந்துபணிந் தழுதேபொருதன்குறை நின்று புகன்றனனே. (3)

(ப-ரை)—அவிநாசிபதம் - நாசமற்றவான்மாவை, அறிவேட்கையனாய் - அறியுமிச்சையுடையோனாய், அழகார்துறவாம் நெறி

மேவினன் - அழகிய சன்னியாசி மார்க்கத்தை யுடையோனாய், ஓர் தவமா - ஒப்பற்ற தவ சிரேஷ்டராயும், யதியா நெறியேயுள னாய் - சன்னியாசியாயும், தனதுண்மை யுணர்ந்தவனாய் - ஆன் மாவின் சத்தியத்துவத்தை யுணர்ந்தவராயுமிருக்கின்ற, அருநூற் கவியாகிய சற்குருவை - அரிய சாஸ்திரங்களிற் பண்டிதத் தன்மை யுடைய சற்குருமூர்த்தியை, சரணாகதியாக வடைந்து - அடைக் கல ஸ்தானமாகவடைந்து, எழுமன்புடனே-உண்டாகின்ற பக்தி யோடு, புவிமீது பணிந்து பணிந்து அழுது - பூமியில் அடிக்கடி விழுந்து நமஸ்கரித்துத் துக்கிதனாய், பொருதன் குறைநின்று புகன்றனன் - வருத்துகின்ற தனது குறைவுபாடுகளைச் சன்னி தியினின்று விண்ணப்பித்தான் என்பதாம்.

(ப-ம்)—அறியப்படுதலினானும் அடையப் படுதலினாலும் ஆன்மா பதமாம். அவினாசிபதம் நாசமற்ற வான்மா. அதை யறிய குரோத முதலிய குணங்களின்றிய சன்னியாசியாய் ஆன்ம நிஷ் டருஞ் சர்வக்ஞரும் ஆகிய குருவை யடைந்து தீர்க்கமாக நமஸ் கரித்துத் தனது குறைவுபாட்டைக் கூறினான். (3)

(அ-கை)—அவனதபிமத மியாதெனிற் கூறுகின்றார்.

பகமென்ப தடைந்த பராபரனே பவமோடு மிறப் பெனு நீருளதாய்ச், சுகதுன்ப மெனுந்திரை யார்நரலைச் சுழல்வீழ்ந்து வருந்தி யிருந்தவனாய், மகியின்புறு நின்பத மேயடையோர் மருவுங்கதி யின்றிய நாயினையே, மிகுமன் பத னாலினி தாட்கொடுநீ மிளிரார்கலி நின்று மெடுத்தருளே.

(ப-ரை)—பகமென்ப தடைந்த பராபரனே - ஷட்குண ஐசு வர்ய சம்பன்னரே! மேலுக்கெல்லாம் மேலானவரே !, பவமோடு மிறப்பெனு நீருளதாய் - பிறப்பிறப்பென்னு நீருடைத்தாய், சுக துன்பமெனும் திரையார் - சுகதுக்கமென்னு மலையுடைய, நரலைச் சுழல் வீழ்ந்து - சுழலுஞ் சம்சாரக்கடலில் விழுந்து, வருந்தியிருந் தவனாய் - நான் வருந்துகின்றவனாயும், மகியின்புறும் நின்பதமே யடை - உலகிற் கானந்தத்தை யுண்டாக்குந் தேவரீர் திருவடித் தாமரைகளை யடைந்தோனாயும் இருக்கின்ற, ஓர் மருவுங்கதியின்

றிய நாயினை - வேறு புகலிடமின்றிய நாயடியேனை, மிகும் அன்பதனுல் - அபார கருணையால், நீ - தேவரீர், இனிது ஆட்கொடு - பிரியத்தோடு அடிமைகொண்டு, மிளிர் ஆர்கலிநின்றும் எடுத்தருள் - விளங்குகின்ற சம்சாரசாகரத்தினின்றுங் கரையேற்றி யருள்வீராகவும் என்பதாம்.

(ப-ம்)—ஏ பகவானே அநேக குற்றமுற்ற சமுசாரசமுத்திரத்தில் விழுந்தநான் தங்களையே துணையாக வடைந்தேனுகவின், கருணையால் இச் சமுசாரத்தினின்றுங் கரையேற்ற வேண்டும். (4)

(அ-கை)—இங்ஙனஞ் சீடன் கருத்துணர்ந்த குரு அவனுக்குக் கட்டளை யிடுகின்ருர்.

விடம மாம்விட யந்தனின் வேட்கையை விடுத்தே
யுடலை யானென னுமுளமொழித் துயர்பர வொளியிற்
றிடம தாய்நிட்டை யடைந்தனு தினம்பர மான்ம
நெடுவிஞ்ஞானங் கொண்டவித்தைகா ரியமய னீப்பாய். (5)

(ப-ரை)—விடமமாம் - உயர்வு தாழ்வான, விடயந்தனின் வேட்கையை விடுத்து - விடயத்துள்ள ஆசையைவிட்டு, உடலை நானெனுமுள மொழித்து - தேகோகமென்னும் புத்தியை யொழித்து, உயர்பர வொளியில் - மேன்மையான பரமான்மாவில், நிட்டை அடைந்து - நிலைத்து, அனுதினம் - எப்போதும், பரமான்ம நெடுவிஞ் ஞானங்கொண்டு - பரமான்மாவின் நிலைத்த ஞானத்தினுல், அவித்தை காரியமயல் நீப்பாய் - அஞ்ஞான காரியமாய் உடலியானென்ன நின்ற மயலை யொழிப்பாய் என்பதாம்.

(ப-ம்)—எப்போதும் ஆன்மாகாரமாகத் தொடர்ந்த விருத்தியை யுடையவனுய்ச் சிரவண மனன நிதித்தியாசன நிஷ்டனு யிருப்பாயாக. மற்றும் ஆன்ம ஞானத்தினுல் மோகமாயும், அவித்தியா காரியமாயும், தேகேந்திரியாதிகளில் ஆன்மபுத்தியாயுமிருக்கின்றபிராந்தியை நீக்கிவிடு. (5)

(அ-கை)—கூறிப்போந்த பொருளை விரித்துரைக்கின்ருர்

பஞ்ச கோசத்தில் யானெ னதென்னவே படரு
நெஞ்சை நீத்தெந்த ஞான்று நிர்க் குண வறி வுருவாய்
நெஞ்சி லேயிலங் கனந்தசத் தியவொரு நிறைவை
யஞ்சி டாதன வரதமு மகமென வறிநீ (6)

(ப-ரை)—பஞ்ச கோசத்தில் - அன்னமய முதலியவைந்து கோசங்களில், யானென தென்னவே படரும் - நானென்றும் என்ன தென்றும் விரியும், நெஞ்சை நீத்து - புத்தியைக்கெடுத்து எஞ்ஞான்றும் - எப்போதும், நிர்க்குண அறிவுருவாய் - நிர்க்குண மாயும் ஞானவடிவாயும், நெஞ்சிலே யிலங்கு அனந்த சத்திய ஒரு நிறைவை - இருதயத்தில் விளங்குவதும் அந்த மற்றதும் நித்திய மானதும் ஆன ஒப்பற்ற பூரணவான்மாவை, நீ, அஞ்சிடாது - சோர்வின்றி, அனவரதம் - எப்போதும், அகமெனவறி- நானென்று அறிவாயாக வென்பதாம்.

(ப-ம்)—அன்ன மயாதியாயும் ஆன்ம பரிச்சின்னவேது வாயும் இருக்கின்ற வைந்து கோசங்களில் யானென தென்னும் புத்தியைவிட்டு, ஞானவடிவாயும் தேசகால வஸ்து பரிச்சேத மற்றதும் பிராகபாவ முதலியதின் றியதும் சத்துவாதி குண மின்றியதும் புத்திசாக்ஷியாயுமிருக்கின்ற பிரஹ்மத்தை நானென்று அறிவாயாக "சத்தியம் ஞானம் அனந்தம் பிரஹ்மம் ஆனந்தம் பிரஹ்ம மென்றறியவேண்டும். ஆனந்தம் ஆத்மா. இவ்வான்மா பிரஹ்மம். சாக்ஷியும் ஞானமும் கேவலமும்" என்னு மிவை முதலிய சுருதிகளால் நானே பிரஹ்மமாயிருக்கின்றே னென வறிவாயாக. (6)

(அ-கை)—ஆக்ஷேபம் சாக்ஷியந்த மற்றதெனப் பிரஹ்மத்திற்குக் கூறப்பட்ட அந்த மின்மை பொருந்தாது. எனெனின், பிரஹ்மம் ஆன்மாவாதலினனும் ஆன்மாவுஞ் சரீரந்தோறும் ஜன்ம மரணமாகிய நியமலிங்கத்தால் அனுமிக்கப்பட்ட பேத முடையதாலுமாம். உலகத்திலும் நீ நானென்னும் பேதப் பிரசித்தியாலும், பேதமுடையதா யிருத்தலால் என்று சங்கித்து நியமலிங்கம் வியதிகரண அசித்தியினலும் (சபக்ஷத்திலின்மை)

ஆமக விருத்தமாதலினாலும் கூடாதென வபிப்பிராயங்கொண்டு உலகப்பிரசித்த பேதம் பிராந்தி மாத்திரம் என விரண்டு திருஷ்டாந்தங்களாற் கூறுகின்றார்.

நீர்பேதம் பன்மையினை யினன்றனக்கு நிகழ்த்தியிடு நீர்மை போலு, மார்குடங்க ளாதிபன்மை யம்பரத்திற் காற்றியிடு மதனைப் போலுஞ், சீர்சருவ காலமவி கார மெனச் செறிநினது மதிச்சான் றிற்கே, யேர்மதியின் பேதமது பன்மையினை யியற்றுமென விதயத் தோர்வாய்

(ப-ரை)—இனன்றனக்கு - சூரியனுக்கு, நீர் பேதம் - வாவி கூப தடாகாதி தண்ணீரின் பேதம், பன்மையினை - நாநாத்துவத்தை, நிகழ்த்தியிடும் நீர்மைபோலும் - உண்டாக்குந்தன்மைபோலும், அம்பரத்திற்கு - ஆகாயத்திற்கு, ஆர்குடங்களாதி- மண்ணாற் பொருந்திய குட முதலியவை, பன்மை - நாநாத்துவத்தை, ஆற்றியிடும் அதனைப்போலும் - உண்டாக்குவதைப் போலும், ஏர்மதியின் பேதமது - உபாதியர்கப்பொருந்திய அந்தக்கரண வேற்றுமையானது, சீர் - சிறப்பாய், சருவ காலம்- எப்போதும், அவிகாரமென - விகாரமின்றி, செறி நினது மதிச்சான்றிற்கு - பொருந்திய வுனது புத்திசாக்ஷியான ஆன்மாவிற்கு - பன்மையினை, நாநாத்துவத்தை - இயற்றுமென - உண்டாக்குமென்று, இதயத்தோர் வாய் கருதிக்கொள்வாயாக வென்பது.

(ப-ம்)—ஒரே சூரியன் நீரின் பேதத்தால் நாநாவாவதுபோலும் ஒரே ஆகாயங் கடாதிகளின் பேதத்தால் நாநாவாவது போலும் உன் புத்திசாக்ஷியாகிய விகாரமற்ற வான்மாவும் புத்தியின் நாநாத்தன்மையால் பேதமுடையதாகத் தோன்றுகின்றது. "ஒரே தேவன் எல்லாப் பூதங்களிலும் ரகசியன் சர்வ வியாபி சர்வ பூதத்திற்கு மந்தராத்மா. கர்மத்தைக்காண்போன் சர்வ பூதத்திலும் வசிப்பவன் சாக்ஷியும் சேதனமும் கேவலமும் நிர்க்குணமும் ஒருவராயிருந்து நாநாவாகச்சரித்தார். ஒன்றாயிருப்பவரை நாநாவாகக் கற்பிக்கின்றார்கள். ஒன்றாகவே பார்க்க

வேண்டும். ஈண்டு நாநாவற்பமுமின்று. ஒன்றே அத்வைதம் ஒரே பூதாத்மா எல்லாப்பூதங்களிலும் நிலைத்திருக்கின்றார். ஒன்றாகவும் நாநாவாகவும் காணப்படுகின்றார். ஜலசந்திரன்போன்று வேறு பிரிக்கப்படாதது பூதங்களில் வேறு பிரிக்கப்பட்டது போன்றிருக்கின்றது" என்பது முதலிய சுருதி ஸ்மிருதிகளால் ஆன்மா வொன்றெனக் கூறப்பட்டிருத்தலின் கூறிய அனந்தம் பொருந்தியது (7)

(அ-கை)—ஆக்ஷேபம் அங்ஙனமாயினும் ஆன்மா சம்சாரி யாதலினால் எங்ஙனம் பிரஹ்மமாத லென்று சங்கித்துச் சகல சம்சார தர்மத்தோடுங் கூடின. அந்தக்கரண வுபாதியாலாக் கப்பட்டமையின் ஆன்மா சம்சாரி போன்றிருக்கின்றது. உண்மையில் அசம்சாரியே யெனக் கூறுகின்றார்.

சூரிய னொளியை யொப்பச் சுயம்பிர காச மாகி
யேரவி காரி யாகி யிருக்குமுன் னாலெஞ் ஞான்றுஞ்
சீருல கினர்தஞ் சித்த சரிதத்தைத் தெரித லாலே
யாரசம் சாரி யென்றே யறிகுதி மைந்த னேநீ. (8)

(ப-ரை)—சூரிய னொளியை யொப்ப - சூரியப் பிரகாசம் போன்று, சுயம் பிரகாசமாகி - தானே விளங்குகின்ற, ஏர் அவிகாரியாக இருக்கும் உன்னால் - பொருந்திய விகாரமின்றி யிருக்குமுன்னால், சீர் உலகினர்தம் - சிறந்த வுலகத்தவரது, சித்த சரிதம் - புத்தியின் சஞ்சாரம், எஞ்ஞான்றும் - எப்போதும், தெரிதலால் - அறியப்படுகின்றமையின், ஆர் அசம்சாரியென்று - பொருந்திய சம்சார மின்றியவனென்று, மைந்தனே - சீடனே!, நீ அறிகுதி - நீ யறிவாயாக வென்பதாம்.

(ப-ம்)—எல்லா விஷயங்களையும் ஒரேகாலத்தில் விளக்குகின்ற சூரியப் பிரகாசம்போன்று சுயம் பிரகாசமாய் விகாரமின்றிய வுன்னால் பிராணிகளின் புத்தி சஞ்சாரமனைத்தும் அறியப்படுகின்றதால் ஆன்மாவான வுனக்குப் பந்தமின்று. (8)

(அ-கை)—ஆக்ஷேபம் ஆனால் ஆன்மாவிகாரமின்றியதெனின் இச்சரீரத்தில் பரிணாமி யார்? புத்தியே பரிணாமி ஆன்மாவன்

றெனின் அது வெக்காரணத்தாலெனின் கூறுகின்றூர். அல்லது, ஆன்மா சுயம்பிரகாசமானதால் தன் விஷயராகாதியை விளக்கும் பொருட்டு எங்ஙனம் பரிணமமடைவதின்றே அங்ஙனமே புத்தியும் பிரகாச வியல்புடையதாதலின் தன் விஷய சத்தாதியை விளக்கும் பொருட்டு ஆன்மாவைப்போலும் தீபத்தைப்போலும் பரிணம மடைவதின்றெ றன வாசங்கித்துக் கூறுகின்றூர்.

விடயங்க ளவற்றூற் புந்தி விரும்பியே யுபரா கத்தை
விடயநிச் சயத்தை யாற்றி விளக்கிடு மதனு லேயே
விடயங்கண் மதியி னுக்கு விளங்கிடும் விளங்கா வாகு
மடர்பரி ணமி யாகு மாதலாற் புந்தி மைந்தா. (9)

(ப-ரை)—புந்தி - புத்தி, விடயங்களவற்றூல் - விடயங்களோடு, உபராகத்தை - சம்பந்தத்தை, விரும்பி - அபேக்ஷித்து, விடயநிச்சயத்தை ஆற்றி - விடய நிச்சயஞ்செய்து, விளக்கிடும் - பிரகாசிப்பிக்கும், அதனுல், விடயங்கள் - பொருள்கள், மதியினுக்கு - புத்திக்கு, விளங்கிடும் - சில விளங்குவனவாம், விளங்காவாகும் - சில விளங்காதனவாம், ஆதலால் மைந்தா! - சீடனே!, புந்தி - புத்தி, அடர் பரிணமியாகும் - மிகுந்த பரிணமமுடையதாம் என்பதாம்.

(ப-ம்)—ஓர் பதார்த்தம் மற்றேர் பதார்த்த வடிவாகப் பொருந்துதல் உபராகமாம். அதுவும் சிலவிடத்தில் ஞேயத்திற்கு வேறு ஞேயத்தோடு வுண்டாகின்றது. எங்ஙனம் படிகத்திற்கு ஜபாகுசுமத்தோடுபோலவும். சிலவிடத்தில் ஞாதாவிற்கு ஞேயத்தோடு உண்டாகின்றது. எங்ஙனம் சாக்ஷிக்கு சாக்ஷியத்தோடு உண்டாகின்றதுபோல, புத்திக்கு அறியத்தக்க பொருட்கூட்டத்தோடு முண்டாகின்றது. ஆண்டு சாக்ஷிசாக்ஷியத்தி னுபராகத்தை யபேக்ஷித்து வேறென்றூல் சாக்ஷியத்தின் நிச்சயஞ் செய்கின்றதின்று. மற்று யாதெனின் சாக்ஷி சுயம் பிரகாசமாதலின் சாக்ஷியத்தி னுபராக மாத்திரத்தால் சாக்ஷியத்தின் சாதக்முண்டாகின்றது. புத்தியோ அறியத்தக்கதின் உபராக மாத்திரத்தால் அதைச் சாதிப்பதின்று மற்று யாதெனின் அறியத்தக்கதின்

உபராகத்தை யபேக்ஷித்தலினாலும், சைதன்ய பலத்தைப் பற்று தலினாலும் சத்த முதலிய பொருள்களின் விளக்கத்தை யுண்டாக்குகின்றது. புத்திக்கு அறியப்படும் பதார்த்தத்தோடுண்டா மவ்வுபராகமும் கிரமமாகவும் சில பொருள்களோடு முண்டாகின்றது. அதுவும் சில விஷயங்களின் விளக்கமாகிய காரியத்தால் கருதத்தக்கது. சில விஷயங்களோடு உண்டா முபராகமும் புத்தியின் பரிணாமமின்றிப் பொருந்துவதின்று. இங்ஙனமாகவே புத்தி கிரமமாக விஷயங்களோடு பரிணாமமாகிய வுபராகத்தை யபேக்ஷித்து விஷய நிச்சயஞ் செய்கின்றது. ஆகையால் விடயங்கள் சில அறியப்பட்டனவாகவும் அறியப்படாதனவாகவும் இருக்கின்றன. இதனாற் புத்தியே பரிணாமமுடையது ஆன்மா வன்று. (9)

(அ-கை)—ஆக்ஷேபம் புத்தியைப்போன்று ஆன்மாவும் கிரமமாகக் காணும் லிங்கத்தால் தனது விஷயமான புத்தி முதலியவற்றை விளக்கும்பொருட்டுக் கிரமமாகப் பரிணாமம் அனுமானிக்கத் தக்கதாம் என்றாசங்கித்து புத்தி யதன் விருத்தி ஆகிய இவைகளை ஒரேகாலத்தில் ஆன்மா விளக்குகின்றமையின் இங்ஙனமின்றெனக் கூறுகின்றார்.

மதிவி ருத்திகள் சந்தத மலருந்தன் னொளியா
லதனி னாலவி காரியிவ் வான்மநல் லொளியும்
விதமு றும்பரி ணாமிய தாகுமேல் விரியிம்
மதிவி ருத்திகண் ஞாதவஞ் ஞாதமாய் மலரும். (10)

(பதை-ர)—தன்னொளியால் - ஆன்மப் பிரகாசத்தால், மதிவிருத்திகள் - புத்திவிருத்திகள், சந்ததம் - எப்போதும், அலரும் - விளங்குகின்றன, அதனினால் - அவ்வேதுவாய், இவ்வான்மநல்லொளியும் - பிரகாசவடிவ வபரோக்ஷவான்மாவும், அவிகாரி-விகாரமின்றியதாம், விதமுறும் - நாநாவிதத்தோடுங்கூடின - பரிணாமி அது ஆகுமேல் பரிணாமமுடையதாக அவ்வான்மாவாகுமேல், விரி-விரிந்த, இம்மதி விருத்திகள் - இந்தப் புத்திவிருத்திகள், ஞாதவஞ்ஞாதமாய் மலரும் - அறியப்பட்டனவாகவும் அறியப்படாதனவாகவும் விளங்கும் என்பதாம்.

(ப-ம்)—சித்ருபவான்மா புத்திவிருத்திகளை யெல்லாம் எப்போது மறிகின்றதாகலின் விகார முதலிய பரிணமமற்றதாம் பரிணமமுடையதேல் புத்தி விருத்திகள் அறியப்பட்டனவாகவும் அறியப்படாதனவாகவும் ஆகும். அது பொருந்தாது. ஏனெனின், எல்லாப் புத்திவிருத்திகளையும் ஆன்மா வொரே காலத்தில் விளக்குகின்றது. (10)

(அ-கை)—ஆன்மா பரிணமமுடையதேல் அறியப்பட்ட அறியப்படாத பிரசங்கத்தாற் ஜேடங் கூறப்பட்டது. ஆண்டிவ்வா சங்கையாம் இஃதெங்களுக்குத் தோடமின்று அங்ஙனமே காணப்படுகின்றமையின் எனிற் கூறுகின்றார்.

பரிசுத்த வறிவா முன்னாற் பகலிர வுளத்திற் பாயுஞ்
சரிதங்க ளெவையுங் காணுந் தகைமையா மதனி னுனே
யெரிபுத்திப் பகுப்ப தான வியல்புனக் கிலதெப் போது
முரமந்த வேது வாலே யொப்பிலா யுளத்தி னேடே (11)

(ப-ரை)--பரிசுத்தவறிவா முன்னால் - களங்கமின்றிய சித்துவடிவ ஆன்மாவான வுன்னால், பகல் இரவு உளத்தில் பாயும் சரிதங்கள் எவையும் - எப்போதும் புத்தியின் சஞ்சார மனைத்தும், காணுந்தகைமையாம் - அறியப்படுவனவாம், அதனினுல் - அவ்வேதுவால், உனக்கு எரிபுத்திப்பகுப்பதான வியல்பு - பிரபையுடைய புத்தியின் வேறுபாடான தன்மை, எப்போதும் இலது ஒருபோதுமின்று, உரம் அந்த ஏதுவாலே - நிச்சயமான அக்காரணத்தால் உளத்தினேடு - புத்தியோடு, ஒப்பிலாய் நீசமமற்றவன்.

(ப-ம்)—அசங்க சித்ருபவான்மாவான வுன்னுல் புத்தி சஞ்சாரப் பிரகாரம் யாண்டு மறியப்படுகின்றமையின் புத்தியின் பேதகுணமான பரிணமித்தன்மை உனக்கின்று. இதனுற் புத்தியே பரிணமியாதலின் ஆன்மா புத்தியின் வேறென்பது பொருள். (11)

(அ-கை)—ஆக்ஷேபம் புத்தியே அறிவதும் அறியப்படுவதுமாயிருத்தலின் ஆன்மா புத்தியின் வேறென்றது பொருத்தமின்

றியது. ஆகையால் புத்தியை யறிய காரணமான சிதாத்துமா புத்திக்கு வேருக வின்றெனை புத்தமதானுசாரிகளால் அங்கீகரிக் கப்பட்டிருத்தலின் என்ரு சங்கித்துக் கூறுகின்ருர்.

விடயமது தமின்விடயத் தன்மையது மெவ்வகையால் வெளிய தாகுந், திடமதிக டமின்மாட்டு மையமின்றித் திருசியத்வஞ் சித்த மாகு, நெடியவிது வெதனுலிங் கத னுனே நிகழ்மதியின் விருத்தி யாவும், படர்விடயத் தன்மை யதாற் குடமாதி கடுப்பப்பர விடய மாமே. (12)

(ப-ரை)—விடயமதுதமின் - விடயங்களில், விடயத்தன் மையதும் - திருசியத்வமும், எவ்வகை - எங்ஙனம், வெளிய தாகும் - வெளிப்படையோ, திடமதிகள் தமின் மாட்டும் - அங் ஙனம் திடமான் புத்திகளிடத்திலும், ஐயமின்றி - சந்தேகமின்றி, திருசியத்வம் - திருஷ்டாவாலறியப்படுந் தன்மை, சித்தமாகும்- வெளிப்படையாம், இங்கு - ஈண்டு, நெடியவிது - நீடித்தவிது, எதனுல் - எவ்வேதுவாலோ, அதனுனே - அத்திருசியத்தன்மை யானே, நிகழ்மதியின் விருத்தியாவும் - விளங்குகின்ற புத்தி விருத்தியனைத்தும், படர் விடயத்தன்மையதால் - விரிந்த விட யமாந் தன்மையாயிருத்தலால், குடமாதிகடுப்ப - கடாதிகளைப் போன்று, பரவிடயமாம் - வேருென்ரு லறியப்பட்டவைகளே யாம்.

(ப-ம்)—சௌத்ராந்திகன், வைபாஷிகன், யோகாசாரன் மாத்தியமிகன் ஆகிய இப்பவுத்தருள் சௌத்ராந்திகனுல் "கிர கிப்பது கிரகிக்கப்படுவது என்னும் புத்திபேதமுடையதைப் போற் குறிக்கப்படுகின்றது" என்ற விப்புத்தர் வாக்கியத்தில் புத்தியே கிரகிப்பதுங் கிரகிக்கப்படுவதுமென் றங்கீகரித்திருக் கின்றமையின் சம்சய மின்றிப் புத்திகளில் திருசியத் தன்மை மிக வெளிப்படையாம். கட முதலிய விடயங்கள் ஜடமாகை யாற் றிருசியமென்று வாதிப் பிரதிவாதிகளுக்குச் சம்மதம் போன்று உன் மதத்திலும் திருசியத் தன்மையாகி திருஷ்டா வால் வியாபிக்கப்படல் அவ்விரண்டு வாதிகளுக்குஞ் சம்மதம்.

புத்தி திருசியமென வுபயவாதி சம்மதமாதலின் அதன் வேறான சாக்ஷியினால் நன்றாக அறியப்பட்டது திருசியமாதலின் கடாதி போன்று என்பது பொருள். (12)

(அ-கை)—அங்ஙனமாங் கால்புத்திகள் தங்களாலும் அன்னியத்தாலும் அறியப்படுவன வாகுக; விரோதமின்மையா லென்று சங்கித்துக் கூறுகின்றார்.

அன்னியமா மதனினா லனவரத மெதனினா லறிவதாகுந், தன்னியல்பை யதனினா லறியாத தன்மையதிவ் விடயம் யாது, மின்னவகை யன்னியத்தா லிவ்வுளங்க ளிலங்கியிடு மியல்பி னாலே, தன்னியல்பை யறியாத தன்மையதாஞ் சகவிடய மவைகள் போன்றே. (13)

(ப-ரை)—இவ்விடயம் யாதும் - இந்த விடயங்களெல்லாம், அனவரதம் - எப்போதும், அன்னியமா மதனினால் - தமக்கு வேறாகிய புத்தியினால், எதனினால் - எவ்வேதுவால், அறிவதாகும் - அறியப்படுவனவாகுமோ, அதனினால் - அவ்வேதுவால், தன்னியல்பை-தமது தன்மையை, அறியாத தன்மையது-அறியுமியல்பின்றியன, இன்னவகை - இங்ஙனம், இவ்வுளங்கள்-இந்தப் புத்திகள், அன்னியத்தால் - தமக்கு வேறாகிய ஆன்மாவால், இலங்கியிடும் இயல்பினாலே - விளங்குந் தன்மையினானே, தன்னியல்பை யறியாத தன்மையதாம் - தமது தர்மத்தை யுணராதனவாம், சகவிடய மவைகள்போன்று - உலகவிடயங்கள் போன்று.

(ப-ம்)—கடாதி விடயங்கள் அன்னியனா லறியப்படுவனவாய்த் தங்களால் தங்களை யறியாதனபோன்று புத்திகளும் தங்களுக் கன்னிய சாக்ஷியினா லறியப்படுவனவாய்த் தாங்கள் தங்களை அறிவனவன்று. ஏனெனின், கடாதி விடயங்கள் காண்பதும் காணப்படுவதுந் தாமேயாகில் கர்ம கருத்ருபாவ விரோதமாம் அங்ஙனமே ஈண்டும் விரோதமாம். புத்தி, யதன் விருத்திகளும் கட முதலியன போன்று அறியப்படுவனவாதலின் வேறான. சாக்ஷி யங்கீகரிக்க வேண்டியது வேண்டவே புத்தி சாக்ஷியும் ஞானவடிவமும் பரிச்சேதமற்றதும் சத்தியமும் குணமற்றதும் ஹிருதயத்

துள்ளதும் ஆன வான்மாவை பிரஹ்மமா யிருக்கின்றேனென்று அறியென முன்னதனோடு சம்பந்தமென்பது பொருள். (13)

(அ-கை)—ஆக்ஷேபம் பிரஹ்மம் ஆன்மாவாதலினாலும், ஆன்மா வகங்கார குணமுடைய தாதலினாலும் பிரஹ்மம் நிர்க்குணமென்னுங் கூற்றுப் பொருத்தமின்றியதாமென வாசங்கித்து அகங்காரம் புத்தியின் பரிணாமமாதலி னங்ஙனமின்றெனக்கூற, புத்திக்கு இரண்டு விருத்திகளைக் கூறுகின்றார்.

அனவரதம் விவகார தசையதனில் விடயவா காரமாகி, மனும்விருத்தி யொருவகையாய் மனந்தனக்கு மருவுமதை விடய மாக்கி, நனியகமென் றுன்னுமற்ற விதமாயும் விருத்தியொன்று நணுக லாகுந், தனதொளி யிலிலங்கலான் மதிதருமந் தனக்கிலையென் றுளத்தி லோர்வாய். (14)

(ப-ரை)—மனந் தனக்கு - புத்திக்கு, அனவரதம் - எப்போதும், விவகார தசையதனில் - விவகார காலத்தில், விடய வாகாரமாகி - திருசி யாகாரமாய், விருத்தி - எண்ணம், ஓர் வகையாய் - ஒரு பிரிவாய், மனும் - பொருந்தும், மருவுமதை - பொருந்திய வ்விட யாகார விருத்தியை, விடயமாக்கி - திருசியமாக்கி, விருத்தி யொன்று - ஓர் எண்ணம், நனியகமென் றுன்னும் - மிகவும் நானெனக் கருதுவதாய், மற்ற விதமாய் - வேறோர் பிரிவாய், நணுகலாகும் - பொருந்துவதாகும், மதிதருமம் - புத்தி தருமமான இவ்விருவகை விருத்திகளும், தனதொளியி லிலங்கலான் - ஆன்ம விளக்கத்தால் விளங்கப்படுவனவாகலின், தனக்கிலையென் றுளத்தி லோர்வாய்-அறியுமான்மாவான வெனக்கித் தருமமின்றென மனதில் நிச்சயிப்பாயாக.

(ப-ம்)—வியவகார தசையில் எக்காலத்தும் புத்திக் கிரண்டுவித விருத்திகளுண்டு. அதிலொரு விதம் திருசிய கடாதி யாகாரமாயிருக்கும் மற்றையது அவ்விருத்தியை விடயம் பண்ணுவதாக கடத்தைக் காண்கின்றேனெனக் காண்போ னாகாரமாயுளது. இவ்விரண்டுவித விருத்திகளும் சித்வடிவ வான்மாவால் அறியப்

படுதலின் புத்தியின் தர்மங்களே ஆன்மாவின் தருமமன் றென் பது பொருள். (14)

(அ-கை)—அங்ஙனமாமேல் அகங்காரம் ஆன்மாவின் தரும மாக விளங்குதல் எங்ஙனங் கூடுமெனின், அத்தியாசத்தாற் கூடு மெனக் கூறுகின்றார்.

தனதி னியல்பான் மனத்தினுடைத் தனது குணமாயி னும் புருடன், றனது தரும மெனப்பிறங்கு மெதனு லத னுற் றுனுனென், மனதின் விருத்தி யிது தனையே மடமை மிகுத்த மகியோர்கள், பினம தில்லா வான்மகுண மெனவே பிறழ்ந்திங் கறிகுவரால். (15)

(ப-ரை)—தனதின் இயல்பால் - நானென்னும் விருத்தி இயல்பாக, மனதினுடைத்தனது குணமாயினும் - புத்தியின் சொந்த குணமேனும், புருடன்றனது - புருடனது, தருமமென, தருமம் போன்று, பிறங்கும் - விளங்கும், எதனுலதனுல் தான் - எவ்வேது வானிங்ஙனம் விளங்குகின்றதோ அவ்வேதுவானே - நானென் - அகமென் றெழாநின்ற, மனதின் விருத்தியிதுதனே யே - இந்தப் புத்திவிருத்தியையே, மடமை மிகுத்த மகியோர் கள் - இப்புவியிலுள்ள அறிவீனர்கள், பினமதில்லா - வேறு படாத, ஆன்மகுணமென - ஆன்மாவின் குணமென்று, பிறழ்ந் திங்கறிகுவர் - விபரீதமாய்ச் சம்சாரத்தில் அறிவார்கள்.

(ப-ம்)—அகங்காரம் இயல்பாகப் புத்தியின் குணமேனும் அவிவேகத்தினுல் ஆன்மாவின் குணம் போன்று விளங்குகின்றது. அதனுல் அவிவேகி ஜனம் ஆன்மகுணமாக வறிகின்றதேனும் விவேகிஜனம் அங்ஙனமறிகின்றதின் றென்பது பொருள். (15)

(அ-கை)—அகங்காரமான் மதர்மமாகாதாயின் அக்கால் அவ் வகங்காரமுண்டாகா திருத்தலே நலம் என்றுல் அங்குக் கூறு கின்றார்.

உலகினர் தமைமோ கிக்கு முயரதுற் பவித்தி டாதே
யுலகரித் தொழில்க ளொன்று மனுபவித் திடலொ ணுதே
யிலகது வான்ம தன்ம மெனக்கொள லிலதெஞ் ஞான்று
பலவிட யானுபோகப் பயனில தாமக் காலே. (16)

(ப-ரை)—உலகினர்தமை மோகிக்கும் - ஜனங்களை மயக்கஞ் செய்வதான, உயர் அது உற்பவித்திடாதேல் - விவகார மேன்மையதான அவ்வகங்காரம் உண்டாகாதாயின், உலகர் - உலகத்தார், இத்தொழிகள் ஒன்றும் - ஸ்நானபோஜன முதலிய வித்தொழில்களொன்றேனும், அனுபவித்திடல் - அனுபவித்தலானது, ஒணுது - பொருந்தாது, இலகது - விளங்குகின்றவவ்வகங்காரம், எஞ்ஞான்று - எக்கால், ஆன்மதன்மமெனக் கொளலிலது, ஆன்மாவின் தர்மமென வறிதலின்ருே, அக்கால்-அஞ்ஞான்று, பல விடயானு போகப்பயனில்தாம் - பல விடயங்களை யனுபவிக்கும் பல மின்றியதாகும்.

(ப-ம்)—தேவதைகளையும் மயக்கும் அவ்வகங்கார விருத்தியுண்டாகாதேல் நான் செய்கின்றேன் நான் அறிகின்றேன் என்பது முதலிய விவகார மார்க்கத்தை ஜனம் அனுபவிக்காது. ஆகையால் அகம் விருத்தியுண்டாதல் அவசியமாம். அத்தியாசத்தால் அகம் விருத்தி ஆன்மகுணமாக அனுபவிக்கப் படாதேல் விஷயானுபவம் பொருந்தாது. எனெனின் "ஆன்மாவின் காமத்தின் பொருட்டு எல்லாம் பிரியமுடையதாகின்றது. அரசம் பழத்தை நன்ருய்ப் புசிக்கின்றது. நிர்க்குணம் குணத்தை யனுபவிப்பது" என்னு மிவை முதலிய சுருதியான் ஆன்மா விவகாரதசையால் விஷயானுபவமுடைய தென்னும் வெளிப்படை வீணுகும். ஆகையால்' அத்தியாச வழியாக விவகார காலத்தில் அகங்காரம் ஆன்ம தர்மமென வங்கீகரிக்கவேண்டு மென்பது பொருள். (16)

(அ-கை)—விபக்ஷத்தில் (ஆன்மாவின் குணமன்று என்பதில்) தோஷங் கூறுபவராய்க் கூறிப்போந்த பொருளைப் பின்னிரண்டு செய்யுட்களால் விரிக்கின்ருர்.

மனந்தனக்கு விடயவுரு விருத்தியொரு விதமாயே மருவு மாயி, னுனுங்குடங்கண் முதலியன வொப்பாகு முளவிருத்தி யதனை நாடிப், பனும்புருடன் றனதுணர்வும் பரிணும மதுதனையேபற்ருதா யின், மனுங்குடங்க ளாதிய போல் விருத்தியதே மருவுமென மதித் திடாயே. (17)

(ப-ரை)—மனந்தனக்கு - மனதிற்கு, விடயவுருவிருத்தி- விடயாகாரமான விருத்தி, ஒருவிதமாய் - ஒரே விதமாகவே, மருவுமாயின் - பொருந்துமாயினும், உனுங்குடங்கள் முதலி யன - கருதுங்குட முதலியவற்றின், ஒப்பாகும் - சமானுகார மாகும், உளவிருத்தியதனைநாடி - மனதின் விருத்தியை விடய மாக்கி, பனும்புருடன் றனதுணர்வும் - சொல்லாநின்ற திருஷ் டாவினு காரஞானமான, பரிணுமமது தனையேபற்ருதாயின் - பரிணுமத்தை யடையாதாயினும், மனுங்குடங்களாதியபோல்- பொருந்திய திருசிய குடமுதலியவைபோன்று, விருத்தியதே- திருசிய விருத்தியே, மருவுமென மதித்திடாய் - ஒரே விதமாய மரும் என கருதுவாயாக.

(ப-ம்)—மனதிற்கு விடயாகார விருத்தி யொன்றே யுண்டாயினும் கடாகார புத்தி விருத்தியை யபேக்ஷித்து அத்தி யாசத்தினுல் ஆன்மாவான திருஷ்டாவினுகார பரிணுமமங்கீகரிக் கப்படுவதின் ருயினும் அக்கால் திருசியாகார விருத்தி யொன்றே யுண்டாம் திருஷ்டா வினுகார விருத்தியே யுண்டாகாது. (17)

(அ-கை)—ஆக்ஷேபம் அங்ஙனமே யாகுக எங்களுக்கு யாது கெடுதி யெனிற் கூறுகின்ருர்.

அறிவானு மறிபொருளு மாகியநல் லான்மாவும் புந்தி தானுஞ், செறியானென் னபிமான மதுவாத விலதாகித் திதிய தாங்காற், றிறமான வபிமான வழித்தாய விவகாரந் திகழ்வ தான, நெறியீதை யொருஞான்று முலகிலுள நிகிலருமே மருவி டாரே. (18)

(ப-ரை)—அறிவானும் அறிபொருளும் - திருஷ்டாவும் திரு சியமுமாகிய, நல்ல ஆன்மாவும் புந்திதானும் - ஆனந்தவடிவ வான்மாவும் புத்தியும், செறி - பொருந்திய, யான் என்ன - நான்

என்று, அபிமான மதுவாதல் இலதாகி - அபிமான மற்றதாய், திதியதாங்கால் - நிலைபெறுமாயின், திகழ்வதான - விளங்குகின்ற, திறமான - திடமான, அபிமான வழித்தாய விவகாரம் - அபிமானத்தை முன்னிட்ட விவகாரமான, நெறியீதை-இம்மார்க்கத்தை, உலகிலுள நிகிலருமே - உலகத்தவ ரனைவரும், ஒரு ஞான்றும் - ஒருபோதும், மருவிடார் - பொருந்திடார்.

(ப-ம்)—காண்பதாயும் காணப்படுவதாயுமுள்ள சிதாத்மா புத்தி ஆகிய விவைகள் நானென்ற திருஷ்டாவி ஞகார பரிணமமின்றிய தாகுங்கால் நானறிகின்றேன் நான் செய்கின்றேன் என்ற வபிமானத்தை முன்னிட்ட விவகார மார்க்கத்தை ஜனம் அனுபவிக்கமாட்டாது. இது கருத்து, காண்போ ஞகாரமாகவும் காணப்படுவதி ஞகாரமாகவும் புத்திவிருத்தி யிரண்டு பிரகாரம். ஆண்டு கண் முதலிய பொறி வழியாகக் கடாதி பொருள்களோடு புத்தி சம்பந்த முடையதாகையில் திருசி யாகாரமாய் பரிணமிக்கின்றது. இங்ஙனமாகையில் புத்தி சாக்ஷியாக அதில் பிரதிவிம்பித்த வான்மாவினிடத்தில் காண்போ ஞகார பரிணமம் அத்தியாசம் பண்ணப்பட்டிருத்தலின் ஆன்மாவும் காண்போ ஞகார மாயதுபோ லாகின்றது. அதனுல் ஆன்மா நான் செய்கின்றேன் நான் அனுபவிக்கின்றேன் என்பது முதலிய விவகாரம் உடையதுபோ லாகின்றது. நிரவயவமும் சித்து வடிவமுமான வான்மா வியல்பாக விவ்விவகார முடையதன்றெனப் பொருள். (18)

(அ-௨௧)—அகங்காரத்தை முன்னிட்டது விவகாரமென்னும் பொருளில் சுவானுபவத்தை பிரமாணிக்கின்ருர்.

நோக்கு கின்றேன் யானென்ன முன்னநுண் மதியினுன்னி, நோக்கிடும் விழியைப் பின்னர்விட யத்தினுழைவித் தாற்போற், கேட்குத லாதியான கிளர் வெளி யாதியின்ற, னீக்கருங் குணங்க ளுடுநிலைமையித் தகையேயன்றே. (19)

(ப-ரை)—யான், நோக்குகின்றேன்-பார்க்கின்றேன், என்ன முன்னம் - என்று முதலில், நுண்மதியின் உன்னி - நுட்பமான

புத்தியாற் கருதி, பின்னர் - அவ்வெண்ணத் தனந்தாம், விழியை - கண்ணை, விடயத்து - திருசியங்களில், நுழைவித்து - சம்பந்தமாக்கி, நோக்கிடும் - புருடன் அத்திருசியத்தைக் காண்பன், போல் - அங்ஙனமே, கேட்குதலாதியான - கேட்கப்படுவனவாதிய, இளர் வெளியாதியின்றன் - விளங்கும் ஆகாயாதிகளின், நீக்கருங் குணங்களுடும் - நீக்கற்கரிய சத்தாதி குணங்களிடத்திலும், நிலைமை யித்தகையே - முன் கேட்கின்றேனென நுண்மதியாற் கருதி பின் செவியைச் சத்தாதி குணங்களிற் சம்பந்திப்பித்து அதனை அறிவன்.

(ப-ம்)—முதலில் நான் பார்க்கின்றேனெனப் புத்தியிற் சிந்தித்து பின்னர் விழியைத் தனது விஷயமான ரூபத்தைக் குறித்துப் பிரேரணை செய்கின்றான். அங்ஙனமே கேட்கின்றேன் முகர்கின்றேனென செவி முதலியவற்றைத் தங்கள் விஷயமான சப்த முதலியவற்றைக் குறித்து ஏவுகின்றானென்பது பொருள்.

(அ-கை)—சுவானுபவப் பிரமாண சித்தியின் பொருட்டுச் சுருக்கிக் கூறுபவராய்த் தொடங்கிய பொருளை முடிக்கின்றார்.

ஒருவரு மகங்கா ரத்தை விடுத்தொரு பொழுதுஞ் செய்யு
மருவிவ காரந் தன்னை யடைந்திட லகிலத் தின்றாந்
தெரிதரிவ் வேது வாலே திகழ்விவ கார மார்க்க
மருவிட வேதுத் தன்மை மதிக்குறுந் திடம தாயே. (20)

(ப-ரை)—அகங்காரத்தை, விடுத்து-நீத்து, ஒருவரும்-யாதாமொருவரேனும், ஒருபொழுதும் - ஓர் காலத்திலேனும், செய்யும் - இயற்றற்பாலதாய, விவகாரந்தன்னை - தொழிலை, அடைந்திடல் - இயற்றுதல், அகிலத்தின்றாம் - உலகத்திலதாம், தெரிதரு - அறியா நின்ற, இவ்வேதுவாலே - இக்காரணத்தால், திகழ்விவகார மார்க்கம் - விளங்குகின்ற விவகார வழியை, மருவிட வேதுத்தன்மை - அனுசரிப்பதற்குக் காரணமாக, திடமதாய்-நிச்சயமாய், மதிக்குறும் - அவ்வகங்காரம் புத்தியின் கண்ணிலை பெற்றிலங்கும்.

(ப-ம்)—உலகிலொருவரு மொருபோதும் அகங்காரத்தை யொழித்து முழுக்கு, உணவு முதலிய விவகாரத்தை இயற்றாதவின் புத்தியின் அகம் விருத்தி விவகாரத்தின் பொருட்டு மிகப் பிரசித்தியாம் என்பது பொருள். (20)

(அ-கை)—விவகாரத்தினங்கமாக வகங்காரத்தை நிச்சயித்து இனி யது ஆன்ம தருமமா? அல்லதென் அனுன்மதருமமா? மற்றிரண்டின் தருமமாவென? விகற்பித்து ஆன்ம தருமமென்பதை நிராகரிக்கக் கூறுகின்றார்.

சித்துரு வுயிர்க்குணமோ திகழ்மதிக் குணமோ வன்றி
மெத்திரண் டின்குணமோ மேவுமிவ் வகங்கா ரம்மென்
றுத்திக ளோடும் வீட துறவொரு மயல தில்லா
வெத்தன சீலராலே யீதுநன் குளத்தாற் காண்க. (21)

(ப-ரை)—மேவுமிவ்வகங்காரம் - பொருந்திய இந்த வகங்காரமானது, சித்துருவுயிர்க்குணமோ - ஞானவடிவவான்ம குணமா?, திகழ்மதிக்குணமோ - விளங்கும் புத்தியின் குணமா?, அன்றி - அல்லது, மெத்து - பொருந்திய, இரண்டின்குணமோ - ஆன்மாபுத்தி என்னு மிவ்விரண்டின் குணமா? என்று, உத்திகளோடும் - பொருத்தமாக, ஈது - இவ்விஷயத்தை, வீடுற - மோக்ஷமடைய, ஒரு மயலது இல்லா யத்தன சீலர் - சம்சாரத்தில் சுகமுண்டென்னு மியாதொரு மயக்கமுமின்றிய சன்னியாசிகளான பரமாம்ஸர்கள், நன்குளத்தாற்காண்க - மனதால் நன்றாக விசாரித்தறிதல் வேண்டும்.

(ப-ம்)—அகங்காரம் எதன்குணமென முயற்சியுடையோரால் நன்மையின் பொருட்டுத் திருஷ்டாந்த யுக்திகளோடு விசாரிக்கவேண்டு மென்பது பொருள் (21)

(அ-கை)—திருஷ்டாந்தங்களால் விசாரிக்கையில் எங்ஙனமாயிற்றென்னும் அவாவை ஆன்மாவின் குணமாகாதொழிந்ததென நீக்குகின்றார்.

குணம தாகிற் புருடனுக்குக் குறைவு புரியு மகங்காரங்
குணம தாக வொருபொழுதும் விடய மாதல் கூடாதாங்,
குணம தான தருங்குணியைக் குணியின் குறைவில் லவய
வத்தைத், துணிவ தாய்விட் டன்னியமாய்த் துலங்கி யிடுதெ
லிலதாலே (22)

(ப-ரை)—குறைவு புரியு மகங்காரம் - தாழ்மையையியற்று மகம் விருத்தி, புருடனுக்கு - ஆன்மாவிற்கு, குணமதாகில் - குணமாகுமாயின், ஒருபொழுதும்-எக்காலும், குணமதாக-குணத் தன்மையுடையதாக, விடயமாதல் கூடாதாம் - அறியப்படுதலில தாகும், (ஏனெனின்) குணமதானது, அருங்குணியை - அரிய குணியின் வடிவத்தையேனும், குணியின் குறைவில் அவயவத் தை - குணியினது குறைவற்ற காரணமான அவயவத்தையே னும், விட்டு - நீக்கி விட்டு, அன்னியமாய் - தான் வேறாக, துணிவதாய் - நிச்சயமாக, துலங்கியிடுதலிலதால் - விளங்காத காரணத்தால்.

(ப-ம்)—அகங்காரம் ஆன்ம குணமாயின் ஆன்மாவால் விளக்கப்படுவதாகாது. ஏனெனின் குணவடிவ தருமம் குணி யின் சொரூபத்தையேனும் அவயவத்தையேனும் விட்டு நீங்கி வேறுவதின்று. படத்துள்ள வெண்மை படத்தையேனும் அதன் அவயவத்தையேனும் விட்டு வேறுவதின்றுமாறு அகங்காரமும் ஆன்மகுணமாயின் அதனினும் வேறுகாது அதனு லவ்விரண் டும் பேதமின்றியதால் விளக்குவது விளக்கப்படுவ தாந்தன்மை பொருந்தாது எனப்பொருள். (21)

(அ-கை)—அங்ஙனமேல் குணம் குணியிலேயே யுள்ளதாய் குணியால் விளக்கப்படுக அல்லது அதன் குணங்களால் விளக் கப்படுக வெனிற் கூறுகின்றார்.

குணிக்குக் குணத்தி னதுபேதங் குறிக்கி லொருவத்
துவினுலு. மணிசெய் தேச மதனுலு மாத லிலதிங் காத
லினற், குணியி லிருக்குங் குணங்குணியாற் குணியின்
குணத்தா லாயினுமே, யணுவ தேனும் விடயமது வாவ
திலையென் பதுதுணிபே. (2 3

(ப-ரை)—குணிக்கு - குணமுடையதற்கு, குணத்தினது பேதம் - குணத்தின் பேதமானது, குறிக்கில் - ஆராயுமிடத்தில், ஒருவத்து வினுலும் - யாதாமொரு வஸ்துவாலும், அணிசெய் விளக்கும், தேசமதனுலும் - தேசத்தாலும், இங்கு-ஈண்டு, ஆதல் இலதாகும் - உண்டாதலின்ரும், ஆதலினுல், குணியிலிருக்கும் குணம் - குணியிடத்துள்ள குணமரனது, குணியால் - குணியாலாயினும், குணியின்குணத்தாலாயினும்-குணியிலுள்ள யேனைய குணத்தாலாயினும், அணுவதேனும் - அற்பமும், விடயமாவ தில்லை யென்பது துணிபே-அறியப்படவின் றென்பது நிச்சயம்.

(ப-ம்)—அகங்காரம் ஞானகுணத்தால் விளக்கப்படாது ஏனெனின் அகங்கார முதலிய சர்வத்திலு மான்மாவிருத்தலின் அகங்காரத்திற்குத் தேசத்தாற் செய்யப்பட்ட வேற்றுமையின்று. ஆராயுமிடத்தான்மாவினு மன்னியவத்து சித்தியாமையின் வத்துவாற் செய்யப்பட்ட பேதமுமின்று. இதனுல் கடத்தினும் படம் வேறு என்னும் பேதம் தருமிப் பிரதியோகியை யவாவுதலினுனும் தருமிப் பிரதியோகியும் பேதத்தை யவாவுதலினுனும் அன்னியோன்னி யாசிரய தோடமாம். ஆகலின் பேதநிருபணம் எதற்கும் இயற்றவொண்ணு தெனப் பொருள். (23)

(அ-கை)—ஞானகுணத்தா லகங்காரம் விளக்கப்படா தென்ற ஈண்டேது கூறுகின்ருர்.

அனலிடத் திருப்பதாய வனற்குண மொன்றற் கொன்று
தனிவிடய மதாந்தன்மை சார்ந்திட லிலதெக் காலுந்
தனதுகண் ணுளகுணத்தைத் தன்குண மதனுற் பூவி
லனலதும் விடய மாக வாற்றிடும் வளன தின்றே. (24)

ப-ரை)—அனலிடத்திருப்பதாய - நெருப்பிலுள்ள, அனற்குணம் - நெருப்பின் குணம், ஒன்றற்கொன்று - ஒரு குணம் மற்ருேர் குணத்திற்கு, எக்காலும் - ஒருபோதும், தனிவிடயமாந்தன்மை - ஒப்பற்ற விடயமாகு மியல்பை, சார்ந்திடலிலது - பொருந்துவதின்ரும், (மற்றும்) தனது கண்ணுள குணத்தை - தன்னிடமுள்ளதோர் குணத்தை, தன் குணமதனுல் - தன்னிட

முள்ள மற்றோர் குணத்தால், பூவில் - உலகில், அனலதும் - நெருப்பும், விடயமாக - அறியப்படுவதாக, ஆற்றிடும்வளன தின்று - செய்துவைக்கும் சாமர்த்திய முடையதின்று.

(ப-ம்)—நெருப்பின் பிரகாச குணத்தால் உஷ்ண குணமேனும் உஷ்ண குணத்தால் பிரகாச குணமேனும் ஒன்றற் கொன்று விஷயமாவதின்று. அங்ஙனமே நெருப்பும் தனது அக் குணங்களால் அவை யொன்றற்கொன்று விஷயமாமாறு வியற்று வது மின்றெனப் பொருள். (24)

(அ-கை)—அகங்காரம் ஆன்ம குணமாயின் ஆன்மாவால் விளக்கப்படலேலாதெனக் கூறப்பட்டது. ஆண்டிச்சங்கையாம்: புத்தி சுகம் துக்கம் இச்சை துவேஷம் பிரயத்தனம் தருமம் அதருமம் ஆகிய விவை ஆன்மாவின் விசேஷ குணமென்று கணாதர் கூறுதலில் எங்ஙன மான்மா நிர்க்குணமெனப் படுகின்ற தெனிற் கூறுகின்றார்.

அனித்த மாமனுன்மகுண மாகுங் குணத்தி னீட்ட மெதைச், சனித்த லில்லா வான்மகுண மாகச் சாற்றுங் கணுதமுனி. தொனித்த நெறியா லதுதனையுந் துடைத்து விடுதறாய்மை யதா, மனித்த குணத்தா னித்தமதுங் குணியா யிடுத லணுகாதே. (25)

(ப-ரை)—கணுதமுனி - கணுதரெனப் பெயருடை முனிவர், எதை - எந்த, அனித்தமாம் - நித்தியமின்றிய, அனுன்ம குணமாகும் - அனுன்மாவின் குணமான, குணத்தினீட்டம் - குணத்தின் கூட்டத்தை, சனித்தலில்லா - பிறப்பற்ற - ஆன்ம குணமாக - ஆன்மாவின் குணமென்று, சாற்றும் - கூறுவரோ, அது தனையும் - அங்ஙனங் கூறுவதையும், தொனித்த நெறியால் - மேற்கூறிய வழியாகவே, துடைத்துவிடுதல் தூய்மையதாம் - கெடுத்துவிடுதல் நலமாம், (மற்றும்) நித்தமதும் - நித்தியவான்மாவும், அனித்த குணத்தால் - நித்தியமாகாத குணத்தினுல், குணியாயிடுதலணுகாது - குணமுடையதாயியை யாது.

(ப-ம்)—உண்மையில் அனுன்மாவான புத்தி முதலியதின் குணமும் திரவிய முள்ளவரை யிருப்பதாயும் ஆன வெக்குண சமூகத்தைக் கணுதர் ஆன்ம குணமாகக் கூறினுரோ அதை, அகங்காரமான்மகுணமேல் அது ஆன்மாவால் விளக்கப்பட்டா குணகுணிகளுக்கு அத்தியந்த பேதமின்மையால் என்னு மிவ்வழி யாக நிராகரிப்பதோடு புத்தி முதலியதும் ஆன்மகுண மாகா தெனத் துடைத்தல் வேண்டும். மற்றும் புத்தி முதலியவை அனித்தியமாதலினுனும் நித்திய வான்மாவின் குணமாகாது. இத ஞல் நித்திய வான்மா வனித்திய குணங்களாற் குணியாகாது.

(அ-கை)—ஆக்ஷேபம் நித்திய வாகாயம் அனித்திய சத்த குணத்தால் குணியாவது போல ஈண்டுமாகுக வென்று சங்கித் துக் கூறுகின்றுர்.

அம்பரந் தனக்குச் சனித்தலே மறைக ளளவறுமுறை யறைதலினு, லம்பர மனித்த மாகுமென்றறிக வருங்கண புக்கின்மா மதத்திற், பம்பிய வனித்த குணநித்தப் பொரு ளைப் பயிற்றிடக்குணியதேயாக, வம்பர மதனை யலதொரு வுவமை யறைந்திடற் கில்லேயே யாமால். (26)

(ப-ரை)—மறைகள் - சுருதிகள், அம்பரந் தனக்கு - ஆகா யத்திற்கு, சனித்தலே - உண்டாதலே, அளவறு முறையறை தலினுல் - பலதரங் கூறுதலின், அம்பரம் - ஆகாயம், அனித்த மாகுமென்றறிக, அரும்- அரிய, கணபுக்கின்மா மதத்தில்-கணுத முனிவருடைய பெருமை வாய்ந்த மதத்தில், பம்பிய - ஆரவார மான, அனித்த குணம் - நித்தியமாகாத குணமானது, நித்தப் பொருளை - அனித்தியமாகாதபொருளை, குணியாகப் பயிற்றிட- குணமுடையதாகச் செய்வதற்கு, அம்பரம தனையலது - ஆகாய த்தை யொழித்து, ஒரு வுவமை யறைந்திடற்கு இல்லேயேயாம்- உவமானங் கூற யாதொரு பொருளுமின்றும்.

(ப-ம்)—“அந்த விந்த வான்மாவினின்று மாகாயமுண்டா யிற்று” என்பது முதலிய சுருதிகள் பலதரம் ஆகாயத்தி னுற் பத்தியைக் கூறுதலின் அது அனித்தியம். ஆகவின் இவ்வாகாய

திருஷ்டாந்தத்தினால் ஆன்மா அனித்திய சம்யோக குணத்தால் குணியாவதின்று. மற்றும் கணாதர் மதத்தில் அனித்தியகுணம் நித்தியவஸ்துவைக் குணியாக்க ஆகாயத்தின் வேருய் திருஷ்டாந்தம் அற்பமுமின்ரும். ஆகவின் ஆன்மா வனித்திய குணத்தாற் குணியாவதின் றெனப் பொருள். (26)

(அ-கை)—ஆக்ஷேபம், நித்தியத்திற் கனித்தியங் குணமாகாதேல் அக்காலெங்ஙனம் மூர்த்தா மூர்த்தங்களான உலக்கை ஆகாயம் இவைகளின் சம்பந்தம்போன்று ஆன்மா மனம் என்னுமிவைகளுக்குச் சம்யோகமென்னுங் குணமுண்டாமெனின் அது பிரசித்தி யின்மையான் இங்ஙனமின்றென விரண்டு செய்யுட்களாற் கூறுகின்ரூர்.

மனமொடு புருடனேனுமப் புருட னவனெடு மனமதுவேனுங், கனமுசல மொடு ககனம தேனுங் கம்மொடு முசலம தேனு, மனுநல் யோகம் வியோகம தேனு மருவிடலிலையிவ ணெதனுற், பனுமவ யவித்வ மவைகட்கு நீக்கப் பட்டுள தாதலின் மாதோ. (27)

(ப-ரை)—மனமொடு - மனதோடு, புருடனேனும் - புருஷனுயினும், புருடனவனேடு - புருஷனேடு, மனமதுவேனும் - மனமாயினும், கனமுசலமொடு - கனமான வுலக்கையோடு, ககனமதேனும் - ஆகாயமாயினும், கம்மொடு - ஆகாயத்தோடு, முசலமதேனும் - உலக்கையேனும், மனுநலயோகம் வியோகமதேனும் - பொருந்திய நல்ல சேர்க்கையையேனும் பிரிவையேனும், இவண் - ஈண்டு, மருவிடலிலை - அடைவதின்று, எதனுல் - எவ்வேதுவாலெனின், அவைகட்கு - ஆகாயம் புருடன் ஆகிய அவைகளுக்கு, அவயவித்வம் - அவயவமுடைமை, நீக்கப்பட்டுளது ஆதலின் - நிராகரிக்கப்பட்டுளதாகலின்.

(ப-ம்)—ஆகாயமும் புருடனும் நிரவயவமாதலின் சாவயவ உலக்கை முதலியவற்ருேடு சேர்க்கையையேனும் பிரிவையேனும் அடைவதின்ரும். (27)

மற்றும்.

உலகினிற் பழுதை குடமுத லனசா வயவங்க ளொன் றினே டொன்று, யிலகிடக் கூடு மியல்புள வீது திருட்டமற் றிதனையே யிணையா; யலகிலித் திருட்ட மதைவிடாப் புருட னுலதி ருட்டமா மதையுங், கலகமில் கருத்திற் சுயமதாய்க் கருதிக் கறையற விருத்தலு முரித்தே. (28)

(ப-ரை)—உலகினில் - உலகத்தின்கண், சாவயவங்கள்-அவ யவத்தோடுங் கூடியவையான, பழுதை குட முதலியன - ரஜ்ஜு கட முதலிய பொருள்கள், ஒன்றினேடு ஒன்றாய் - ஒன்றேடு பொருந்துவனவாய், இலகிடக்கூடும் - விளங்குதல் கூடும், இயல் புளது - தன்மையை யுடைத்து, ஈது திருட்டம் - இது பிரத்தி யக்ஷமாம், இதனையே யிணையாய் - இதையொப்ப, இத்திருட்ட மதை விடாப் புருடனுல் - நேரேகண்ட விதனை மறவாத ஆஸ்தி கனுல், அலகில் - கணக்கற்ற, அதிருட்டமாம் அதையும்-காணப் படாத வனைய வத்துவையும், கலகமில் - சஞ்சலமின்றிய, கருத் தில் - மனதால், சுயமதாய் கருதி - தானே யூகத்தினுல் இங்ஙன மாயசாவயவ பதார்த்தங்களுக்கே சம்பந்த மாம் என விசாரித்து, கறையற விருத்தலு முரித்தே - நிரவயவப் பொருளுஞ் சம்பந்த மடையும் என்னுந் தோஷமின்றி யிருத்தல் விவேகிகட் குரிமை யாம்.

(ப-ம்)—சாவயவ ரஜ்ஜு கட முதலியனவே ஒன்றேடொ னறு சம்பந்தப் பிரிவுகளையடைகின்றனவென்று வுலகிற் காணப் பட்டதால் வேறு காணப்படாத சாவயவவஸ்துக்களும் சம்யோக வியோகங்களை அடைகின்றனவெனக் கண்டதை மறவாதவனுல் யூகித்தறியத் தக்கதென்பது பொருள். (28)

(அ-கை)—ஆக்ஷேபம், காண்டல் பிரமாணமாயின் அக்கால் சாவயவ நிரவயவங்களான உலக்கை ஆகாயங்களுக்கும் சம்பந்தங் காணப்படுகின்றமையின் ஈண்டுங் காண்டல் பிரமாணமாகின்ற தென்று சங்கித்து ஆகாய மதீந்திரியமாகையால் அதன் சமவாயி

யான சம்யோகமும் அதீந்திரியமாகையாற் காண்டல் பிரமாண மாகாதெனக் கூறுகின்றார்.

அவயவப் பொருளு மவயவ மிலதா மவையொடு மவயவ மிலது, மவயவப் பொருளா மவையொடும் யோக மதுவில தாகுமே யதுதான், புவியினிற் றிருட்ட மெதனினு லிவணம் பொருந்திடு மதனினு னுமுன், செவியுறக் கூறு மதுமிக த்திதமா மென்றுசிந் தையினறிந் திடுநீ. (29)

(ப-ரை)—அவயவப் பொருளும் - சாவயவவஸ்துக்களும், அவயவமிலதாமவை யொடும் - நிரவயவவஸ்துக்களோடும், அவ யவ மிலதும் - நிரவயவவஸ்துக்களும், அவயவப்பொருளாம் அவையொடும் - சாவயவவஸ்துக்களோடும், யோகமது விலதா கும், சேர்க்கையுடையனவாகாவாம், அதுதான் புவியினிற்றிருட் டம் - சாவயவ நிரவயவவஸ்துக்களுக்குச் சம்யோக மின்மை யானது பூமியின்கண் காணப்பட்டது, எதனினு லிவணம் பொ ருந்திடும் - எவ்வேதுவா லிங்ஙனம் பெறப்படுமோ, அதனி னுல் - அவ்வேதுவால், நாம் முன் செவியுறக் கூறுமது - நம் மால் உமது செவிக்கு நன்கு விளங்கும்படி சாவயவ நிரவயவ வஸ் துக்களுக்குச் சம்யோக மின்றெனக் கூறப்பட்டதானது, திதமா மென்று நீ சிந்தையி லறிந்திடு, நிலைபெற்றதென நீ மனதிற் கருதுவாயாக.

(ப-ம்)—அவயவமுடையவை அவயவமின்றியவையோடும் அவயவமின்றியவை அவயவமுடையவையோடும் சேர்க்கையை யடைவதின்றென வுலகிற் காணப்பட்டது. சாவயவ நிரவயவங் களுக்குச் சம்யோக வியோகங்களைக் காண்பதான பிரமாணம் யாண்டுங் காணப்படவில்லை. இஃத பிப்பிராயம் ஆகாய வுலக்கை களின் சம்யோகங் காணப்படுவதின்று சம்யோகா சிரயத்திற் கத் தன்மையா மேல் சம்யோகத்திற்கு மத்தன்மையால் வாயுதரு சம்யோகம்போன்று, ஆகையால் உலக்கை யாகாயங்களின் சம் யோக மதீந்திரியமாகுங்கால் காணக்கூடாமையின் ஈண்டுங்காண்

டல் பிரமாணமெனப் பூர்வ பக்ஷியாற் கூறப்பட்டது மிகச் சதுர மெனப் பொருள். (29)

(அ-கை)—நிரவயவ வஸ்துவும் உபசாரமாக அங்கீகரிக்கப் பட அவயவமுடையவைகளோடு சேர்க்கையுடையதாமெனிற் கூடாதெனக் கூறுகின்றார்.

அவயவ மில்லா வெல்லா வரும்பொரு டமக்கா ரோப
வவயவ விடத்தில் யோக மணுகுவ திலதெக் காலும்
புவியிற் கற் பிதம தான பொருளினி னிலைமை யாக
வவமுறும் பொய்யாம் புந்தி யதிதிட மாத லாலே. (30)

(ப-ரை)—அவயவ மில்லா வெல்லா அரும்பொருள் தமக்கு-நிரவயவமான வெல்லா அரிய பொருள்களுக்கு, ஆரோப அவயவ விடத்தில் - ஆரோபிக்கப்பட்ட அவயவத்தையு டையதாகுங் கால், எக்காலும் - எப்போதும், யோகமணுகுவதிலது - சம் யோகத்தை யடைவதின்று, [எனெனில்] புவியில் - உலகில், கற்பிதமான பொருளினில் - மித்தையா லஸ்துவில், நிலைமை யாக - நிலைபெற்றதாக, அவமுறும் - நிஷ்பல மடையும், பொய் யாம் புந்தி - மித்தையா புத்தியானது, அதிதிடமாதலால் - மிகத்திடமாயிருத்தலினால்.

(ப-ம்)—இயல்பாக நிரவயவ வஸ்து கற்பிதபாகத்தோடு சம்பந்த முடையதன்று. எனெனிற் கற்பித சுத்தி வெள்ளி முதலியவற்றில் மித்தையா புத்தி நன்றாய் வியாபித்திருத்தலின் கற்பித பாகத்தோடு சம்பந்தமுடையதன்றென்பது பொருள்.

(அ-கை)—மற்றும் ஆன்மா புத்தி முதலிய அனித்திய குணங்களால் குணியெனக் கூறும் வைசேடிகரின் அனுமானம் திருஷ்டாந்தத்தை யவாவுதலின் அத்திருஷ்டாந்தம் சத்தியம் நிர்க்குணமே அத்வைதமான பிரஹ்மம் அதின் வேறான வெல் லாம் வாக்குமட்டில் அனித்தியம் எனக்கூறும் வேதாந்திகளுக் குண்டெனக் கூறமுடியாமையானும் நித்தியம் அனித்தியகுணத் தால் குணியாகும் என்னும் பக்ஷம் அசம்பவமென இரண்டு செய் யுட்களாற் கூறுகின்றார்.

மறைமுடி மதத்தில் வேத மருமம தறிந்த மேலோ
ரு்றுமுல கெவைக்கு மூல மாகியுள் ளுணர்வே மெய்யா
யறை யொரு பரம வான்ம பதத்தைநித் தியம தாயே
மறைமுடி யதனிற் சொல்வர் மற்றதை யனித்த மாயே (31)

(ப-ரை)—வேதமருமம் அது அறிந்த மேலோர் - வேதத்தின் கருத்தை யறிந்த பெரியோர், மறைமுடி மதத்தில் - வேதாந்த மதத்தில், உறும் உலகெவைக்கும் மூலமாகி - பொருந்திய வுலகெவைக்குங் காரணமாயும், உள்ளுணர்வு - ஞானவடிவமும், மெய்யாய் - சத்தியமாயும், ஒரு - ஒன்றாயும், அறை - கூறுகின்ற, பரமான்மபதத்தை - பரமான்மாவாகிய பதத்தை, மறை முடியதனில் - வேதாந்தத்தில், நித்தியமதாய் - சத்தியமாகவும், மற்றதை அனித்தமாய் - பரமான் மாவினுமன்னிய வுலகை மித்தையாகவும், சொல்வர் - பிரதிபாதியா நிற்பர்.

(ப-ம்)—வேதாந்த மதத்தில் வேதாந்த தாற்பரிய முணர்ந்த பெரியோர் "ஒன்றே அத்விதீயம். நித்தியம் விபு எங்குமுள்ளது சூக்ஷ்மம்: இவையெல்லாம் பிரஹ்மமே. இவையெல்லாம் ஆன்மாவே. இவையெல்லாம் நிச்சயமாகபிரஹ்மமே. நாமரூபம் வாக்கு மாத்திரம் மண் மாத்திரமே சத்தியம்" என்னுமிவை முதலிய வேதாந்தங்களில் சகல வுலககாரணமும் ஞானவடிவமும் சத்தியமும் ஏகமுமான பரமான்ம பதமேசத்தியம். அதின் வேறாய வெல்லாவுலகும் அனித்தியமெனக் கூறுநிற்பர் எனப் பொருள். (31)

நண்ணுமத னுனேயே தருக்கருக்கு நாசகுண நழுவா
வத்து, திண்ணமது வாகவொரு திருட்டாந்தஞ் சிறிதேனுஞ்
செறிவ தின்றாம், வண்ணமது வாகயாம் வழங்கியதே
வண்மையா மதனினுனே, யெண்ணுநித்த மனித்த குண
மதனுனே குணியாவ திலதெக் காலும். (32)

(ப-ரை)—நண்ணுமத னுனேயே - பொருந்திய அனித்திய குணமுடைய நித்துவத்துவின்மையால், தருக்கருக்கு - வைசேடிகருக்கு, நாசகுணம் நழுவாவத்து திண்ணமதுவாக - அனித்திய

குணத்தை யுடையது நித்திய வஸ்து (என்பதற்கு) உறுதியாக, ஒரு திருட்டாந்தம் சிறிதேனுஞ் செறிவதின்றும் - யாதொரு திருஷ்டாந்தஞ் சிறிதும் பொருந்துவதின்றும், வண்ணமதுவாக யாம் வழங்கியதே வண்மையாம் - அழகாக யாம் கூறியதே பொருத்தம், அதனினுனே - அவ்வேதுவால், எண்ணு நித்தம் - கருதும் நித்திய வஸ்து; அநித்தகுண மதனுனே - அநித்திய குணத்தினுல், எக்காலும் - ஒருபோதும், குணியாவது இலது - குணியாகமாட்டாது.

(ப-ம்)—இங்ஙனம் வைசேடிகருக்கு அநித்திய குணமுடைய நித்திய வஸ்து வுதாகரிக்க வற்பமு மின்றுதலால் நித்தியம் அனித்திய குணத்தாற் குணியாவதின்றெண எம்மாற் பூர்வங் கூறப்பட்டது நிலைபெற்ற தென்பது பொருள். (32)

(அ.கை)—இங்ஙனம் பிரசங்கத்தால் நேர்ந்த கணுதமதத் தைக் கண்டித்து இனி அகங்காரம் அந்தக் கரண தர்மமாகச் சிந் திக்கின்றவராய் அது ஆன்மாவின் தர்மமென்பது பொருத்தமின் றியதெனக் கூறுகின்றூர்.

அறிவுருவின் குணமாத லெதனினு லன்றுகு மகங்கா ரந்தான், றிறவிடய மதுவாதற் குரியதாய்த் திகழுமிகழ் விடயா கிர்தி, யறவிளக்கு மதியினது குணம் போன்றவ் வகங்கார மதற்கு மேலோய், செறிவிடயத் தன்மையுள தாதலினுற் றிருக்கினது குணமதாமோ. (33)

(ப-ரை)—அகங்காரந்தான் - அகங்காரமானது, எதனினுல் - எவ்வேதுவால், அறிவுருவின் - ஞானவடிவ ஆன்மாவின், குண மாதல் அன்றுகும் - குணமாகாதோ, (அதனுல்) திறவிடயமது வாதற்கு உரியதாய் திகழும் - நன்றுய் விடயமாவதற்கு யோக் கியமாக விளங்கும், இகழ் - இழிந்த, விடயாகிர்தி - திருசிய வடிவமாய், அறவிளக்கும் மதியினது குணம் போன்று - மிகவும் விளக்குவதான புத்தியின் குணத்தைப் போல, மேலோய்! விவேகியே! அவ்வகங்காரமதற்கு - அந்த வகங்கார குணத்திற்கு,

செறிவிடயத்தன்மை யுள தாதலினல் - பொருந்தியவிடய மாந் தன்மை யிருத்தலினல், திருக்கினது குணமதாமோ? - திருஷ் டாவான வான்மகுண மாகுமா?

(ப-ம்)—அகங்காரந் திருசியமா மியல்புடைத்து ஆன்மா வன்னமன்று ஆகலின் திருசிய வகங்காரந் திருக்குவடிவ ஆன்மா வின் குணமாகா. இதனல் அகங்காரம் விடயாகாரமான புத்தி னது குணம் போன்று விடயமாதலின் ஆன்மாவின் குணமென் பது பொருந்தாது. ஆயின் அந்தக் கரண தர்மமே யாமென்பது பொருள். (33)

(அ-கை)—அகங்காரம் ஆன்மாவின் குணமன்றெனக் கூறு பவராய் பரிசோதிக்கப்பட்டதுவம்பதார்த்தமும் பரிசோதிக்கப் பட்ட தத்பதார்த்தமும் ஒன்றென்னுமைக்கிய விலக்கணமான வாக்கியார்த்தத்தைக் கூறுகின்றூர்.

விடயந்தன துருவொன்றிடும் விரிபுந்தியின் குண மொன், றிடர்புந்தியி னதுவாமகந் தையதொன்றிரண் டனையுந், தடையொன்றற வறியும்மெவ னவிகாரசற் புருடன், திடமிங்கிவன் சிவனுமென த்தெளிவாயறை குவமால். (34)

(ப-ரை)—விடயந் தனது உரு ஒன்றிடும் - விடயாகாரத்தை அடையும், விரிபுந்தியின் குணமொன்று - விரிந்த புத்தியின குணம் ஒன்று - இடர் புந்தியினதுவாம் - துக்க காரண புத்தி னதுவான - அகந்தை அது வொன்று - அகங்கார மொன்று, இரண்டனையும் - இத்திருசிய வடிவ விருத்தியும் அகங்காரமும் ஆகிய விவ்விரண்டனையும், எவன் - எந்த, அவிகார சற்புருடன் - விகாரமின்றிய சத்தாமாத்திர வான்மா, தடையொன்றறவறி யும் - யாதொரு பிரதிபந்தமுமின்றி அறிகின்றதோ, இவன் - இவ் வான்மா, திடம் - திடமாக இங்கு - ஈண்டு, சிவனுமெனத் தெளிவா யறைகுவம் - சிவனேயென்று நிச்சயமாகக் கூறுவோம்.

(ப-ம்)—திருசியாகார புத்தி விருத்தியும் திருஷ்டாவினுகார பரிணம வகங்காரமும் ஆகிய விவ்விரண்டுவித புத்தியின் பரிண

மத்தையும் எப்பரமான்மா விகாரமின்றியதாய் விளக்குகின்றதோ அந்தப் புத்தியின் சான்ருன புருடன் "காண்போ னன்யனன்று நீ யதுவா யிருக்கின்ருய்" என்பது முதலிய சுருதிகளால் பரமான்மாவெனப் படுகின்ருனென்பது பொருள். (34)

(அ-கை)—கூறப்பட்ட சமன்வயத்தில் (பொருத்தத்தில்) பிரத்தியக்ஷ முதலிய வேறு பிரமாண விரோதஞ் சங்கிக்கப்படுகின்றது.

அற்றேலுட லகமாயுழ லறிவீனனை யெவணஞ்
சொற்றீர் பர மான்மாவெனச் சொலுவோமென வினவிற்
கற்ருேய்கச டுறுமாறிது குறைவேகழ றிலம்யா
நற்ருய்மறை யதுவும்பொரு ளிதையேநவில் வதனுல் (35)

(ப-ரை)—அற்றேல் - அங்ஙனமாயின், உடல் அகமாயுழல் அறிவீனனை - உடல் தானென்னும் புத்தியோடு சம்சாரத்திற் சுழலும் அற்பஞ்ஞ சீவனை, பரமான்மா வெனச் சொலுவோம் என - பரமான்மாவே யென்று கூறுவோமென, எவணஞ் சொற்றீர் - எந்தப் பிரகாரம் பிரதி பாதித்தீர்கள் (என்று), வினவில் - கேட்குமிடத்தில், கற்ருேய் - வித்துவானே யாம், இது - இப்பொருளை, கடுறுமாறு - தோடமுண்டாம் வண்ணம், குறைவு - தாழ்ச்சியாக, கழறிலம் - கூறுகின்றேமல்லேம், [ஏனெனின்] நற்ருய் மறையதுவும்-நல்ல மாதாவை யொத்தவேதமும், பொருளிதையே நவில்வதனுல் - இப்பொருளையே கூறுவதனுல்.

(ப-ம்)—இச்சம்சாரியான சீவன் பரமாத்மாவென்று விரோதமாகத் தங்களால் எங்ஙனம் பிரதி பாதிக்கப்படுகின்ருனெனின் தத்துவம் பதார்த்தங்களுக்குச்சர்வஞ்ஞத்துவம் அற்பஞ்ஞத்துவம் முதலிய விருத்த தருமங்கள் மாயை அதன் காரிய அந்தக் காணம் என்னு முபாதிகளாற் செய்யப்பட்டமையின் விரோதமின்று. அதாவது இரண்டிடத்திலும் விசிட்டங்களுக் கேகத்துவம் அசம்பவமேனும் விட்டுவிடாத விலக்கணையால் விருத்தாம்சங்களை நீக்கி அவிரோத வானந்த பிரத்தியக் போத துவம்ப த

லக்ஷியார்த்த சுத்த சதானந்த அத்வைத போதத்திற்கும் தத்பத லக்ஷியார்த்தத்திற்கும் ஒரே விலக்கணங் குறிக்கப்பட்டமையின் ஞானிப் பொருளை விரோதமாகக் கூறவில்லை. சுருதியு மிதனைப் பிரதி பாதித்தலின் விரோதமின்றென்பது பொருள். (35)

(அ-கை)—ஞானற்பமும் விரோதமாகக் கூறவில்லை என்னும் பொருள் தோன்றச் சுருதிப் பிரமாணத்தைக் கூறுகின்றார்.

கருதுதற் கரியன் கருத்தினுக் கிலைநற் கருதுதற்கல் லனு மெனவோர், திருவது விதுவோ டெதுபர மதனிற் றிகழது வேயொரு வனெனச், சுருதிக ளிவற்றிற் றிருக்கிது தனக்குத் தூய்பர மான்மமெய்ப் பதமாம்' வருமொரு பான்மை விரிவது வாக வழங்கிடப் படுமென மதியே (36)

(ப-ரை)—கருதுதற்கரியன்-கருதத் தகாதவன் கருதுபவன் என்று அக்ஷரப் பிராஹ்மணம், கருத்தினுக்கிலை - மதியை யறிப வனை அறிகின்றீர்களில்லை என்று உஷஸ்தப் பிராஹ்மணம், நற் கருதுதற் கல்லனும் - நன்றாய் எண்ண முடியாதவன் எண்ணு கின்றவன் என்று அந்தர்யாமிப் பிராஹ்மணம், எனவோர் திரு வது - இங்ஙன மாய வொப்பற்ற அழகியதான அந்த விந்தப் பிர ஹ்மம் காரணமின்றியது காரியமின்றியது உள்ளில்லாதது வெளி யில்லாதது இவ்வான்மா, பிரஹ்மம் என்று மதுப் பிராஹ்மணம். நீ யதுவா யிருக்கின்றாயென்று சாந்தோக்கியம், இது - இவை யெல்லாம் யாதொரு வான்மா என்று மைத்திரேயிப் பிராஹ்ம ணம், எது பரமதனில் திகழதுவே - இங்கியாதொன்று மேன்மை யாக விளங்குகின்றதோ அது அங்கு, யாது அங்கு விளங்குகின் றதோ அது விங்கு விளங்குகின்றது. மரணத்தினின்றும் மரண முறுவன் ஈண்டு நாநாவாகக் காண்போன் என்று கடவல்லி. யாது வாக்காற் கூற முடியாதோ எதனால் வாக்குக் கூறுகின் றதோ அதனையே பிரஹ்மமென வறியாது இதுவென வுபாசிக் கப்படுகின்றதோ அதுவன்று என்று தலவகாரம், ஒருவன் - எவ னே வொரு தீரன் திருப்பிய நாட்டமுடையோனாய்ப் பிரத்திய காத்துமாவையறிந்தான் அமிர்தத்தன்மையைவிரும்பினவன்என்று

கடவல்லி, என-இவை முதலாக, முதலிய சத்தத்தால் வேறு சரு
தியும் "அந்தர்யாமி அமிர்தன். எந்த அவன் இவன் புருஷனிடத்
திலோ எவன் ஆதித்தனிடத்திலோ அவன் இவனேகன். தத்துவ
மசி. அகம்பிரஹ்மாஸ்மி. அயம் ஆத்மா பிரஹ்மம். பிரக்ஞானம்
பிரஹ்மம். இவ்வமிர்தம் பிரஹ்மமே முன்னும் பிரஹ்மம் பின்னும்
பிரஹ்மம் தெற்கும் பிரஹ்மம் வடக்காகவும் கீழுமேலும் பரவி
யது சிரேஷ்டமான பிரஹ்மமே யிவ்வுலகில். முன்னிவ்வொரே
யான்மாவாக விருந்தது அற்பமும் வேறின்று. இது மூன் பிரஹ்ம
மாகவே யிருந்தது அகம் பிரஹ்மாஸ்மி யென்று அப்பொழுது
ஆன்மாவையே யறிந்தான் அதினின்று மிவ்வெல்லா முண்டா
யிற்று. எவனிந்தப் புருஷனே அவனாக விருக்கின்றேன். அறி
யப்பட்டதினும் பின் அறியப்படாததினும் அது வேறே. அதர்
மத்தினும் வேறு, தர்மத்தினும் வேறு செய்யப்பட்ட விதினின்
றும் வேறு பூதபவ்வியத்தினும் யாது வேறோ அதைப் பார்க்கின்
றாய் அதைச் சொல்லு. சத்தமின்றியது பரிசமின்றியது ரூபமின்
றியது குறைவின்றியது அங்ஙனமே ரசமின்றியது நித்தியம் யாது
கந்தமின்றியதும். அனுதியனந்தம் மகதத்துவத்தினும் பரம் சத்தி
யம் அதனை நிச்சயித்து மரண வாயிலினின்றும் நன்றாய் விடுபடு
கின்றான். யாது காட்டமுடியாதது கொள்ளமுடியாதது கோத்
திரமற்றது வருணமற்றது கண்ணற்றது காதின்றியது அது கை
யின்றியது பாதமின்றியது நித்தியம் விபு எங்குமுள்ளது சூக்ஷ
மம். ஏ!கார்க்கி இதனை அழிவற்றதாகப்பிராஹ்மணர்கள் சொல்லு
கின்றார்கள் ஸ்தூலமின்றியது அணுவின்றியது குறிலின்றியது
நெடிலின்றியது சிவப்பின்றியது சினேக மின்றியது குறியின்றி
யது தமஸின்றியது. ஆகாய மின்றியது சங்கமின்றியது ரசமின்
றியது கந்தமின்றியது கண்ணின்றியது காதின்றியது முகமின்றி
யது மனமின்றியது ஒளியின்றியது பிராணனின்றியது வாயின்றி
யது அளவின்றியது உள்ளின்றியது வெளியின்றியது அது வற்ப
மும் சாப்பிடுகின்றதின்று அதை அற்பமும் சாப்பிடுகின்றதின்று
பிரஹ்மமாகவே யிருந்துகொண்டு பிரஹ்மத்தை யடைகின்றன்.
பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மமே யாகின்றான்" இங்ஙனமா

யதும் முற்கூறப்பட்டவைகளாகவு முள்ள - சுருதிகள் இவற்றில் இச்சுருதிகளில், திருக்கிது தனக்கு-திருக்குவடிவ வான்மாவிற்கு, தூய்பர்மான்ம மெய்ப்பதமாம் வரு ஒரு பான்மை - பரிசுத்த பரமான்மாவென்னும் உண்மைத் தன்மையாக வரும் ஒன்றை, விரிவதுவாக வழங்கிடப்படு மெனமதி - விரிவாகக் கூறப்படுமென நீ கருதுவாயாக.

(ப-ம்)—சுருதுதற்கரியன் என்பன முதலிய சுருதிகளின் ஆரம்ப வாக்கியம். இவை முதலிய சுருதிகளானும் மற்றுஞ் சில வேறு சுருதிகளானும் புத்தியதன் விருத்தி ஆகிய விவற்றிற்குச் சாக்கியான பிரத்தியக் போதத்திற்கு ஏகசுகவடிவ கூடஸ்த ஞான வடிவமாகிய பரமான்ம பதமாந்தன்மை நன்ருகப் போதிக்கப் பட்டதினுல் தத்துவம் பதார்த்தங்களின் தாதாத்துமியத்தில் யாதொரு விரோதமு மின்றெனப் பொருள். (36)

(அ-கை)—“அதனையே பிரஹ்மமென்றறி” என்ற தளவ கார சுருதியை வெளிப்படுத்துகின்ருர் இரண்டரைச் செய்யுளால். ஆண்டு “யாது வாக்காற் கூறமுடியாதோ. எதைக் கண்ணுற் காண்கின்ருனில்லை. எதைக்காதாற் கேட்கின்ருனில்லை, எதைப் பிராணனுற் பிராணிக்கின்ருனில்லை. எதை மனதாலறிகின்ருனில்லை” என்றவிப்பாகத்தை விரித்துக்கூறுகின்ருர்.

எதுவெந்த ஞான்றும் வாக்கா லிசைத்திடற் கில்லாதாகு
மெதுவெந்த ஞான்றுநோக்கா னேக்கிடற் கில்லாதாகு
மெதுவெந்த ஞான்றுங் காதாற் கேட்பதற் கில்லாதாகு
மெதுவெந்த ஞான்றுநெஞ்சா லெண்ணிடற் கில்லாதாகும்.

(ப-ரை)—எது+தாகும் - எப்பரமான்மாவாக்கால் எப்போதுங் கூறமுடியாது-எது+தாகும் - எப்பரமான்மா வெப்போதும் கண்ணுற் காண்டற்கில்லாதாகும், எது+தாகும் - எவ்வான்மா எப்போதுங் காதாற் கேட்கமுடியாது - எது+தாகும் எம்பரமான்மா வெந்த ஞான்றும் அந்தக் காணத்தால் அறியமுடியாது.

(ப-ம்)—ஜனம் வாக்கு கண் மனம் ஆகிய விவற்ருல் ஆன்ம தத்துவத்தை யறியாது. ரூப முதலியவையின் ரூதலின் இரு

வடிவ காரணத்தினலும் அதன் வடிவம் விளக்கப்படுவதில்லை சுயம் பிரகாச மாதலின். அவிவேகத்தா லான்மாவிலா ரோபிக்கப்பட்ட மித்தையா பொருளின் தருமத்தை நீக்குதலினல் ஆன்மாவை நித்திய முத்தமாய் நிரூபித்தலின் சாஸ்திர வுபதேச மனர்த்த மெனக் கருதத் தக்கதன்றென்பது பொருள். (37)

(அ-கை)—" எதனல் வாக்கு வசனிக்கின்றதோ. எதனற் கண் காண்கின்றதோ. எதனற் காதிதனைக் கேட்கின்றதோ. எதனல் மனம் மனனிக்கின்றதோ. எதனற் பிராணனேடுகின்றதோ" என்ற விப்பாகத்தை விரித்துக் கூறுகின்றார்.

வாக்கொடு நயன மாங்கே வண்செவி மனமுந் தாமும்
போக்கறு மெதனினனே பொலிந்துசென் றிடுமெப்போது
நீக்கமில் பரமமான பதமதே நீதானென்ன
நோக்குதி யெனவே வேத நுவன்றதிங் கதிகாரிக்கே. (38)

(ப-ரை)—வாக்கொடு+தாமும் - வாக்கு கண்வளமுடைய செவி மனம் ஆகிய விவைகள், எப்போதும் - போக்கருமெதனினனே பொலிந்து சென்றிடும், நித்திய வெவ்வான்மாவால் விளக்கப்பட்டனவாய்த் தங்கள் விடயங்களைக் குறித்துச் செல்லுமே, நீக்கமில்பரமமான பதமதே நீதானென்ன நோக்குதி யென - அந்த வியாபகபரமான்மாவை நானயிருக்கின்றே னென நீ யறிவாயாக வென்று இங்கு அதிகாரிக்கு, இச்சமுசாரத்திற் சாதன சதுஷ்டயமுடையோனுக்கு - வேதம் நவின்றது.

(ப-ம்)—எக்காலும் வாக்கு முதலிய வெல்லா விரிந்திரியமும் உம்மைச் சத்தத்தால் மனேவிருத்தி கொள்ளற்பாலது. ஆகிய விவைகள் ஜடமாதலின் தந்தம் விடயங்களைக் குறித்துச் செல்லும்படி சித்துவடிவ வான்மாவாற் பிரேரிக்கப்படுகின்றன வாதலின் தமது காரியங்களை யியற்றும் வன்மையன. சுருதி நீயப் பரமபதத்தை யான்மாவாக வறியெனவறியும் வேட்கையுடையோனுக்கு ஆன்மாவின் உண்மையை யுபதேசித்த தென்பது பொருள். (38)

(அ-கை)—இங்ஙனந்த லவகார சுருதியை விரித்துக் கூறி இனிச் சாந்தோக்கிய சுருதியை விரித்துக் கூறுகின்றார்.

மறையிவை பரம வான்மமெய்ப் பதத்தின் மானம
தாகச் சிற் சிலவே, யறைதர லாய வெம்மினு லீண்டு வரு
மணி மாதிய குணமா, ரறிவுரு வான சத் தென ப்பூர்வ
மறைந்திடு மதுவுடற் கரிநீ, செறிதர வாகுவா யென வரிய
திருமறை முடியறைந் திடுமே. (39)

(ப-ரை)—மறையிவை - இவ்வேதங்கள், பரமவான்மமெய்ப் பதத்தில் - பரமான்ம பதத்தன்மையுண்டென்னு முண்மையில், மானமதாக - பிரமாணமாக, ஈண்டு எம்மினுல் - இங்கு எம்மால், சிற்சில வேயறைதாலாய - அற்பமாகவே கூறப்பட்டன.

(ப-ம்)—ஜீவான்மா பரமான்மாவாயிருக்கின்ற தென்னும் பொருளில் கருதுதற்கரியன் என்பன முதலிய விச்சுருதிகளும் சில பிரமாணமாகவே யெம்மாற் கூறப்பட்ட தெனப் பொருள். (39)

(அ-கை)—இனிச் சாந்தோக்கிய சுருதியைக் கூறுகின்றார். பூர்வம் - முன்னர், அரும் அணிமாதிய - அரிதான சூக்ஷ்மத்துவ முதலிய, குணமார் அறிவுருவான - குணத்தோடுங் கூடிய ஞானவடிவ. வத்து, சத்து என அறைந்திடும் - சத்து என்று கூறப்பட்டது (பின்னர்) உடற்கரி நீ - தேக சான்றாகிய ஆன்மாவான நீ, அது செறிதாவாகுவாயென - அதுவாகப் பொருந்தியிருக்கின்று யென்று, அரிய திருமறை முடியறைந் திடும்-அருமைப்பாடுடைய அழகிய வேதாந்தங்கள் கூறுகின்றன.

(ப-ம்)—"அந்த இந்த இது அணிமா இவ்வெல்லா மிதன் வடிவே அது சத்தியம் அது ஆத்மா நீயதுவாயிருக்கின்றாய் சுவேத கேதுவே" என்ற இவை முதலிய சுருதிப் பிரமாணத்தாற் குறிப்பிக்கப்பட்ட சூக்ஷ்மத்தன்மை சர்வக தத்தன்மை சுயம்பிரகாசத்தன்மை முதலிய குணமுடையது. சத்து என வாரம்பிக்கப்பட்டது. "எ சௌமியனே! இது முன் சத்தாகவே

இருந்தது ஒன்றே அத்துவிதீயம் அது பார்த்தது. அது தேஜசைச் சிருட்டித்தது'' என்னு மிவை முதலிய சுருதிகளால் எப்பிரஹ்மம் எல்லா வுலக காரணமாக வாரம்பிக்கப்பட்டதோ அப்பிரஹ்மமாகவே நீ யிருக்கின்று யென்று சுருதியேகத்தன்மையை யுபதேசித்தது "இச்சீவாத்துமாவாக வனுப்பிர வேசித்து நாம ரூபங்களைச் செய்கின்றேன்'' பிரவேசங் கேட்கப்படுதலின் சத்து ரூபப்பிரஹ்மமே ஆன்மாவெனப் பொருள். (39)

(அ-கை)—சுருதிக்குத் தன்னுற் பிராமாண்யத்தன்மை யிருத்தலின் அதை ஆதரித்துப் பிரத்திய கான்மாவிற்குப் பிரஹ்மத்தன்மை என்னுற் கூறப்பட்ட தென்ற வாண்டிஃதா சங்கையாம்:—கூறப்பட்ட சுருதி சமூகத்திற் கத்தியந்தாபேதத்திற் ருற்பர்ய மின்று ஆனுல் அம்சாம்சி பாவத்தைப் போதிப்பதும் பிரகிருதி விகிருதி பாவத்தைப் போதிப்பதும் என்ற வாண்டுக் கூறுகின்ருர்.

எவ்வணங் குடங்க ளாதி யிடமிரு விசும்பி னுக்குச்
செவ்வவ யவம்வி காரஞ் செறிந்திடல் சிறுது மின்ரு
மவ்வணம் பிரமத் திற்கிவ் வாருயி ரவய வத்தோ
டெவ்விகா ரமது மின்ரு மெனுமொழி யமித்தை யாமே

(ப-ரை)—எவ்வணம் - எங்ஙனம், குடங்களாதியிடம் - கட முதலியவற்றின் ஆகாசம், இருவிசும்பினுக்கு - பெருமையுடைய வாகாயத்திற்கு, செவ்வவயவம் - செவ்விய அவயவமாகவும், விகாரம் - விகாரமாகவும், செறிந்திடல் சிறிதுமின்ரும் - பொருந்துதல் அற்பமுமின்ருே, அவ்வணம் - அங்ஙனம், பிரமத்திற்கு, இவ்வாருயிர் - இச்சீவான்மா, அவயவத்தோடு - அவயவமும், எவ்விகாரமும் - எப்படிப்பட்ட விகாரமும், இன்ருமெனு மொழி - இன்றென்று கூறும் வாக்கியம், அமித்தையாம் - சத்தியமேயாம்.

(ப-ம்)—கட முதலியவற்றி னுகாயம் அனவச்சின்ன வாகாயத்தின் அவயவமும் காரியமும் எங்ஙனமாகாதோ அங்ஙனம் இச்சரீரதாரியான ஜீவபதார்த்தமும் பரமாத்மாவின் காரியமும்

அவயவமு மாகாதென்று கூறிய நிச்சயம் சத்தியம் எனப் பொருள். (40)

(அ கை)—எக்கால் ஜீவ பரர்களுக்கு அம்சாம் சித்தன்மை முதலிய விலக்ஷணபேத மற்பமு மங்கீகரிப்பதின்றே அக்கால் ஜீவனென்னும் நாமபேதம் எங்ஙனமுண்டாயிற்றென வாசங்கித்துக் கூறுகின்றார்.

கரகாதி நிமித்தமத னாலேயே யெவ்வாறு ககனத்திற்குக், கரகாம்ப ரமதுவெனப் பெயர்குலவு மவ்வாறே கரியதாகிப், பரமான்ம வறிவான சிவத்தினுக்கும் படிமீது படரு நாமம், புரவேது வதனாலே சீவனெனப் புகல்வதலாற் பொருந்து ருதே. (41)

(ப-ரை)—ககனத்திற்கு - ஆகாயத்திற்கு, எவ்வாறு - எங்ஙனம், கரகாதி நிமித்த மதனாலேயே - கடமுதலிய நிமித்தத்தினாலேயே, கரகாம்பர மதுவெனப் பெயர்குலவும் - கடாகாயம் என்பது முதலிய பெயர் விளங்குமோ, அவ்வாறே - அங்ஙனமே, கரியதாகி - சாக்ஷியாகி, பரமான்ம வறிவான சிவத்தினுக்கும்- பரமான்மாவான பிரஹ்மத்திற்கும், புரவேது வதனாலே - சரீர வுபாதி யேதுவினாலேயே, சீவனெனப் படரும் நாமம் - சீவனென்று விளங்குகின்ற பெயரை, புகல்வதலால்-கூறப்படுவதல்லது, பொருந்துருது - சரீர திருஷ்டி யொழிந்தகாலத்து சீவனெனப் பெயர் பொருந்தாது.

(ப-ம்)—ஒரே வாகாயத்திற்குக் கட முதலிய வுபாதி வயத்தால் கடாகாயமென்பன முதலிய நாமமுண்டாமாறு காண்போனை பரமான்மாவிற்கும் சரீர வுபாதி வயத்தால் ஜீவனென்னும் நாமமுண்டாயிற்று உண்மையி லுண்டாக வின்றெனப் பொருள்.

(அ-கை)—மற்றுங் காரியமின்றிய பிரஹ்மத்திற்குப் பிரவேசங் கேட்கப்படுகின்றமையினானும் ஜீவன் காரியமும் அவயவமுமின்றெனக் கூறுகின்றார்.

அக்கரம் பரம வான்மசத் தெனவே யறைதிருநாமமா ரெதனு, லிக்ககனு திசகமியற் றிடுதலியையும் பின்றன்ன தாற்றலினுற், கக்கிய வுலகிற் புக்கிடு மவனே கடமிவ ணுத யமா யினபின், பொக்குறு குடத்திற் புக்கபுட் கரம்போற் புந்தியின் மைந்தனே கொளுநீ, (42)

(ப-ரை)—அக்கரம் என - அழிவற்றதென்றும், பரமவான்ம என - பரமான்மாவென்றும், சத்து என - என்று முள்ளதென்றும், அறை திருநாமம் ஆர் - கூறப்படும் திருநாமம் பொருந்தப் பெற்ற, எதனுல் - எப்பரமான்மாவால், இக்ககனுதி சகம் இயற்றிடுதல் இயையும் - இவ்வாகாயத்தை முதலிலுடைய வுலகு வுண்டாக்கப் பெற்றதாய்ப் பொருந்துமோ, தன்னதாற் றவினுல் கக்கிய வுலகில் - தனது சக்திவசத்தாற் சிருஷ்டிக்கப்பட்ட சகத்தில், பின் - சிருஷ்டித்த பின்னர், அவனே - சிருஷ்டி கருத்தாவான அப்பரமான்மாவே, புக்கிடும் - ஜீவவடிவாய்ப் பிரவேசிப்பன். (அ-கை)—நிரம்சமான பரமான்மா வெங்ஙனம் பிரவேசித்தாரெனிற் கூறுகின்றார். கடமிவ ணுதயமாயினபின்-ஈண்டுகடஞ் சிருஷ்டிக்கப்பட்ட பின்னர், பொக்குறு குடத்தில் - அழியுமியல்புடைக் குடத்தில், புக்க - நுழைந்த, புட்கரம்போல் - ஆகாயத்தைப்போல் என்று, மைந்தனே நீ - ஏ குழந்தாய் நீ, புந்தியில் கொளு - மனதின்கண் கொள்ளுவாயாக.

(ப-ம்)—அக்ஷரம் பரமாத்மா சத்து எனப் பெயருடைய வெப்பரமான்மாவால் ஆகாயத்தை முதலிலுடைய சகத்துச் சிருஷ்டிக்கப்பட்டதோ அப்பரமான்மாவே தன் மாயையா லியற்றப்பட்ட வுலகில் ஜீவவடிவாகப் பிரவேசித்தது. அஃதெங்ஙனமெனின் கட சிருஷ்டியின் பின் கடத்திலாகாயம் பிரவேசித்ததைப்போன்று. இதனுல் நிரவயவமாய்ச் சர்வகதமாயுள்ள வான்மாவிற்குப் புத்தி முதலியவற்றில் விளக்க மாத்திரமே ஆன்மாவின் பிரவேசம். தேவதத்தன் முதலியோருக்குக் கிரகாதிகளிற் பிரவேசம் போன்றின்றென்பது பொருள். (42)

(அ-கை)—" அவரே சிருஷ்டித்து அவரே யனுப் பிரவேசித்தார். அவரே யீண்டு நக நுனிகளில் பிரவேசித்தார். உள்ளே பிரவேசித்து ஜனங்களை நியமிப்பவர்" என்பன முதலிய பிரவேச வாக்கியங்களால் நான்குவித தேகங்களில் அந்தக் காரண சாக்ஷியாக நுழைந்த பரமான்மாவிற்கே யெதனுல் ஜீவனெனப் பெயருண்டாயிற்றோ அதனுல் ஜீவன் பரமாத்மாவின் அம்சம் அல்லது விகாரம் இன்றெனவ் விவ்வளவாற் கூறப்பட்டது. இப்போது இவ்வர்த்தத்தில் சிருஷ்டி வாக்கியமும் பிரமாணமெனக் கூறுகின்றார்.

அம்பர முதல வாயவிச் சகங்க ளரும்பர மான்மனி
னிருந்தே, பம்பிடு மெனவெச் சுருதியின் முடிகள் பகர்ந்
திடு மவைகளி னுலு, மம்பரு மிகமு முயிர்களும் பரம
வான்மதத் துவமெனச் சொலலா, லின்புறு மபேத மதி
யதே நிதமு மிலங்கிடப் படுமென வுணர்நீ. (43)

(ப-ரை)—அம்பரமுதலவாயவிச்சகங்கள் - ஆகாயத்தை முதலிலுடைய விவ்வுலகங்கள், அரும்பரமான்மனினிருந்தே - அரிய பரமான்மாவினின்று, பம்பிடும் என - உண்டாகுமென்று, எச்சுருதியின் முடிகள் - எவ்வேதாந்தங்கள், பகர்ந்திடும் - கூறுகின்றனவோ, அவைகளினுல் - அச்சுருதிகளினுல், அம்பரும் இகமும் உயிர்களும் - பரலோகம், இகலோகம், சீவர்கள் ஆகியவிவைகள், பரமவான்மதத்துவமெனச்சொலலால் - பரமான்மாவின் சத்து வடிவமாகவே யிருக்கின்றதென்று சொல்லப்படுதலினுல், நிதமும் - எப்போதும், இன்புறும பேதமதியதே - ஆனந்த காரணமாய் அபேத புத்தியே, இலங்கிடப்படுமென - விளங்கிக் கொண் டிருக்கின்றதென, நீ வுணர் - நீ யறிவாயாக.

(ப-ம்)—பரமான்மாவினின்றும் ஆகாயாதி வுலகுண்டாயதென்னும் " இதினின்றும் பிராணன் மன முதலியவெல்லா விந்திரியங்களு முண்டாயிற்று. ஆகாயம், வாயு, அப்பு, அக்கினி, ஜலம் எல்லாவற்றையுந் தாங்குகின்ற பிருதிவியும். அந்த இந்த ஆன்மாவினின்று மாகாய முண்டாயிற்று" என்னுமிவை முத

விய சுருதிகளானே பரமான்ம காரியமான வுலகிற்கு மதிற் பிரவேசித்த ஜீவனுக்கும் பரமான்ம வடிவசத்துத் தன்மையைக் கூறுதலினுல் அபேத புத்தியே நிச்சயம் பண்ணப்படுகின்றது. "எல்லாம் நிச்சயமாகப் பிரஹ்மமே. நாமரூபம் வாக்கை யாரம்பித்தது மண் மாத்திரமே சத்தியம். காண்போன் வேருயின்று" என்னுமிவை முதலிய சுருதிகளான் என்பது பொருள். (43)

(அ·கை)—ஆக்ஷேபம், சிருஷ்டி வாக்கியம் சிருஷ்டியைக் கூறுவதே அன்றி அபேதப் பிரதிபாதன பரமானதன்று. ஏனெனின், ஓர் வாக்கியம் அனேகார்த்தத்தைப் பிரதி பாதிப்பது நியாயமின்ருதலின் என்ரு சங்கித்துச் சிருஷ்டி பரமே யென்னும் விபக்ஷத்திற் ருேடங் கூறுகின்ருர்.

படைப்பின் வாக்கியம் படைத்தல்செய் பரமது வாயிற்
கிடைப்ப தின்றிமெய் ப்பயனில தாகியே கிடக்கும்
படைப்பு றுஞ்சக மிவ்வணம் பரமனி னெனக் கேட்
டிடப்பெ றும்மது புருடனுக் கின்பயன் பயவா. (44)

(ப·ரை)—படைப்பின் வாக்கியம் - சிருஷ்டி வாக்கியம், படைத்தல் செய் பரமதுவாயில் - சிருஷ்டியைக் கூறும் பரத்துவமுடையதாகில், மெய்ப்பயன் - உண்மையான பலன், கிடைப்பது இன்றி இலதாகி - அத்தியர்தம் பெறப்படுவதின்ருய், கிடக்கும் - நிற்கும் (எனெனின்), படைப்புறுஞ் சகமிவ்வணம் பரமனின் - பரமான்மாவினின்றும் ஜகம் இவ்வண்ணம் படைக்கப்படும், எனக்கேட்டிடப் பெறும் - என்று கேட்கப்படுதலான, அது, புருடனுக்கு இன்பயன் பயவா - முமூக்ஷுவான அதிகாரிக்கு இஷ்ட பலனைக் கொடுக்காது.

(ப·ம்)—சிருஷ்டி வாக்கியம் சிருஷ்டியைக் கூறும் பரமாகில் அக்காலவ்வாக்கியம் பலமற்றதான அனர்த்த முடையதாகும். அஃதெங்ஙனமெனின், சிருஷ்டி கருத்தாவான பரமேசுவரனினின்றும் இங்ஙன முலகுண்டாயிற்றென்னும் சிரவண மாத்திரங் கேட்கும் புருடனுக்கு எதனு லத்தியந்த துக்கநிவர்த்தி புண்டாவதின்ருே அதனுல் சிருஷ்டியைக் கூறும் பரத்துவமுடையதாங்

கால் எஞ்சலின்றிய அனர்த்த நிவர்த்தி வடிவ பலமின்மையால் அனர்த்த முடைமையே பொருந்தும். "பலமுடையதின் முன்னிற்பலமின்றாய ததனங்கம்" என்ற நியாயத்தான் சிருஷ்டி வாக்கியத்திற்கும் சுதந்திரமாகப் பலமுடைமை கேட்கப்படாமையான், ஏகத்துவத்தைக் கூறும் "ஆன்மஞானி சோகத்தைக் கடக்கின்றான். பிரஹ்மத்தை யறிந்தோன் பரத்தை யடைகின்றான். எதனினின்றும் பயப்படுகின்றானில்லை" என்னுமிவை முதலிய சுருதிகளுக்குப் பலமுடைமை கேட்கப்படுதலின் அச்சிருஷ்டி வாக்கியமும் தத்துவமசி வாக்கியத்திற்குச் சேஷமாகிய அங்கமாமேல் பலமுடைமை யாகின்றதென்பது பொருள். (44)

(அ-கை)—இதனுனும் சிருஷ்டி வாக்கியத்திற்குச் சிருஷ்டி பரத்தன்மை பொருத்தமின்றெனக் கூறுகின்றார்.

அளவறு முறைவி கார மநித்திய மெனவுஞ் சீரா
யுளவொரு சத்தே மெய்யா மெனவுமொண் மறைக ளாலே
யளவறு விதம தாக வறைந்திடு மதனி னுனே
விளிவுல கினுக்குற் பத்தி விதேயமன் றறிய வேண்டும். (45)

(ப-ரை)—அளவறுமுறை - பல தடவை, விகாரம் - காரிய வுலகு, அநித்தியமெனவும் - மித்தையென்றும், சீராய் உள ஒரு சத்தே - சிறப்புடையதா யிருக்கும் ஒப்பற்ற சத்து வஸ்துவே, மெய்யாம் எனவும் - உண்மையென்றும், ஒண்மறைகளால் - விளங்குகின்ற வேதங்களினுல், அளவறு விதமதாக - அநேக பிரகாரமாக, அறைந்திடும் - சொல்லப்படுகின்றன, அதனினுல் - அவ்வேதுவால், விளிவுலகினுக்கு - அழியு முலகத்திற்கு, உற்பத்தி-சிருஷ்டியை, விதேயமன்று - சுருதி விதிப்பதன்று, (என்று) அறியவேண்டும் - இதை யறிவாயாக.

(ப-ம்)—பல தடவை காரியமான வுலகு மித்தை யென்றும் காரணமான பிரஹ்மமே சத்தியமென்றும் நாமரூபம் வாக்கு மாத்திரம் என்று ஆரம்பித்து அது சத்தியம் அது வாத்துமா அது நீயா யிருக்கின்றாய் என்பது முதலிய சுருதிகளால் அநேக வித திருஷ்டாந்தங்களோடு நிச்சயஞ் செய்யப்பட்டன, ஆகையாலு

லகிற் குற்பத்தியை விதிக்கத்தக்கதன்றென வீது வெங்களா லறியப்பட்டன வென்பது பொருள். (45)

(அ-கை)—இதுகாறும் சிருஷ்டி வாக்கியம் மித்தையா வடிவான சிருஷ்டி பரமானதன்று ஆனுல் ஏகத் தன்மையைப் போதிக்கும் பரமானதென்று கூறப்பட்டது. இனித்தத்துவமசி வாக்கியம் சிருஷ்டி பரமாகவே ஞகாதெனிற் கூறுகின்ருர்.

அப்பொரு ணீயா கின்றனே யெனவே யளவறு முறை யறை மொழிகள், செப்புல குதய மாத்திர விதியிற் செறிந் திட வில்லையெஞ் ஞான்று, விப்புரு டனுக்குப் பரமநல் லான்ம பதவெழின் ஞானமா மிதனே, யொப்பறு குமர வுதயம துஞற்று மப்பொழு தொன்றுமென் றுணர்நீ. (46)

(ப-ரை)—அப்பொருள் நீயாகின்றனே யெனவே-அது நீயா யிருக்கின்ருய் என்று, அளவறுமுறை - அடிக்கடி, அறை மொழி கள் - கூறுகின்ற தத்துவ மசி வாக்கியம், செப்புலகுதய மாத் திர விதியில் - சொல்லாநின்ற ஜக சிருஷ்டி பர வாக்கியத்திற்கு (அங்கமாக), செறிந்திடவில்லை - பொருந்துவதாகாது, எஞ்ஞான்று - எப்போது, இப்புருடனுக்கு - இவ்வதிகாரிக்கு, ஒப்பறு குமரா - சமானமற்ற புத்திரனே! - பரம நல்லான்மபத - நல்ல பரமான்ம பதத்தின், எழின் ஞானமாமிதனே - அழகிய ஞான மெனக் கூறப்படுமிதனே, உதயமது ஞற்றும் - (தத்துவமசிவாக்கியம்) உற்பத்தியைச் செய்யுமோ, அப்பொழுது - அக்கால், நீ ஒன்று மென்று உணர் - பலனுடையதாகப் பொருந்தும் என்று நீ அறிவாயாக.

(ப-ம்)—தத்துவமசி என்ற வாக்கியம் உலகி னுற்பத்தியை மாத்திரங் கூறுமேல் பலனுடைய ஞானத்தை யுண்டாக்காத தாகும். அதனுல் அடிக்கடி கூறப்பட்ட தத்துவமசி யென்ற வாக்கியத்தின் அடிக்கடி கூறப்பட்ட அப்பியாசம் பலமுடைய தாகாமையின் பெருந்துகின்றதில்லை "ஏக வாக்கியத்துவம் பொருந்துகையிற் பேத வாக்கியம் விரும்பப்படா" என்னு நியா யத்தினுல் சிருஷ்டி வாக்கியம் மஹா வாக்கியத்தோடு ஏக வாக்

கிய மாகின்றது. இதை விட்டு விபரீதமாக மஹா வாக்கியம் சிருஷ்டி வாக்கியத்தின் அங்க மென்பது அனர்த்தப் பிரசங்கமாதலின் பொருத்தமின்றியதாகும். எங்ஙன மெனின் பிரத்திய கான்மாவான புருடனுக்குப் பிரஹ்ம ஞானத்தை மஹா வாக்கியம் எப்போ துண்டாக்குகின்றதோ அப்போது வாக்கியத்தா லுண்டான ஞானம் மோக்ஷ பல முடையதாதலின் அதன் அங்கமாகச் சிருஷ்டி வாக்கியம் பொருந்துகின்றது. விபரீதமேற் பொருந்தாது. (46)

(அ-கை)—"எதனினின்று மிப்பூதங்களுண்டாகின்றனவோ உண்டாயின வெதனுற் சீவிக்கின்றனவோ எதனிடத்தில்லயமாகின்றனவோ. அதுவே யுண்டாக்கியதுவே பிரவேசித்தது. எவன் ஆன்மாவிலிருப்பவனாய் ஆன்மாவை யுள்ளே நியமிக்கின்றானோ" என்பது முதலிய சிருஷ்டிதிதி பிரளயம் பிரவேசம் நியம மென்னு மைந்துவித அர்த்தவாத வாக்கியங்களுக்கு அபேதத்திலேயே தாத்பர்ய மென்று கூறி இப்போது விரோதமின்றியதான முடிந்ததை முடிக்கின்றார்.

எவ்வுயி ருளத்தி னூடு மெழுந்திடும் விருத்தி யாது,
மெவ்வவி கிருத னான புருடனிங் கறிகு வானோ, வவ்விவன்
பிரம ரூப னவனென் றெதுசொற் றேம்யா, மிவ்வண மத
னைத் தாபித் திட்டனமெனவே யோர்வாய். (47)

(ப-ரை)—எவ்வுயிருளத்தினூடும் - ஸ்தாவரஜங்கம எல்லா ஜீவர்களின் அந்தக் கரணத்தின் கண்ணும், யாது விருத்தி யெழுந்திடும் - எப்புத்தி விருத்திகள் உற்பன்னமாகா நிற்குமோ அதனை, இங்கு - ஈண்டு, எவ்வவிகிருதனான புருடன் - விகாரமின்றிய எப்புருடன், அறிகுவானோ - அறிந்துகொண்டிருக்கின்றானோ - அவ்விவன் - அந்த விகாரமின்றியவனான இவ்வபரோக்ஷ வான்மாவே, பிரமரூபனவ னென்று-பிரஹ்ம சொரூபனா யிருக்கின்றானென்று, யாம் எது சொற்றேம் - நம்மால் யாது கூறப்பட்டதோ, அதனை - அவ்வருத்தத்தை, இவ்வணந்தாபித்திட்டனம் - (இவ்வான்மாவே

பிரஹ்மம் என்னும்) இப்பிரகாரம் நிலை பெறுத்தினம், எனவே யோர்வாய் - என்று அறிந்து கொள்வாயாக.

(ப-ம்)—ஜீவான்மாக்களின் புத்தி விருத்திகளை எல்லாம் எப்புருடன் விகாரமின்றியவனு யறிகின்றானோ அப்புருடன் இயல்பாகவே பரமான்மாவெனப் படுகின்றானென எம்மாற் பூருவம் 34-வது செய்யுளிற் கூறப்பட்ட பொருளை இங்ஙனம் பிரமாண விரோத பரிகார பூர்வகம் நிலை பெறுத்தினேன் என் பது பொருள். (47)

(அ-கை)—எங்ஙனந் தத்துவமசி வாக்கியம் ஜீவப் பிரஹ்மங் களுக்கு அம்சாம்சி வடிவ அற்ப பேதமுஞ் சகிக்காதோ அக்கால் மீன் தண்ணீர்போன்று அத்தியந்த வேற்றுமையைச் சகிக்கவே மாட்டாதெனக் கூறுகின்றார்.

மதிக்கரி சிவத்தி னின்று மகரமா வுததி மானுங்
கதிக்கறு பேத மேயெக் காலுளகடக்கம் போன்றன்
றுதிக்கில வதுநீ யாவாயிவனின்முன் னுரையி னோடு
விதிக்குறெவ்வணமஞ்ஞான்றுவிரோதமதடைந்திடாயோ.

(ப-ரை)—எக்கால் - எப்போது, மதிக்கரி - புத்திக்குச் சான் றான வான்மா, சிவத்தினின்று - பிரஹ்மத்தினின்றும், மகரம் - மீன், மாவுததி - பெரிய சமுத்திர நீர், மானும் - இவற்றைப் போன்று, கதிக்கு அறு - கூறுதற்கரிய, பேதமேயுள - வேற் றுமையையே யுடையதாகின்றதோ (ஆனால்,) கடக்கம் போன்று - கடாகாயம் போல, அன்று - அன்றோ, அஞ்ஞான்று - அக்கால், உதிக்கில - உற்பத்தியற்ற, அது - பிரஹ்மம், நீ ஆவாய் - நீயா யிருக்கின்றாய், இவனின் - இவ்வான்மாவே நீ, (என்று) - விதிக் குறு - விதித்த, முன்னுரையினோடு - முற்கூறப்பட்ட தத்துவமசி முதலிய வாக்கியங்களோடு, எவ்வணம் - எப்படி, விரோதமது - விரோதத்தை, அடைந்திடாயோ - அடையமாட்டாயோ.

(ப-ம்)—எஞ்ஞான்று புத்தி சான்றான ஆத்மா மகரோதகம் போன்று பிரஹ்மத்தினும் வேறோ ஆனலெங்ஙனம் கடாகாயம் மஹாகாயத்தினின்றும் கடமாகிய வுபாதியாலாக்கப்பட்டதைப்

போன்று இன்றே அஞ்ஞான்று ஜீவப்பிரஹ்மங்களுக்கு மத்ஸ்ய வுதகம் போன்று பரமார்த்தபேதம் அங்கீகரிக்கநேரும் அதனால் தத்துவமசி வாக்கியம் விரோதமுடையதாகும். (48)

(அ-கை)—ஆக்ஷேபம் தத்துவ மசியாதி வாக்கியங்கள் வஸ்து பரத்தன்மையையுடைய தாகுங்கால் பேதத்தைச் சகிக்காது. ஆனால் வஸ்து பரத்தன்மையே யதற்கின்று உபாசனாபரத்துவ முடையதாகையால் என்று ஆசங்கிக்கின்றான் பூர்வபக்ஷி.

இம்மொழி யஞ்ஞா னத்தை யிரித்துமெய்ப் பிரமந் தன்னைச், செம்மையின் விளக்க லாவ தன்றுசெப் பெதனி னாற்கே, எம்முபா சனையாங் கன்ம விதிபர மதனி னானே, சம்மத வெமக்குச் சாற்றும் விரோதஞ் சற் றணுகு றாதே.

(ப-ரை)—இம்மொழி - இந்தத் தத்துவமசி வாக்கியம், அஞ்ஞானத்தை இரித்து - அஞ்ஞானத்தைக் கெடுத்து, மெய்ப் பிரமந்தன்னை - சத்தியவடிவ பிரஹ்மத்தை செம்மையின் - செவ் விதாக, விளக்கலாவதன்று - தெரிவிப்பதாகிய வஸ்து பரத் துவமுடையதாகாது, செப்பெதனினால்கேள் - இங்ஙனங் கூறி யது எதனாலெனக் கேட்பாயாயின், அம் உபாசனையாம் கன்ம விதிபரம் - அழகிய பிரஹ்மத்தின் உபாசனா கர்ம விதியைக் கூறும் பரத்துவ முடையது, அதனினால் - அவ்வேதுவால், சம்மத எமக்கு - எங்களுக்குப் பொருத்தமானதே, சாற்றும் விரோதஞ் சற்றும் அணுகுறாது - கூறும் விரோதம் அற்பமேனு மெம்மைச்சாராது.

(ப-ம்)—இத்தத்துவ மசிவாக்கியம் அஞ்ஞானத்தைக் கெடு த்து வஸ்துவின் சொரூபத்தைப் போதிக்கும் பரமானதன்று. ஆனால் சத்தின் உபாசனாகர்மத்தைக் கூறும் பரமுடையது. ஆகையால் தத்துவமசியாதி வாக்கியங்கள் எனக்கு விரோத முடையனவாகா அதாவது வாக்கியம் உபாசனாவிதிபரமானதால் அகண்டைகரசவஸ்து பரத்தன்மையின்மையின் என் மதத்தை திரஸ்கரிக்கச் சாமர்த்தியமுடையதாகாது என்பது பொருள். (49)

(அ-கை)—வாக்கியம் உபாசனை விதிபரமென்பதைத் திருஷ்டாந்தத்தினுற் சாதிக்கின்றுன்.

மின்மன முதலிற் காரண திருட்டி விதித்திடும் பிர திமை யதனிற், றன்மதி யொழித்துக் கடவுடன் மதியை யாற்றிடச் சாற்றுமெவ் வணந்தான், றன்மய வுயிரி லவ் வண மாகத் தத்துவ மசியெனு முறையாற், சன்மயப் பிரம மதி செய நிதமுஞ் சாற்றிடப் படுமிது திடமே. (50)

(ப-ரை)—மின் - விளக்குகின்ற, மனமுதலில் - மனமுதலான வற்றில், காரண திருட்டி விதித்திடும் - காரணத்தைக் காணும் பொருட்டு விதிக்கப்பட்டுளது, (மேலும்) பிரதிமையதனில் - விக்கிரகத்தில், தன்மதி யொழித்து - தனது சிலை யென்னும் புத்தியை விட்டு, கடவுடன் மதியை யாற்றிட - ஈசுவரபுத்தியைச் செய்யும்படி, சாற்றும் எவ்வணந்தான் - எங்ஙனங்கூறப்படுகின்றதோ, அவ்வணம் - அங்ஙனம், தத்துவ மசியெனு முறையால் - தத்துவ மசிவாக்கியத்தால், தன்மயவுயிரில் - தனது வடிவமாய ஜீவனிடத்தில், சன்மயப் பிரமமதிசெய - சத்துவடிவ பிரஹ்மத்தின் புத்தியுண்டாக - நிதமுஞ் சாற்றிடப்படும் - எப்போதும் பகரப்படுகின்றது - இது திடமே - இங்ஙனங் கூறியது சத்தியம்.

(ப-ம்)—“மனதைப் பிரஹ்ம மென்று உபாசிக்குக. ஆதித்தியனைப் பிரஹ்ம மென்று உபாசிக்குக. ஆகாசத்தைப் பிரஹ்ம மென்று உபாசிக்குக. அன்னத்தைப் பிரஹ்மமென் றுபாசிக்குக” என்பதாதி சுருதிகளான் மனமாதித்தியன் முதலியவற்றில் காரணமான பிரஹ்மவுபாசனை விதிக்கப்படுகின்றது. அங்ஙனமே எழுதப்பட்ட ஈசுவர சித்திர முதலியவற்றில் அதிஷ்டான புத்தியைக் கெடுக்காமலே தேவத்தன்மையின் புத்தியாரோபிக்கப்படுகின்றது. அங்ஙனமே தத்துவ மசிவாக்கியத்தால் துவம்பதார்த்த வடிவ ஜீவனிடத்தில் ஜீவத்தன்மையை நீக்காமலே சத்துருபப் பிரஹ்ம திருஷ்டி விதிக்கப்படுகின்றது. எனெனின், ஏகத்தன்மை பரத்துவ முடையதாகில் பிரமாணுந்தா

விரோதமாதலின் ஆனல், நான் சத்தான பிர்ஹ்மமாயிருக்கின்றே னென்ற புத்தியின் அழுத்தமே விதிக்கப்படுகின்றது என்பது பொருள். (50)

(அ-கை)—தத்துவ மசிவாக்கியம் உபாசனு விதிபரமுடையதென வோர்பக்கத்தைக் கூறி இப்போது குணவாதபரம் அல்லது ஸ்துதி பரம் அல்லது விபரீத போதகம் என்ற வேறு பக்கங்களை இரண்டு செய்யுட்களால் உதாகரிக்கின்ருர்.

அல்லதிம் மொழிகணீ யென்பதத்தி னதருத்தந் தன்னை
நல்லரும் பிரமமாக நவின்றது குணவா தத்தாற்
கொல்லரி தேவதத் தனிவனெனக் கூவிற்பீதி
யில்லெழிற் புருடன்றன்னை யியம்புவ ரெவணந்தானே.

(ப-ரை)—அல்லது - மேற்கூறிய வண்ணமின்றேல், இம் மொழிகள் - இந்தத் தத்துவமசி முதலிய வாக்கியங்கள், நீ யென் பதத்தின் அருத்தந் தன்னை - துவம்பதப் பொருளானசீவனை, குணவாதத்தால் - குணத்தைக் கூறு மபிப்பிராயத்தால், நல்லரும் பிரமமாக நவின்றது - மிக வரிய பிரஹ்ம வடிவனுகக் கூறிற்று, எவணம் - அஃதெம்மாதிரியெனின், கூவில் - சொல்லுமிடத்தில், பீதியில் - நிர்ப்பயமான, எழில் புருடன் றன்னை - அழகிய மனிதனை, தேவதத்தன் இவன் - தேவதத்தனென்னும் இம்மனிதன், கொல் அரி - கொல்லுகின்ற சிம்மம் என்று, இயம்புவர் - பிரதிபாதியா நிற்பர் அன்றே.

(ப-ம்)—இத்தத்துவமசி வாக்கியம் நீயென்ற சத்த வாச்சியனை ஜீவனை குணவாதத்தினல் சத்தான பிரஹ்மமாயிருக்கின்று யென்று கூறுகின்றது. அஃதெங்ஙனமெனின் பயமின்றிய புடனைப் பார்த்து இத்தேவத்ததன் சிம்மமென்று கூறுவதுபோன்று.

(அ-கை)—துதி பரத்தன்மையைக் கூறுகின்ருர்.

அல்லது குலிச னுகுவை யரியே யாகுவை யெனவுரை
தரல்போ, னல்லொரு சிவமே யாகுவை யெனவே நவின்றது
துதியையே நாடி, யல்லதிவ் வசனஞ்சத்துரு வதற்குத்
துவம்பத வரும்பொரு ளான, நல்ல் தத்துவத்தின் றன்மை
யே நவின்றதென்பதிற் குறையெதோ நவிலீர். (52)

(ப-ரை)—அல்லது, குலிசனுகுவை - நீ தேவேந்திரனு யிருக்கின்ருய், அரியேயாகுவை - நீ விஷ்ணுவா யிருக்கின்ருய், எனவுரைதரால்போல் - என்று கூறுகின்றதைப்போன்று, துதியையே நாடி - துதிக்குங் கருத்தால், வாக்கியம், நல்லொரு சிவமேயாகுவையெனவே நவின்றது - நீ அழகிய ஒப்பற்ற பிரஹ்மமா யிருக்கின்ருய் என்று கூறிற்று, அல்லது, இவ்வசனம் - இத்தத்துவமசி வாக்கியம், சத்துருவதற்கு - சத்தான பிரஹ்மத்திற்கு, துவம் பத வரும் பொருளான - துவம்பத வாச்சிய அரிய ஜீவனுயிருக்கின்ற, நல்ல தத்துவத்தின் றன்மையே நவின்றது - நல்ல ஜீவத்துவத்தையே கூறிற்று, என்பதிற் குறையெதோ நவிலீர் - என்று கூறப்பட்ட பொருளின் குறையுண்டேற் புகல்வீராக.

(ப-ம்)—எங்ஙனங் கொடையாளியான புருடனை நீ இந்திரனு யிருக்கின்ருய் நீ விஷ்ணுவா யிருக்கின்ருய் என்று இரப்போர் துதிக்கின்ருர்களோ அங்ஙனமே ஈண்டும் ஜீவனைத் துதிக்கும் பொருட்டுச் சத்தான பிரஹ்மமா யிருக்கின்ருய் என்று தத்துவமசி வாக்கியங் கூறுகின்றது. அல்லது சத்ரூபப் பிரஹ்மத்திற்குத் துவம்பத வாச்சிய ஜீவாத்ம வடிவத்தைக் கூறுகின்றது. அதாவது பிரஹ்மம் ஜீவனு யிருக்கின்றதென்று கூறுகின்றது எனப் பொருள். (52)

(அ-கை)—ஆக்ஷேபம் தன்புற வியற்றுமிதனு லெப்பயன், ஜீவனது வியல்பான பிரஹ்மத் தன்மையை வாக்கியம் போதிக்க மாட்டாதெனக் கூறுகின்ருர்.

அருமொழி யதனி னீயென் மொழியறை யுயிரெக் காலும்
பரமநல் லான்ம ரூபப் பதியென் மெய்ப் பொருளே யாயிற்
றெரிதர லிலது தன்ன துருவமே னிவன்ருன் செப்பீர்
பிரிவறு மொழியாற் போதிப் பித்தலே யாமெ தாலே. (53)

(ப-ரை)—அருமொழி யதனில் - அரிய மகாவாக்கியத்தில், நீ என் மொழி அறையுயிர் - நீ யென்ற துவம் பதத்தாற் கூறப்பட்ட ஜீவன், எக்காலும் - எப்போதும், பரம நல்லான் மரூபப் பதியென் மெய்ப்பொருளே யாயில் - மேலான பரமாத்ம பதத்

தாற் கூறப்படும் சத்தியப் பிரஹ்மமாயின், தன்னது உருவம் - தனது வடிவமான பிரஹ்மத்தை, இவன்றன் - இச்சீவன், என் - எக்காரணத்தால், தெரிதால் இலது-அறியவில்லை, செப்பீர்-கூறு வீராக (அன்றியும்), பிரிவரு மொழியால் - அத்வைத வாக்கியத் தால், எதால் - எவ்வாறு, போதிப்பித்தலே யாம் - போதித்தல் கூடும்.

(ப-ம்)—தத்துவமசி வாக்கியத்தில் நீ என்ற சப்த வாச்சிய ஜீவன் எப்பொழுதும் பரமான்மாவான சத்சப்த வாச்சியார்த்த ஞல் அப்பொழுது இச்சிவன் தனது இயல்பான பிரஹ்மத் தன்மையை யேன் அறிகின்றனில்லை? ஆனல் வாக்கியத்தால் போதிக்கப்படுகின்றது என்பது எதனலோ அச்காரணத்தால் பிரஹ்மத் தன்மை இவனுக்கு இயல்பன்று என்பது பொருள்.

(அ-கை)—கூறிப் போந்த பொருளாகிய முடிந்ததை முடிக் கின்றன் பூர்வபக்ஷி.

காரண மிதனு லேயே கருதது நீயென் வாக்கு
மாருயிர் பிரம மென்னு வறைந்திட லிலயதாலே
யாரண மொழிகள் வேறு யாதுதான் காணலாகுஞ்
சீரவை தமையு மிந்த நெறிகொடே தெரிய வேண்டும். (54)

(ப-ரை)—காரண மிதனல் - இக்காரணத்தால், கருதது நீ என் வாக்கு - கருதாநின்ற தத்துவமசி வாக்கியமானது, ஆருயிர்- ஜீவன், பிரமம் என்னு-பிரஹ்மமா யிருக்கின்றனென்று, அறைந் திடலிலை - கூறவில்லை, அதால் - அக்காரணத்தால், ஆரண மொழிகள்-வேத வாக்கியங்கள், யாது வேறு காணலாகும்-யாவை அயலாகக் காணப்படுகின்றனவோ, சீர் அவை தமையும் - சிறப் புடைய அவைகளையும், இந்த நெறிகொடே தெரியவேண்டும் - இம்மாதிரியாகவே தெரிந்து கொள்ளவேண்டும்.

(ப-ம்)—வாக்கியம் உபாசனவிதி பரமாதலின் ஜீவனுக் குப் பிரஹ்மத் தன்மையைப் போதிப்பதன்று. அதனல் மற்றைய வாக்கியங்களையும் இம்மாதிரியாகவே கொள்ளவேண்டும். (54

(அ-கை)—தத்துவமசி வாக்கியம் உபாசனு வாக்கியத்தினும் விலக்ஷணமாதலின் வஸ்து பரத் தன்மையதேயாம் என்று சித்தாந்தி சாதிக்கின்ருர்.

நீமொழி மொழியெ தாலே நீயது வாவா யென்னுந்
தூமொழி யதற்கு வேரு மதனினுற் சொல்லும்பார்வை
நேமநற் பரம தின்ரு நிமலசத் துருவந் தானே
சேமசத் துருவ மென்னுச் செறியறி வுறுத்த லாகும். (55)

(ப-ரை)—எதால் - எக்காரணத்தால், நீ மொழி - நீ கூறு இன்ற, மொழி - வாக்கியம், நீயதுவாயென்னும் - நீ யதுவாயிருக் கின்ருய் என்னும், தூமொழி யதற்கு வேரும் - பரிசுத்தமகா வாக்கியத்தினும் விலக்ஷணமோ, அதனினுல் - அக்காரணத்தால், சொல்லும் - கூறப்படும், நல்நேம - மிகவழகிய, பார்வை பரமதின் ரும் - உபாசனு பரமானதன்று (மற்ருே), நிலமல சத்துருவந் தானே - பரிசுத்த சத்தான ஜிவனே, சேம சத்துருவமென்னு - காக்கும் சதது வடிவப் பிரஹ்மமென்று, செறிஅறி வுறுத்தலா கும் - நன்கறி வுறுத்தலேயாம்.

(ப-ம்)—தத்துவ மசி வாக்கியம் "மனதைப் பிரஹ்மமென வுபாசிக்குக" வென வுன்னு லுதாகரிக்கப்பட்ட வாக்கியத்தினும் விலக்ஷண மாதலின் உபாசனுவிதி பரமானதன்று. மற்ருே ஜீவாத்மாவாகப் பிரவேசித்த பிரஹ்மத்திற்கே பிரஹ்மத் தன்மை யைப் போதிப்பது என்பது பொருள். (55)

(அ-கை)—தத்துவமசி வாக்கியம் உபாசனு வாக்கியத்தினும் விலக்ஷண மானதெனச் சாதிக்கின்ருர்.

உளமா திகளி லம்மொழிக ளவற்ரு லென்றென் ஞெலியதுயவாந், தளராத் தலைமைப் பதத்ததனுற் சாற்றுந் திருட்டி விதித்துளதாந், தெளியிவ் வசன மதனுடு தெரிக் கும் விதியவ் வணமிலதா; மொளிசெய் யதனுலிவ் வுரையவ் வுரையி னின்று மன்னியமே. (56)

(ப-ரை)—அம்மொழிகள் - அவ்வுபாசனு வாக்கியங்கள், என்று என் ஒலியதுவாம் - என்று என்ற சத்த வடிவான, தள

ராத் தலைமைப் பதத்ததனுல் - நிலையான முதன்மைப் பதத்தினை யுடைத்தா யிருத்தலின், அவற்ருல் - அவ்வாக்கியங்களால், உள மாதிகளில் - மன முதலியவற்றில், சாற்றுந் திருட்டி விதித்து ளது-சொல்லாநின்ற உபாசனு பார்வை விதிக்கப்பட்டது, தெளி இவ்வசன மதனூடு தெரிக்கும் - தெளிந்த இத்தத்துவமசி வாக் கியம் போதிப்பது, விதி அவ்வணமிலதாம்-காரணதிருஷ்டி விதி பரம்போலன்றும், ஒளி செய்யதனுல் - இங்ஙனம் விளங்குவதால், இவ்வுரை - இத்தத்துவமசி வாக்கியம், அவ்வுரையினின்றும்-அவ் வுபாசனு வாக்கியத்தினின்றும், அன்னியம் - வேருனது.

(ப-ம்)—என்று என்னுஞ் சத்தத்தை முடிவிலுடைய பிர ஹ்ம பதத்தாற் கூறப்பட்ட பிரஹ்ம புத்தி ; மனம் சூரியன் அன் னம் முதலியவற்றில் "மனதைப் பிரஹ்மமென்று பாசிக்குக" என்பது முதலிய வசனங்களால் விதிக்கப்பட்டது. ஈண்டு தத் துவமசி வாக்கியத்தி லெனிலோ அங்ஙன மாய என்று என்னுஞ் சத்தத்தைச் சிரசிலுடைய பதத்தாற் போதிக்கப்பட்ட திருஷ்டி விதியின்று. ஆகையால் மனம் பிரஹ்மமென்னும் அந்த வாக்கி யத்தினும் இத்தத்துவமசி வாக்கியம் மிக வேறு விலக்கணமுடை யது எனப் பொருள். (56)

(அ-கை)—தத்துவமசி வாக்கியம் உபாசனுவாக்கியத்தினும் விலக்ஷணமானதால் வஸ்துநிஷ்டமாமேல் அக்கால் மனம் பிரஹ் மம் என்பது முதலிய வாக்கியங்களும் வஸ்துநிஷ்டங்களே என்ற வீண்டுக் கூறுகின்ருர்.

இரவியு மனமும் வானு முதலிய விவைத மக்கு
வுரையவை சத்துருபத் தன்மையை யுரைப்பதின்றே
பிரமத்தின் றிருட்டி யோடு பெரிதுபா சனேயே செய்யத்
திரமன முதலவைக்குத் திகழவை மொழிதலாலே. (57)

(ப-ரை)—இரவி+தமக்கு - சூரியன் மனம் ஆகாயம் அன் னம் ஆகிய இவற்றிற்கு, உரை அவை - கூறும் அவ்வுபாசனு வாக் கியங்கள், சத்து ரூபத் தன்மையை யுரைப்பதின்று - சத்துருபப் பிரஹ்ம வடிவத்தைப் போதிப்பதின்று (ஏனெனின்), பிரமத்தின்

திருட்டியோடு - பிரஹ்ம திருஷ்டியோடுங் கூடி, பெரி துபாச னையே செய்ய - முக்கியமாக உபாசனையைச் செய்ய, திகழவை - விளங்கு மவ்வுபாசனு வாக்கியங்கள், திரமன முதலவைக்கு - திரமான மனமுதலியவற்றை உபாசியென்று மொழிதலாலே - கூறுகின்றமையின்.

(ப-ம்)—மனம் பிரஹ்மம் என்பது முதலிய அவ்வுபாஸனுவாக்கியங்கள் சூரியன் மனமுதலியவற்றைச் சத்துரூப பிரஹ்மமெனக் கூறவில்லை. மற்று யாதெனின் மனமுதலியவற்றைப் பிரஹ்ம திருஷ்டியோடுங்கூடி வேறு பலனைக் கருதி முக்கியமாக வுபாசிக்கவேண்டிய தெனக் கூறுகின்றனவெனப் பொருள்.

(அ-கை)—ஆக்ஷேபம் மட்கடங்களுக்குப்போல பிரஹ்ம மனங்களுக்குப் பிரகிருதி விகிருதி வடிவ மிருத்தலின் தாதாத்மிய வுபதேசம் வஸ்து பரமாகவே ஞகாதென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்.

கரக மண்ணினிற் பிறிதிலை கருத்துமுன் னதுபோற்
பரம சத்தினிற் பிறிதிலை யெனவத்துப் பரத்வ
முரையு ஞற்றுவை யெப்பொழு தப்பொழு துனக்கு
வொருப யனுமில் விதியொலி யென்றெனு மொலியே. (58)

(ப-ரை)—எப்பொழுது - எக்கால், கரகம் - கடம், மண்ணினில் - காரணமான மண்ணினின்றும், பிறிதிலை - வேறாகவின்று, கருத்து முன்னதுபோல் - அங்ஙனம், மனமுதலியவை, பரம சத்தினில் - பிரஹ்மத்தினும், பிறிதிலை - வேருக வின்று, என- என்று, வத்து பரத்துவம் - வஸ்து பரமுடையதாக, உரை- உபாசனு வாக்கியங்களை, உஞற்றுவை - கூறுவையாயின், அப்பொழுது- உனக்கு, விதியொலிய என்று எனுமொலி - விதிசத்தமும் என்று என்ற சத்தமும், ஒருபயனு - மில் யாதொரு பயனுமின்றாயனவாம்.

(ப-ம்)—எங்ஙனங் கடமுதலிய காரியங்கள் தங்காரணமாய மண்ணினும் வேறன்றே அங்ஙனம் மனம் சூரியன் முதலியவையும் காரணப் பிரஹ்மத்தினும் வேருக வின்றென வஸ்து பரத்

தன்மை எக்காலுன்னு லங்கீகரிக்கப்படுகின்றதோ அக்கால் மனதைப் பிரஹ்மமென வுபாசிக்குக வென்னு மிவ்வாக்கியத்தில் உபாசிக்குக வென்னும் விதிசத்தமும் என்று என்னுஞ் சத்தமும் வீணுகின்றன. ஆகையால் மனம் பிரஹ்மம் என்பன முதலிய வாக்கியங்கள் உபாசனு பாத்துவமுடையவையாதலின் வஸ்து பாத்துவ முடையவை யன்று எனப்பொருள். (58)

(அ-கை)—ஆக்ஷேபம் உபாசிக்குக, என்று, என்ற சத்தங்களை நீக்கி மனம் பிரஹ்மம் என்பன முதலிய இரண்டு பதங்கள் சமான வேற்றுமையினுல் சமாஞதி கரண்யத்தை யடைகின்றன. அதனுலும் வஸ்துபரமே என்ற வாண்டுக் கூறுகின்ருர்:

மனமு தலன வேற்றுமைச் சமமரு விடலாற்
பனும்வி தியொலி யென்றெனப் பகரொலி பாறி
சனக மென்றுறுஞ் சத்தொடுஞ் சம்பந்த முறுமேன்
மனமு தலன பொய்யெனப் புடம் வழங் கியதே. (59)

(ப-ரை)—மனமுதலன -மனமுதலியவை, பனும்கூறப்படும், விதியொலி - உபாசிக்குக வென்னும் விதிசத்தத்தையும், என்றெனப்பகரொலி - என்று என்ற சத்தத்தையும், பாறி - நீக்கி, சமம் வேற்றுமை மருவிடலால் - சமான வேற்றுமையையுடையனவாதலின், சனக மென்றுறும் - காரணமான, சத்தொடும் - பிரஹ்மத்தோடும், சம்பந்த முறுமேல் - சம்பந்தத்தையடையுமாஞல், மனமுதலன - மனமுதலியவை, புடம் - நன்ருக, பொய் யென - மித்தை யென்று, வழங்கியது - கூறப்பட்டனவாகின்றன.

(ப-ம்)—ஒரே வேற்றுமையுடைமையாம் மனம் ஆதித்தன் முதலியன; விதிசத்தத்தையும் என்றெனுஞ் சத்தத்தையும் விட்டு காரணப் பிரஹ்மத்தோடும் சமாஞதி கரண்ய மடையுமேல் அக்காலம் மனமுதலியன அசத்திய மென்று வெளிப்படையாக வுன்ஞல் கூறப்பட்டதாயிற்று. இப்போது மனமுதலியவுலகு அசத்தியமெனவுன் சித்தாந்தமாகின்றது. அது வுனக் கபசித்தாந்த

மாதலின் பொருத்தமின்று. ஜடாஜடங்களுக்கு வாஸ்தவ்தா தாத்மியமின்மையா லென்பது பொருள். (59)

(அ-கை)—ஆக்ஷேபம் மனமுதலியவை பிரஹ்மத்தின் சமானுதி கரண்யமுடைமையால் மித்தையாத் தன்மையனவேல் ஜீவனும் தத்வது மசிவாக்கியத்தில் சமானுதிகரண்ய முடையதாகையால் சிரவணத்தால் எங்ஙனம் மித்தையாகாது என்று பூர்வபக்ஷி கேட்கின்றான்.

ஆகுமேற் சிவசீ வர்க்கு மதிபுட மதுவே யாகு
மேகவேற் றுமையி னாலே யியம்பது நீயென் னீது
மேகவேற் றுமையை யேயுமிவ்வுட லிறைக்கு மெவ்வா
றுகுமா றில்லை சொல்லீ ரசத்தியத் தன்மைதானே. (60)

(ப-ரை)—ஆகுமேல் - அங்ஙனமா மேல், சிவ சீவர்க்கும் - ஜீவேசுரர்களுக்கும், அதிபுடமதுவே யாகும் - மிகவெளிப்படையாக அச்சமான வேற்றுமை விளங்குகின்றது, ஏகவேற்றுமையினாலே - சமான வேற்றுமையினால், இயம்பு - கூறுகின்ற, அது நீ யென் ஈது - அது நீயா யிருக்கின்றாய் என்ற இத்னால், ஏக வேற்றுமையை ஏயும் - சமான வேற்றுமையைப் பொருந்திய, இவ்வுடலிறைக்கும் - இச்சரீரதாரியான ஜீவனுக்கும், எவ்வாறு - எவ்வேதுவால், அசத்தியத்தன்மை - மித்தையாத்தன்மை, ஆகுமாறில்லை - உண்டாகமாட்டாது, சொல்லீர் - இதனைச்சொல்லுவீராக?

(ப-ம்)—அது நீ என்று ஜீவப் பிரஹ்மங்களுக்குச் சமான விபக்தியுடைய பெயர் நன்றாக விளங்குகின்றது. அதனால் சமான விபக்தியுற்ற சரீரதாரியான ஜீவனுக்கு மனமுதலியவற்றிற்குப் போன்று அசத்தியத்தன்மை எங்ஙனமுண்டாகாது? ஆனால் உண்டாகின்றதே. அதனால் அச்சீவனுக்குச் சுருதி சித்தவிகாரமின்றிய பிரஹ்ம வடிவத்தன்மை சித்தியாதெனப் பொருள். (60)

(அ-கை)—சித்தாந்தி பிரஹ்ம சமானுதிகாரண்யம் மித்தையாத்தன்மையை யுண்டு பண்ணுவதன் றெனக் கூறுகின்றார்.

காரண மதனை யோதும் பதத்தொடு காரி யத்தை
நேரிசை பதமு மொன்று நிலைக்கள மன்னு மாயிற்
காரிய மதனின் மித்தைக் கருத்தது முதிக்கு மக்கா
லேரிமண் ணிக்கு டந்தானெனுமுரை யிவையிற்போன்றே.

(ப-ரை)—காரண மதனை யோதும் பதத்தொடு - காரண வாசகசத்தத்தோடு, காரியத்தை, நேர் - நன்றாக, இசை - கூறு கின்ற, பதமும் - சத்தமும், ஒன்றும் நிலைக்களம் மன்னுமாயின் - ஓரிடத்தை யடைதலான சமானுதிகரண்யத்தை யடையுமாயின் - அக்கால் - அப்போது, காரியமதனில் - காரியத்தில், மித்தைக் கருத்ததும் உதிக்கும் - மித்தையா புத்தியுண்டாம், ஏரிமண் இக் குடம் எனும் - இக்கடம் ஏரியின் மண் என்னும், உரையிவையில் போன்று, இந்த வாக்கியத்தில் கடத்திற்கு மித்தையா புத்தி யுண்டாவதைப் போன்று.

(ப-ம்)—காரண வாசக பதத்தோடு காரிய வாசக பதம் சமானுதிகரண்யமான சேர்க்கையை யடையுமாயின் காரியத்தில் மித்தையா ஞானமுண்டாம். அங்ஙனஞ் சீவபரங்களுக்குக் காரிய காரணத்தன்மையா மேல்மித்தையாத் தன்மை யுண்டாகும்; ஆனு லஃதின் றென்பது சித்தாந்தியின் அபிப்பிராயம். (61)

(அ-கை)—ஆக்ஷேபம் காரியகாரணங்கட்குச் சமானுதி கரண்யமிருக்குங்கால் காரியத்தில் மித்தையாபுத்தி யுண்டாகின் றது; மனமுதலிய வற்றிற்குச் சிருஷ்டிப் பிரகரணத்திற் காரி யத் தன்மை கேட்கப்படாமையின் மித்தையாத் தன்மை யுண் டாகாதென வாசங்கித்து உனது செவிட்டுத்தன்மையால் அங்கு கேட்கப்படவில்லை என்று சித்தாந்தி கேட்கப்பட்டதெனக் கூறு கின்றார்.

அளவறு முறையின் மறைகளின் மனம தாதிய
வவற்றி னுக் குள தாங், தெளிசிவ மதனி னிருந்து தித்திடுத
றெரித்திடப் படுமத னாலே, களிசமமான வேற்றுமை
யாலுட் கருத்தனங் ககனமா திகட்கு, விளிவுறும் பான்மை
பொருந்து மென்பது நேர் வெளியுதுவாய் விளங்கிடுமே.

(ப-ரை)—மறைகளில் - வேதங்களில், மனமதாதிய அவற்றினுக்கு - மனமுதலானவற்றிற்கு, அளவறுமுறையின் - அநேகந்தரம், தெளிசிவமதனினிருந்து - சுத்தபர சிவத்தினின்றும், உதித்திடுதல் - உண்டாதல், உளதாம் - உண்டென, தெரித்திடப்படும்-கூறப்படுகின்றது, அதனால்-அங்ஙனமுற்பத்திகேட்கப் படுதலினானும், களிசமமான வேற்றுமையால் - விரும்பிய சமான வேற்றுமையினாலும், உட்கருத்து - மனம், அனம் - அன்னம், ககனம் - ஆகாயம், ஆதிகட்கு - முதலான வற்றிற்கு, விளிவுறும் பான்மை - அநித்தியத்தன்மை, பொருந்து மென்பது - உண்டாகு மென்பது, நேர்வெளியதுவாய் - நன்ருக வெளிப்படையாய், விளங்கிடும் - விளங்குகின்றது.

(ப-ம்)—"மனமும் எல்லா விந்திரியங்களு மிதனினின்று முண்டாகின்றன. உண்ட அன்னம் மூன்ருகப் பகரப்படுகின்றது. அதன் ஸ்தூல பாகம் (அப்)புரீஷம் அதன் மத்திய பாகம் மாமிசம் அதின் யாதுமிகசருக்கு மமோமனமாகின்றது" என்பது முதலிய சுருதிகளில் மனமுதலியவற்றிற்குப் பிரஹ்மமான காரணத்தினின்றும் காரியத்தன்மை கூறப்பட்டமையினானும் சமான விபக்தியினானும் மனமுதலியன அசத்தியமென நன்ருக அறியத் தக்கது என்பது பொருள். (62)

(அ-கை)—"எங்ஙன மக்கினியினின்றும் தாழ்ந்த விஸ்புலிங்கங் (பொறி)களுண்டாகின்றனவோ அங்ஙனமே யிவ்வான்மாவினின்றுஞ் சர்வப் பிராணன் சர்வலோகம் சர்வ தேவதை சர்வ வேசம் சர்வபூதம் ஆகிய இச்சர்வமும் வெளிப்படுகின்றன". என்னுஞ் சுருதியால் ஜீவனுக்கு மன முதலியன போன்று பிரஹ்மத்தின் காரியத் தன்மை கேட்கப்படுகின்றமையின் மித்தையாத் தன்மை எனுண்டாகாதென வாசங்கித்து அது ஜீவனின் சொரூபவுற்பத்தியன்று ஆனல் விசிஷ்டத்தி னுற்பத்தி யென்னு மபிப்பிராயத்தினல் சித்தாந்தி கூறுகின்ருர்.

உலக காரண மாகிய சிவத்தினின் றுடலுறை யுயிர்திற்
கிலகு மாமறை யவைகளி னுற்பிறப் பியம்பிட லிலேயோ
மலமற னுதிவி காரங்க ளாருயி ரதுதனக் கதனலே
யலைவி லாதநல் லறிஞர்கள னுதின மயலென வறிவாரே.

(ப-ரை)—உலக காரணமாகிய, சிவத்தினின்றும் - பிரஹ்மத்தினின்றும், உடல் உறை உயிர் ஈதிற்கு - உடம்பிலுள்ள இந்தச் சீவனுக்கு, இலகுமாமறை யவைகளினுல் - விளங்கும் மகத்தான அவ்வேதங்களால், பிறப்பு இயம்பிடல் இலை - உற்பத்தி யாதலைக் கூறவில்லை, அதனுல் - அவ்வேதுவால், அலைமனுதி விகாரங்கள் - அலையாநின்ற மன முதலிய விகாரங்களை, ஆருயிரது தனக்கு - பொருந்திய ஜீவனினின்றும், அலைவிலாத நல்லறிஞர்கள் - சம்சார சஞ்சலமின்றிய ஞானிகள், அனுதினம் - எப்போதும், அயலெனவறிவார் - அன்னியமென அறிவார்கள்.

(ப-ம்)—சரீர வுபகிதனுன விச்சீவாத்மா சர்வவுலககாரணப் பிரஹ்மத்தால் சிருஷ்டிக்கப்பட்டதை சுருதிகளில் கூறப்படாமையின் ஜீவன் மன முதலிய காரியங்களினும் விலக்ஷணனென வித்துவான்கள் அறிகின்றுர்கள். ஆகலின் ஜீவன் மன முதலியன போன்று பிரஹ்ம சமானுதிகரண்ய னேனும் அசத்தியனன்றென்பது பொருள். (63)

(அ-கை)—ஜீவன் பிரஹ்மத்தின் விகாரமென்பது சுருதிகளிற் பிரசித்த மென்பதின்றேல் அக்காலெச்சொரூபத் தன்மையனெனப் பிரசித்த னென்னும் வேட்கைக்கு விகாரமற்ற பிரஹ்ம சொருபத் தன்மையனே யெனச் சித்தாந்தி கூறுகின்றுர்.

நோக்கும்விக் கிரகமாக நுவலுமெவ் வக்கரந்தா
ஞக்குமிவ் வம்பராதி யகிலத்தை யதுவேதன்ன
லாக்கிய சகத்தினூடு முட்செலு மதுதனக்கே
சூக்குமச் சீவனுமஞ் சுருதிக ளோதுமாதோ. (64)

(ப-ரை)—எவ்வக்கரந்தான் - எந்த அழிவற்ற பிரஹ்மம், நோக்கும் விக்கிரகமாக நுவலும்-சிருஷ்டியின் ஆரம்பத்தில் சிருஷ்டிப்போமெனப் பார்க்கும் வடிவுடையதாகக் கூறப்படுகின்றதோ, அதுவே - அப்பிரஹ்மமே, இவ்வம்பராதியகிலத்தை - இந்த ஆகாயத்தை ஆதியிலுடைய வுலகத்தை யுண்டாக்கும், தன்னுலாக்கிய - தன்னுலுண்டாக்கிய, சகத்தினூடும் - உலகத்திலும்,

உட்செலும் - ஜீவவடிவாகப் பிரவேசிக்கும், அது தனக்கே - அங்ஙனம் பிரவேசனுக்கே, சூக்குமச் சிவநாமம் - சூக்ஷமத்தன்மையனான ஜீவனென்னும் பெயருடையதாக, சுருதிகள் - வேதங்கள், ஓதும் - பிரதிபாதியா நிற்கும்.

(ப-ம்)—"அது பார்த்தது. அதுவே தேஜஸை யுண்டாக்கினது. பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னுஞ் சுருதிகளால் காண்போனான யாதொரு அழிவற்ற பிரஹ்மம் ஆகாய முதலிய இவ்வுலகை யுண்டாக்கிற்றோ அவ்வக்ஷராத்மகப் பிரஹ்மமே தன்னா லாக்கிய வுலகிற் பிரவேசித்தது. அதனால் அப்பரமான்மாவே ஜீவனென்னும் பெயரை யடைந்தது என்று "அதுவேயாக்கியனுப் பிரவேசித்தது" என்பது முதலிய சுருதிகள் கூறுகின்ற தென்பது பொருள். (64)

(அ-கை)—இங்ஙனஞ் சுருதிப் பிரமாணத்தால் ஜீவன் அவிகிருத பிரஹ்ம வடிவனேல் பிரகிருதத் (ஆரம்பித்த)தில் யாதுண்டாய தென்னும் வேட்கைக்கு ஜீவனே பரமாத்துமா வென்னும் இவ்வேதுவால் வேற்றுமை ஞான முண்டாகின்றதில்லை என்பது வந்ததென்று கூறுகின்றார்.

உரைதரு மதனி னுனே யுடலுறையுயிர் தனக்குப்
பிரமகா ரியமதென்னப் பிறிவுறு மதியதின்றும்

(ப-ரை)—உரைதருமெதனினுனே-பரமான்மாவே ஜீவவடிவாகப் பிரவேசித்ததென்னு மவ்வேதுவானே, உடலுறை யுயிர் தனக்கு - சரீரத்துற்ற ஜீவனுக்கு, பிரம காரியமதென்ன - பிரஹ்மத்தின் காரியமா யிருத்தலினுல், பிறிவுறுமதியதின்றும் - பிரஹ்மத்தினும் வேறு என்ற புத்தியுண்டாகின்ற தின்று.

(ப-ம்)—பரமான்மாவான பிரஹ்மத்தின் காரியம் ஜீவன்என்னும் புத்தியால் ஜீவன் பிரஹ்மத்தினும் அன்னியன் என்னும் ஞான முண்டாகிறதில்லை. ஜீவன் பிரஹ்மத்தின் காரியமின்றுதலினல் என்பது பொருள். $(64\frac{1}{2})$

(அ-கை)—அதனு லுனக்கு வாய்த்த பொருள் யாதெனின் ஒன்றரைச் செய்யுளாற் கூறுகின்றார்.

புரையறு மெதனி னுனே காரியம் பொருந்துருதாய்
விரிவுறும்வி பின்ன புந்தி விகற்பமா யடைந்திடாதோ.

தப்பிலத னுலீண்டிவ் வுயிர்தனக்குத் தத்வமசி முதலி னாடு, மப்பரம வான்மபத மதனேடும் வேற்றுமைய தபின மாகச், செப்பவுறும் பொய்ம்மையெனும் புந்தியது சிறிதே னுஞ் செறிந்துருதா, முப்புதக மெனவுலகி லுரைதருமவ் வுரைகளினி லுணரலாமே. (66)

(ப-ரை)—புரையறும் - குற்றமின்றிய, எதனினுன் - எவ் வேதுவால், காரியம் பொருந்துருதாய் - காரியத்தன்மையை யடையாததாய், விரிவுறும் - அநேகமாய் விரிந்த, விகற்பமாய் - வேற்றுமையோடுங் கூடியதாய், விபின்னபுந்தி யடைந்திடா தோ - ஜீவன் பிரஹ்மத்தினும் வேறு என்ற புத்தியை யடை யானே, தப்பிலதனுல் - குற்றமின்றிய அவ்வேதுவான், ஈண்டு தத்துவமசி முதலினுடும் - இங்கே தத்துவமசி முதலிய மகா வாக்கியங்களில், இவ்வுயிர் தனக்கு - இச்சீவனுக்கு, அப்பரமவா ன்ம பத மதனேடும் - அப்பரமான்ம பதத்தினேடு, வேற்றுமை யது-வேற்றுமையை, அபினமாக - சமானமாக, செப்ப-கூறுதலி னுல், உறும் - உண்டாகின்ற, பொய்ம்மை யெனும் புந்தியது- மித்தை என்னும் புத்தியானது, சிறிதேனுஞ் செறிந்துருதாம் - அற்பமேனும் பொருந்தாதாம், உலகினில் - உலகத்தில், உப்பு உதகம் என - லவணம் ஜலம் என்று, உரைதரு மவ்வுரைகளில் - கூறுகின்ற அவ்வாக்கியங்களில், உணரலாம் - சமான வேற்றுமை யோடுங் கூடின காரியத்திற்குள்ள மித்தையாத்தன்மையை.

(ப-ம்)—எதனுற் காரியத்தான் வேறு என்னு ஞான மின் மையின் அதனுற் றத்துவமசியாதி வாக்கியங்களாற் சமான வேற் றுமையாற் செய்யப்பட்ட மித்தையா புத்தி ஜீவனிடத்தின்று. அதாவது பிரஹ்ம சமானுதி கரண்யனேனும் ஜீவன் மித்தை யன்று, எங்ஙனம் லவண ஜலங்கட்குக் காரிய காரண பாவத்தால் நீரின் காரிய வுப்பிற்கு மித்தையா ஞான முண்டாமோ அங்ஙனம்

ஜீவப் பிரஹ்மங்கட்குக் காரிய காரண பாவ மின்மையின் ஜீவனுக்கு மித்தையாத்தன்மை இன்றென்பது பொருள். (66)

(அ-கை)—ஜீவன் பிரஹ்ம சமானுதி கரண்யனேனும் மித்தை யன்றெனச் சாதிக்க அவனுக்குக் காரியமாகிய விகாரத் தன்மை நிராகரிக்கப்பட்டது. அதனுனேயே சர்வப் பிரகாரத் தானும் நிராகரிக்கப்பட்டதெனச் சித்தாந்தி கூறுகின்ருர்.

பரசிவ காரி யத்வம் பாரிலிவ் வுயிர்த னக்குத்
திரமுறத் தவிரு மாறு செய்திடப் பட்ட தெத்தா
லுரைதரு மத்தா லிந்த வுடலுறை யுயிர்க்கெஞ் ஞான்றும்
பரசிவ வுருவ பேதங் கிஞ்சிலும் பற்றி டாதே. (67)

(ப-ரை)—எத்தால் - எவ்வேதுவான், பாரில் - உலகின்கண், உயிர் தனக்கு - ஜீவனுக்கு, பரசிவகாரியத்வம் - பரமான்மாவின் காரியத்தன்மை, திரமுற - திடமாக, தவிருமாறு - நீங்கும்படி, செய்திடப்பட்டது - செய்யப்பட்டதோ, உரை தருமத்தால் - கூறப்படு மவ்வேதுவான், எஞ்ஞான்றும் - எப்போதும், இந்த உடலுறை உயிர்க்கு - இச்சரீரத்துற்ற ஜீவனுக்கு, பரசிவ வுருவ பேதம் - பரமேசுவர சொருபத்தின் பேதம், கிஞ்சிலும் - அற்பமேனும், பற்றிடாது - பொருந்தாது.

(ப.ம்)—எதனு லிச்சீவனுக்குப் பிரஹ்ம விகாரத்தன்மை நிராகரிக்கப்பட்டதோ அதனுலிச்சரீரதாரியான ஜீவ பதார்த்தத்திற்குப் பரமேசுவர சொருபத்தினும் வேறு விலக்கணமுடைமை யற்பமுமின்று. ஜீவன் அவிகிருத பிரஹ்ம சொருபனெனக் கேட்கப்படுதலின் என்பது பொருள். (67)

(அ-கை)—“எப்பொழுதிவன் இதிற் சிறிது பேதத்தைச் செய்கின்ருனே அவனுக்குப் பயமுண்டாகின்றது. ஈண்டு நானா வற்பமுமின்று” எனப் பேதஞ் சிதறடிக்கப்பட்டமையின் ஜீவபரங்களுக் கற்பபேதமு மின்றென்பதைக் கேட்டு பூர்வ பக்ஷி கேட்கின்ருன்.

சீவன் றனக்குஞ் சிவந் தனக்கு மணுமாத் திரமுந் திகழ் தம்பான், மேவுஞ் சிறப்ப திலதாகி மிளிரு மாயினஞ் ஞான்றிங், காவை யதுநீ யெனல்போல விவனின்னெனவே யறைதலுறுங், தேவமறையின் றிருமொழிகளென்னே திரட்டப் புகன்றனவே. (68)

(ப-ரை)—சீவன்றனக்கும், சிவந் தனக்கும், தம்பால் திகழ்-தம்மிடத்து விளங்கும், மேவும் - பொருந்திய, சிறப்பு - விசேஷணம், அணுமாத்திரமும் - அணுவளவேனும், இலது - இன்று, ஆகிமிளிருமாயின் - இங்ஙனஞ் சிவசீவர்கள் வேற்றுமையின்றி ஒளிர்வராயின், அஞ்ஞான்று - அக்கால், இங்கு ஆவையது நீ யெனல் போல - இங்கு நீ யதுவா யிருக்கின்றாய் என்று கூறுவது போன்று, இவனின் னெனவே அறைதலுறும் - இவ்வான்மாவே நீ யென்று கூறுவதாயுள்ள, தேவமறையின்றிரு மொழிகள் - தெய்வத்தன்மையுடைய வேதாந்த மகா வாக்கியங்கள், என்னே திரட்டப் புகன்றன - எதனை யியற்றக் கூறுகின்றன?.

(ப-ம்)—ஜீவ பரங்களுக்கு அணு மாத்திரமும் பேத காரணமான சுவகத விசேஷண்ம் எக்காலின்றே அக்கால் "தத்துவமஸி" என்ற வசனமும் "இது வுனக்கு ஆன்மா அந்தர்யாமி அமிர்தம்" என்ற வசனமும் உனக்கு யாது கூறுகின்றன கூறுவாயாக. ஜீவ பரங்களுக்கற்ப பேதமு மிலதாங்கால் முன்பே வபேதமுடையன வாகும் அதனு லுபதேச மனர்த்த முடையதாகும் என்பது பூர்வ பக்ஷியின் கருத்து. (68)

(அ-கை)—சித்தாந்தி இக்கேள்வியைப் பரிகரிக்கின்றார்.

உயிரொடு பரற்குத் தம்மி லுள்ளதாம் பேதமான
தயரணு வளவ தேனு மிட்டம தாகுமாயி
னுயிரொடு பரற்குப் பேத மொழிக்குமுட் கருத்து மேய
வுயர்மொழி யவைகளாலே யொழித்திடற் கொண்ணுதன்றே.

(ப-ரை)—உயிரொடு பரற்கு - ஜீவேசுவரர்களுக்கு, தம்மி லுள்ள தாம் - தம்மிடத்துள்ளதான, பேதமானது, அயர்-சிறிய,

அணுவளவதேனும் - அணுவளவாயினும், இட்டமதாகுமாயின்- விரும்பப்படுமாயின், உயிரொடு பரற்கு - ஜீவேசுவரர்களுக்கு; பேத மொழிக்கும் - உள்ள பேதத்தை அழிக்கும், உட்கருத்து மேய - ஆந்தரதாற்பரியமுடைய, உயர்மொழி யவைகளாலே - உன்னதமான அவ்வேதாந்த வாக்கியங்களால், ஒழித்திடற் கொண்ணுதன்றே - அப்பேதம் நீக்க முடியதாகும்.

(ப-ம்)—ஜீவேசுவரர்களுக்குப் பேத காரணம் பாமார்த்தமாக வணுவளவேனு மிஷ்டமாயின் அதனைப் பரமான்மாவோடு ஜீவனுக்கு வேற்றுமையை அழிக்குங் கருத்துடைய தத்துவமசி முதலிய வாக்கியங்களினுல் நிராகரிக்க வொண்ணுதென்பது பொருள். (69)

(அ-கை)—ஜீவ பரங்களுக்குப் பேத முண்மையாமேல் அது வாக்கியத்தாற் றள்ளொண்ணு தெனப்பட்டது. இனிப் பரமார்த்த பேத நிராகரண சம்பவஞ் சாதிக்கின்றூர்.

எதன தெக்குணந் தன்னிடத் திவண்டன் னுறுமற்
றதனி னுளதன்றொரு பொழுதுமங் கதன்றன்
னுதிநிராகர ணஞ்செய லுரையினு லிலதா
மெதனினுலந்தக் குணஞ்சக சமொடிருந் திடுமோ. (70)

(ப-ரை)—எதனது - எக்குணியின், எக்குணம் - யாதொரு குணமானது, இவண் - ஈண்டு, தன்னிடத்து - குணியில், தன்னுறும் - தானே சுதந்திரமா யுண்டாயிற்றே, ஒருபொழுதும் - ஒருக்காலும், மற்றதனினு ளதன்று - வேறொன்று லுண்டானதன்றே, அங்கு - ஆண்டு, அதன் றன்னுதி நிராகரணஞ் செயல்-நிகழும் அக்குணத்தின் றன்மையைக் கெடுத்தல், உரையினு லிலதாம் - வாக்கியத்தால் இன்றும், எதனினுல் - எனெனின், அந்தக் குணம், சகசமொ டிருந்திடும் - உடன்பிறந்ததா யிருக்கின்றது.

(ப-ம்)—வியவகார காலத்தில் எப்பொருட்கு எக்குணமியல்பாகத் தன்னிடமுளதோ ஒருபோதும் அன்னியத்தாலுண்

டானதன்றே அச்சுவாபாவிக குணம் வசனத்தினல் நீக்கமுடியாது. எனெனின் அப்பேத குணம் உபாதியா லுண்டாகாமல் உடன் பிறந்தாகின்றதோ அதனுல் வாக்கியத்தால் நிராகரிக்க ஒண்ணுதென்பது பொருள். (70)

(அ-கை)—ஆக்ஷேபம், வாக்கியங் காரணமாதலினல் குணம் உடன் பிறந்ததேனும் அவ்வாக்கியங்களால் ஏன் நீக்கப்படமாட்டாதெனில் ஈண்டுக் கூறுகின்றூர்.

எதனுல் வசன மானவது மவபோ தகமாயோகு
மதனு லேயே வத்துவினை யயலா யாற்ற லணுகாதா‚ ந் [தால்
திதிநா சமதாந் தோடபய மதனுற் றிகழ்வத் தொலிவசத்
விதமார் சகச குணமதனை வீடலிலதென் பதிடமே. (71)

(ப-ரை)—எதனுல்-எக்காரணத்தால், வசனமானவது-வாக்கியமானது, அவபோதக மாயேயாகும் - உள்ள பொருளையே நன்ருக வறிவிக்கக் காரணமாமோ, அதனுலேயே - அவ்வேதுவானேயே, வத்துவினை - ஓர் பொருளை, அயலாய் ஆற்றல் - மற்ருேர் பொருளாகச் செய்ய, அணுகாதாம் - வாக்கியம் சக்தியுடையதன்று, (அ-கை)—[சத்த சாமர்த்தியத்தால் வஸ்துவே இயல்பான குணத்தை நீக்கி விடுகவெனிற் கூடாதெனக் கூறுகின்ருர்.] திகழ்வத்து - விளங்கும் பொருள், ஒலி வசத்தால் - சத்த சாமர்த்தியத்தால், திதிநாச மதாந்தோட பயமதனுல்-தனது இருப்பு நாசமாகுமென்னுந் தோஷத்தா லுண்டாம் பயத்தால், விதமார் சகசகுணமதனை - உடன்பிறந்த பேதகுணத்தை, வீடல் இலது என்பது திடம் - விடமாட்டாதென்பது சத்தியம்.

(ப-ம்)—அக்ஞாதார்த்தத்தை அறிவிப்பதாற் பிரமாண வடிவ தத்துவமசியாதி வாக்கியம்; பிரமாணங்கள் விளக்குஞ் சுபாவமாதலின் அறிவிப்பதேயாம் ஆகலின் ஜீவேசுவரர்களின் ஏகத் தன்மையைப் போதிப்பதன்றி யியற்றுங் காரணமாயின்று. எனெனின் வஸ்து சுருதி சாமர்த்தியத்தால் இயல்பாகப் பெறப்பட்ட குணபேதத்தை அனவஸ்தா தோஷ பயத்தால் விடுகிறதில்லை. உடன் ருேன்றியது கெடுமேற் றனக்குங் கேடுண்டாம்.

" இரவியின் சூடுபோன்று பொருள்களி னியல்பு போக்கொணு தாம். ஆகாயப் பூப்போன்ருகு மியல்பி னீங்கிய பொருள் " என்று சுரேசுராசாரிய ரவர்களாலு மங்ஙனங் கூறப்பட்டது. பேதஞ் சகசமாயின் நீங்காதெனப் பொருள். (71)

(அ-கை)—பேத முபாதியா லாக்கப்படின் அதன் நீக்கம் வாக்கியத்தாலா மெனக் காட்டுகின்ருர்.

எதனு லிவண மதனுலே யெழிலார் விடய குணம்விடய
மதனே டான்மா வதுதனிலே யறிவி லாதானவனுலே
யதிரோ பிதமா மப்புவின்கட் பூவின்குண மா மதுபோன்றே
யதுநீ யாவா யெனுமொழிதானதனே யழிக்கு மெனவறிநீ.

(ப-ரை)—எதனு லிவண மதனுலே - எதனுல் பேதஞ் சகச மாயின் வாக்கியத்தாற் றள்ளமுடியாதோ வதனுல், அறிவிலாதா னவனுல் - விவேக ஞானமின்றியவனுல், ஆன்மாவதுதனில்-தன் னிடத்தில், எழிலார் - அழகிய, விடயமதனேடு - விஷத்தோடு, விடய குணம் - விஷயத்தின் குணமானது, அதிரோபிதமாம் - ஆரோபிக்கப்பட் டுள்ளது, அதனை - அவ்வாரோபித குணத்தை, அது நீயாவாய் எனுமொழிதான் - நீ யதுவா யிருக்கின்ருய் என் னுந் தத்துவமசி வாக்கியம், அழிக்குமென வறிநீ - நாசமாக்கு மென நீ அறிவாயாக, (எங்ஙனமெனின்) அப்புவின்கட் பூவின் குணமாமதுபோன்று - மூடபுத்தியனுல் தண்ணீரி லாரோபிக்கப் பட்ட பூமியின் குணத்தை இது தண்ணீரின் குணமன்றென்னும் வாக்கியம் நீக்குவதைப் போன்று.

(ப-ம்)—சகச பேதம் வாக்கியத்தால் நீக்கப்படாவென்பது எதனுலோ அதனுல் அவிவேகியால் தன்னிடத்தில்விஷய்குணம் விஷயத்தோடுங்கூட ஆரோபிக்கப்பட்ட பேத குணத்தைத் தத் துவமசி யென்னும் வாக்கியந் திரஸ்கரிக்கின்றது. அஃதெவ்வா றெனின் பிருதிவியே கந்தமுடையதாதலின் தண்ணீரி லாரோ பிக்கப்பட்ட கந்த குணத்தை வாக்கியம் நீக்குவதைப் போன்று. " அகம் பிரஹ்மாஸ்மி. ஸ்தூலமற்றது. அணுவற்றது. குறிலற் றது. சத்தமற்றது. பரிசமற்றது " என்னுமிவை முதலிய வாக்கி

யங்களும் அவிவேகத்தா லாரோபிக்கப்பட்டவனுன்ம தர்மத்தைச் சிதறடிப்பனவாய் அகண்டை கரசவஸ்து பரத்துவ முடையனவேயாம் எனப் பொருள். (72)

(அ-கை)—இங்ஙனம் வாக்கியத்திற்கு வஸ்து பரத்தன்மை சித்தித்தலின் உபாசனு பரத்தன்மை யின்றெனச் சித்தித்த தெனக் கூறுகின்றூர்.

அதனு லேயே யவ்வசனந் திருட்டி விதியின் பரமன்றுந்
துதைமா குணத்தின் வாதபர மன்று துதிவாத முமலவா
மிதுதா னீண்டு தேகமுறை யியமான னுக்கு பாசியெனு
வெதனுல் விதிய தியம்பவில்லை யதனு லெனவே யறிவாயால்.

(ப-ரை)—அதனுலேயே - அகண்டவஸ்து பரத்தன்மையினுனே, அவ்வசனம் - அத்தத்துவமசி வாக்கியம், திருட்டி விதியின் பரமன்றும் - உபாசனுவிதி பரமானதன்று, எதனுல், இது தான் - இத்தத்துவமசி வாக்கியம், உபாசியெனு - நீ உபாசிப்பாயாகவென்று, ஈண்டு - இங்கே, தேகமுறை யியமானனுக்கு - தேகதாரியான ஜீவனுக்கு, விதியதியம்பவில்லை - விதி பதத்தைக் கூறவில்லை, அதனுல், துதைமா குணத்தின் வாதபரமன்ற-நெருங்கிய குணவாத பரமுமன்று, துதிவாதமு மலவாம் - துதிவாத பரமுமன்றும், எனவே யறிவாயால் - என்று அறிகுதி.

(ப-ம்)—வாக்கியம் அகண்ட வஸ்து பரத்தன்மையதாதலின் உபாசனுவிதி பரமன்று. ஏனெனின் இத்தத்துவமசி வாக்கியத்தில் ஜீவன் பிரஹ்மமென வுபாசிக்க வேண்டியதாகக் ககர முதலிய விதி பதமின்று. அதனுனேயே உபாசனு பரமும் குணவாத பரமும் நீ இந்திரனு யிருக்கின்றூய் விஷ்ணுவா யிருக்கின்றூய் என்று துதிவாத பரமுமன்று. முக்கியார்த்தஞ் சித்தித்தலின் கௌணுர்த்த கற்பனை பொருத்தமன்றென்ப தபிப்பிராயம். (73)

(அ-கை)—இங்ஙன மாகுங்கால் விபரீத போதகத் தன்மையுமின்றெனக் கூறுகின்றூர்.

உலகின் காரண மாகிய வுண்மையே வுபாதியின் வசத் தாலே, யிலகுஞ் சீவனென் றொருபெய ரிசைந்திட லாயிடு மிதனுலீண், டுலகின் காரண மெனவுரை சத்தினுக் குயிரின தருப்பான்மை, திலக மாமறை யியம்பிட லிலையெனத் தெரிந்துளந் தெளிவாயே. (74)

(ப-ரை)—உலக காரணமாகிய உண்மையே - ஜகத்காரணப் பிரஹ்மமே, உபாதியின் வசத்தால் - சரீரோபாதி வசத்தால், இலகுஞ் சீவனென்றொரு பெயரிசைந்திட லாயிடும் - விளங்கு கின்ற சீவனென்னு மோர் பெயரைப் பொருந்தும், ஈண்டு இத னல் - இவ்விடத் திங்ஙன மிருத்தலின், உலகின் காரணமென உரை சத்தினுக்கு - உலக காரணப் பிரஹ்மத்திற்கு, உயிரின தருப்பான்மை - ஜீவவடிவமாதலை, திலகமாமறை - உத்கிருஷ்ட வேதமானது, இயம்பிட லிலையென - பிரதி பாதிக்கவின்றெனெ, தெரிந்துளந் தெளிவாய் - அறிந்து தெளிந்தஉளமுடையனகுதி.

(ப-ம்)—உலக காரண பரமான்மா விரண்டு சரீரோபாதி வயத்தாற் சீவனென்னும் பெயர் பெறும் என்பதெதன லேவத னனே "காண்டற் கினியனே! இது முன் சத்தாகவே யிருந் தது" என வுலக காரணமா யாரம்பித்த பிரஹ்மம் ஜீவசொரூப மடைந்திலது. மற்று யாது கூறுகின்றதெனின் ஜீவனென்னும் பெயரை யடைந்த பிரஹ்மத்தின் இயல்பான பிரஹ்மத் தன்மை யைப் போதிக்கின்றதென்பது பொருள். (74)

(அ-கை)—இனிக் கூறப்படு மேதுவானும் வாக்கியத்திற்கு விபரீத போதகத் தன்மை யின்றெனக் கூறுகின்றார்.

அணிமாதி குணமுடைய வகிலகா ரணமான வதற்குச் சிவ, னணிரூபத் தன்மையினை யருமொழியு மறிவித்தே யனுகு மாயி, னணிமாதி குணமறைவ ததனலிங் கிவற்கு மித்தை யதுவே யாகு, முணர்வாயல் லது சீவனுருப் பான்மை யிவற்குமித்தை யுளதா மென்றே. (75)

(ப-ரை)—அணிமாதிகுணமுடைய - சூக்குமத்துவாதிகுண முடையதான, அகில காரணமானவதற்கு - உலக காரணமான

பிரஹ்மத்திற்கு, அணி - அழகிய, சீவரூபத்தன்மையினை - சீவ வடிவத்தன்மையினை, அருமொழியும் - அரிய தத்துவமசிவாக்கியமும், அறிவித்தே யணுகுமாயின் - தெரிவித்தே பொருந்தி இருக்குமாயின், அதனுல் - அவ்வேதுவான், இங்கு - ஈண்டு (தத்துவமசியாதி வாக்கியங்களால்,) அணிமாதி குணமறைவது - சூக்குமத்துவாதி குணமுடையதாகக் கூறுவது, மித்தையதுவேயாகும் - பொய்யாகும், உணர்வாய் - எனத்தெரிந்து கொள்ளுவாயாக, அல்லது - சூக்குமத்துவாதி குணமுடைமை சத்தியமெனின், இவற்கு - இப்பரமான்மாவிற்கு, சீவனுருப்பான்மை சிவசொரூபமாயிருக்குந்தன்மை, மித்தையுளதா மென்று - பொய்யாயிருக்கின்றதென, உணர்வாய் - தெரிந்து கொள்ளுதி.

(ப-ம்)—சூக்குமத்துவாதிகுண முடைய பிரஹ்மம் அவவடிவாயதென வாக்கியம் போதிக்கும் மேல் "அது இது சூக்குமமானது இவையெல்லாமிதன் வடிவம் அது சத்தியம் அது ஆன்மா" எனப் பின்னுள்ள விவை முதலிய வாக்கியங்கள் பிரஹ்மம் அணிமாதிகுண முடையதாகக் கூறுதல் பொய்யாகும். அல்லதணிமாதிகுண முடைமை புகலப்பட்டதெனின் அக்காலிப் பிரஹ்மம் ஜீவ வடிவுடையதா யிற்றென்பது பொய்யாகும். ஆகலின் பிராகிருதப் பிரஹ்மம் ஜீவத்துவமுடையதாயிற்றெனப் பிரதிபாதிப்பதன்று. (75)

(அ-லக)—இதனுனும விபரீத போதக மின்றெனக் கூறுகின்றூர்.

தேசத்தனைச் சீவன தென்றறையு
நீசத்தது வென்னுமிந் நேர்மொழியா
லாசிற்றுயிர்க் கிட்டம தாங்குடும்ப
பாசத்தை யறுத்திடல் பண்ணிலதே. (76)

(ப-ரை)—தேசு அத்தனை - சுயம்பிரகாச பரமான்மாவை, சீவனது என்றறையும் - சீவ வடிவத்தை யடைந்ததெனக் கூறும், நீ அது சத்து என்னும் - நீ அதுவாயிருக்கின்றூ யென்னும், இந்நேர்மொழியால் - இந்த நேர்மையான மகா வாக்கியத்தால்,

ஆ - ஆச்சரியம், சிற்றுயிர்க்கு - சீவனுக்கு, இட்டமதாம் - பிரிமான, குடும்ப பாசத்தை யறுத்திடல்-சம்சாரக் கட்டைச்சேதித்தல், பண்ணிலது - செய்யவில்லை.

(ப-ம்)—பரமேசுவரனைச் சீவனுகச் சொல்லு மித்தத்துவமசிவாக்கியம் இச்சீவன் விரும்புவதான சம்சாரகாரணவஞ்ஞான நாசத்தைச் செய்ததாகாது. அதனல் வாக்கியம் விபரீதத்தைப் போதிக்காதெனப் பொருள். (76)

(அ-கை)—அல்லது வாக்கியத்திலுள்ள பத சம்பந்த பரியாலோசனை யானும் விபரீத போதக மின்றெனக் கூறுகின்ருர்.

நீயா யுள்ளா யெனும்பதங்க ளிரண்டு நேர்ந்த பினமது வென், மாயா மொழியி னெடுமருவி யதுநீயெனவே மலர்ந்திடுமாந், தூயோப் பெயர்ச்சொ ருெழிலினெடுந் தொடர்ச்சி யதனைத் தொடர்ந்திலகுஞ், சாயா விதனற் சாந்தியுறும்பொழுது யோகஞ் சார்ந்திடுமே. (77)

(ப-ரை)—நீயாயுள்ளாயெனும் பதங்களிரண்டு நேர்ந்தபினம் நீ இருக்கின்ருய் யென்னு மிரண்டு பதங்களுஞ் சேர்ந்த பின்னர், அது என் மாயா மொழியினெடு மருவி - அது என்ற தத்பதத்தோடு சம்பந்த முற்று, அது நீ யெனவே மலர்ந்திடுமாம் - அது யென விளங்கும், தூயேய் - நீ பரிசுத்தனே! (இது என்னியமமெனின்,) பெயர்ச்சொல் - ஓர் பெயர்ச் சொல்லானது, தொழிலினெடுந் தொடர்ச்சியதனைத் தொடர்ந்து - ஓர் வினைச்சொல்லோடு முதலில் சம்பந்தமடைந்து, இலகும் - விளங்கும், சாயா விதனல்-கெடாத வினையோடு கூடுதலான விந் நியமத்தால், சாந்தியுறும் பொழுது-அபேக்ஷயின்றியதாகுங்கால், யோகம் சார்ந்திடும் - அது நீயாயிருக்கின்ருய் யெனப்பொருந்தும்.

(ப-ம்)—முன்னர் நீ இருக்கின்ருயென விரண்டு பதங்களும் பரஸ்பரஞ் சேர்க்கையை யடைகின்றன. பின்னவை தத்பத லக்ஷியவஸ்து நீயாயிருக்கின்ருயென அது யென்னுஞ் சத்தத்தோடு சேருகின்றன. ஏனெனின் பெயர்ச் சொல்வினைச் சொல்வினேடேயே சேருகின்றது. இஃது மென்னிமித்தமெனி

ன் இருக்கின்று யென்பது முதலிய கிரியையினல் நிரபேக்ஷையா கின்றமையின். "ஆகாங்க்ஷா வாக்கிய மனர்த்தகமாகும்" என்னு நியாயத்தால் கிரியாபத மிருக்கின் வாக்கியம் நிரபேக்ஷையாகின்ற தென்பது பொருள். (77)

(அ-கை)—கிரியா பதத்தோடுங் கூடிய வாக்கியம் பெயர்ப் பதங்களை அவாவாதெனச் சாதிக்கின்ருர்.

இயங்கா நின்ற பெயர்தசநூ றெனினுந் தொழில திலதாகி, னயங்கான் றிடுஞ்சிற் சிறிதேனு நவிலு மாற்ற லிலதாகும், வியங்கோ ளாதி யிவைகளினில் விளம்ப வுரித்தாம் விதியாதி, மயங்கா ஞான சனகமிது வெதனு லெனவே மதித்திடுநீ. (78)

(ப-ரை)—இயங்கா நின்ற பெயர் - விளங்குகின்ற பெயர்ச் சொல், தசநூறெனினும் - ஆயிரமேனும், தொழில் அது இல தாகில் - வினைச்சொல்லோடுங் கூடாததானல், நயங் கான்றிடுஞ் சிற்சிறிதேனும் - நன்மை பயப்பதாயவற்பப் பொருளையேனும், நவிலு மாற்றவிலதாகும் - கூறுஞ் சாமர்த்திய முடையதாகாது, எதனல், விதியாதி - விதி ஆசீர்வாத முதலியன, மயங்கா ஞான சனகம் - உண்மை ஞானகாரணம், இது, (அதனல்), வியங்கோ ளாதி யிவைகளில் - வியங்கோள் விகுதி முதலியவைகளினல், விளம்ப வுரித்தாம் - பொருளைக் கூறச்சமர்த்தமாம், . எனவே, நீ மதித்திடு-நிச்சயஞ் செய்வாய்.

(ப-ம்)—வாக்கியம் வினைச்சொல்லோடு கூடாதாயின் அக் கால் பெயர்ப்பத மனேகமேனும் சிறிது பொருளையேனு நவச் சமர்த்துடைத்தன்று. மற்று நவலுஞ் சமர்த்துடைத்து யாதெனின் வாக்கியத்துள்ள பதங்களினிடையில் ஆசீர்வாதம் ஏவல் என்பனவற்றை யுணர்த்தும் விகுதி அல்லது இருக்கின்ருய் இருக்கின்றேன் என்பது முதலிய வினைப்பதம் யாதானுமோர் பொருளைக் கூறுவதாம். ஏனெனின் அவ்விகுதியாதியே விதி நிஷேதப் பொருளின் ஞானத்தை யுண்டுபண்ணுவதாம். ஆகை யால் வாக்கியத்துள்ள பதங்களின் சம்பந்தக் கிரமவாராய்ச்சியால் விபரீத போதகமின்றெனப் பொருள். (78)

(அ-கை)—முன்னர் நீ இருக்கின்றாய் என்றிரண்டு பதங்க ளும் பரஸ்பரஞ் சேர்க்கையை யடைகின்றனவென்ற விவ்வர்த்தத் தை பாணினீய சூத்திர வுபமானத்தாற் றிடப்படுத்துகின்றார்.

நீயெனு மதனி லேயே முன்னிலை நியம மாகத்
தூயவின் முனியுஞ் சாரச் சூத்திரத் தருளி னானிங்
காயநல் லதனி னானீ யசியெனும் பதங்கண் முன்ன
மேயபின் னசியி னோடு மதுவெனன் மிசிர மாமே. (79)

(ப-ரை)—தூயவின் முனியும் - சர்வக்ஞானபாணினி மக ரிஷியும், நீ யெனு மதனிலேயே - நீ என்னுஞ் சத்தத்தோடே யே, முன்னிலை - இருக்கின்றாயென்பது முதலிய முன்னிலை வினைச்சொல்லானது, நியமமாக - எப்போதும், சார - சேர வேண்டுமென, சூத்திரத்தருளினான் - வியாகரண சூத்திரத்திற் கூறியிருக்கின்றார், இங்கு ஆய நல்லதனினால் - ஈண்டு அங்ஙன மகரிஷியாற் கூறப்பட்டிருத்தலின், நீ அசி என்னும் பதங்கள் முன்னம் ஏய - நீ இருக்கின்றாய் என்னுமிரண்டு பதங்களும் பரஸ் பரஞ் சேர்க்கையை முன்னடைந்து, பின்-பின்னர், அசியினோடு- இருக்கின்றா யென்னும் பதத்தோடு - அது வெனன் மிசிரமாம், அது என்னும் பதம் சேர்க்கையுறும்.

(ப-ம்)—பாணினி பகவானும் முதலில் இருக்கின்றாய் ஆகின்றாய் என்பன முதலிய வினைப்பதங்களை "உன்னில் உப பதஞ் சமானாதி கரணத்தில் ஸ்தானியிலும் மத்தியமம்" என்னு மிச்சூத்திரத்தால் நியமமாக நீ யென்னும் பெயர்ப்பதத்திலேயே சேர்ப்பிக்கின்றார். ஆகலின் முன்னர் நீ இருக்கின்றாயென வீர ண்டு பதங்களுஞ் சேர்க்கையுற்றுப் பின்னர் இருக்கின்றா யெனும் பதத்தோடு அது வெனும்பதஞ் சேருகின்றது எனப் பொருள்.

(அ-கை)—நீ இருக்கின்றா யென்றிரண்டு பதங்களின் சம் பந்தத்தின் பின்னரே அதுவா யிருக்கின்றாயென விரண்டு பதங்க ளின் சம்பந்தம் என்ற விதற்கு யுக்தியைக் கூறுகின்றார்.

தனயன் குருவா லெஞ்ஞான்று சாற்றப் படுவனீயாவா, யெனவிங் கென்ன வேனருளர் லியம்பா யென்ன வஞ் ஞான்றே, வினவ வேட்கை தனையுறுவன் விளம்பு மணிமா தியகுணமார், கனவுண் மையதே யாவாயென் றருளுங் கருணைக் கடலுனே. (80)

(ப-ரை) — எஞ்ஞான்று - எக்காலத்து, குருவால், தனயன் - சீடன், நீ ஆவாய்-நீ இருக்கின்றாய், எனச் சாற்றப்படுவன்-என்று கூறப்படுகிறானோ, அஞ்ஞான்று - அக்காலத்து, இங்கு - இச்சம் சாரத்தில், என்னவேன் - எதாகவிருக்கின்றேன், அருளால் - கிருபையால், இயம்பாயென்ன - தேவரீர் திருவாய் மலர்ந்தருள் வீராகவென, வினவவேட்கைதனையுறுவன்-கேட்கும் பிரியமுடை யவனுவன், (அவனுக்கு) கருணைக்கடல் - கிருபைக்கடலான குரு மூர்த்தியானவர், விளம்பும் - சுருதியிற் பிரதிபாதியாகின்ற, அணிமாதிய குணமார்-சூக்ஷ்மத்துவ முதலிய குணங்களுடைய கன உண்மையதே ஆவாய் - ஏகமாய் சத்தியமாயிருக்கும் பிர ஹ்மமாகிய வதுவேயாயிருக்கின்றாய், என்று அருளும் - என்று உபதேசித்தருளுவர்.

(ப-ம்) — குருவாற் சீடன் நீ இருக்கின்றா யெனப் போதிக் கப்படின் அக்கால் யான்யாதாயிருக்கின்றேன் அதனை யருளல் வேண்டுமென எதிர்முகமாகின்றான். பின்னர் குருமூர்த்தி "இது முன் சத்தாகவே இருந்தது" எனத்துடங்கப்பட்ட அணிமாதி குணங்களையுடைய அந்தப் பிரஹ்மமாயிருக்கின்றாய் என்று உப தேசித்தருள்கின்றாரென்பது பொருள் (80)

(அ-கை)--வாக்கியம் விபரீத போதகஞ் செய்வதன்றென்ப தையு பசம்மரிக்கின்றார்.

நீயெனுந் தொனியி னுலே நிகழ்த்திடு மதற்கு மெத்தா
லேயது வென்னும் வேதவிரும் பொருட் டன்மை தன்னை
யாயநன் மொழியும் போதிப்பித்திடு மதனி னுனே
நேயசத் ததற்குச் சீவத் தன்மையை நிகழ்த்தி டாதே. (81)

(ப-ரை)—ஆய நன்மொழி - நன்மை பயப்பதாய தத்துவ மசி வாக்கியம், எத்தால் - எவ்வேதுவால், நீ யெனுந் தொனியி ஞலே நிகழ்த்திடுமதற்கு - நீ யென்னுஞ் சத்த வாச்சியஞன ஜீவ னுக்கு, அதுவென்னும் - அதுவெனப் படுவதான, வேதவிரும் பொருள் தன்மை தன்னை - வேதப் பிரதிபாத்திய பெருமை வாய்ந்த பரமாத்மாவின் தன்மையை, போதிப்பித்திடும் - அறி வித்திடுமோ, அதனிஞன்-அவ்வேதுவால், நேயசத்ததற்கு-விரு ம்பத்தக்க சத்தான பிரஹ்மத்திற்கு, சீவத்தன்மையை - சீவவடி வத்தை, நிகழ்த்திடாது - கூறமாட்டாது.

(ப-ம்)—எதஞல் தத்துவமசி வாக்கியம் நீ யென்னுஞ் சத் தப்பிரதி பாத்தியமான துவம்பத லக்ஷிய பிரத்தியகான் மாவைப் பிரஹ்ம வடிவாகக் கூறுகின்றதோ அதஞல் சத்துரூபப்பிரஹ்மம் துவம்பத வாச்சிய வடிவமெனக் கூறவில்லை. ஆகையாற்றத் துவ மசிவாக்கியம் விபரீத போதகமு மன்றென்பது பொருள் (81)

(அ-கை)—சீவனெப்போதும் விகார மற்ற பிரஹ்ம வடி வனே வுபதேசிக்காமலே தனது விகாரமற்ற பிரஹ்மவடிவத்தை என் அறிகின்ருனின்றெனயாது பூர்வ பக்ஷியிஞற் பூர்வங் கூறப் பட்டதோ அதைப் பரிகரிக்கின்ருர்.

சீவன்றனது விந்தியங்க ளெந்த ஞான்றுஞ் சிறுவிடய
மேவியலையு மியல்பாயே யதஞ லிவன்றன் மிளிருருவ
மாவவறிவ திலனதஞ லதுநீ யசியென் மொழியாலே
மேவவறிவித் திடப்படுமென் றுளத்தின் மிசையே கொள்
[ளுதியால்.

(ப-ரை)—எந்தஞான்றும் - எப்போதும், இயல்பாய் - சுபா வமாக, சீவன்றனது விந்தியங்கள் - சீவனது போகசாதனமான காரணங்கள், சிறுவிடயம் மேவி - அற்ப விடயங்களைச் சுகசாதன மெனக்கருதிப்பற்றிக் கொண்டு, அலையும் - நாய் எலும்பு கொண் டலையுமாறு வழலும், அதஞல், இவன்றன் மிளிருருவம் - இச் சீவனது சுயம் பிரகாச பிரஹ்ம வடிவத்தை, ஆவ - ஆச்சரியம், அறிவதிலன் - அறிகின்றிலன், அதஞல் - அறியாமையால், அது

நீ அசி என் மொழியாலே - அது நீ யாயிருக்கின்றாய் என்னுந் தத்துவமசி வாக்கியத்தால். மேவ - மனஞ் சம்மதிப்ப, அறிவித்திடப்படும் - அவனுக்குப் பிரஹ்மம் அறிவிக்கப்படுகின்றது, என்று, உளத்தின் மிசையே கொள்ளுதியால் - மனதில் நிச்சயிப்பாயாக-

(ப-ம்)—ஜீவனது விந்திரியங்களியல் பாகவே யெப்பொழுதும் விடயத்தை நோக்கிச் செல்கின்றன. அதனாலிச் சீவன் றனது வியல்பான பிரஹ்ம வடிவத்தை யறிகின்றிலன். ஆகையாற்றத் துவமசியாதி வாக்கியத்தாலு பசாந்த சித்த முடையானுக்குப் பிரஹ்மம் போதிக்கப்படுகின்ற தென்பது பொருள். (82)

(அ-கை)—முக்குணுத் மகவிந்திரியங்கள் அனுன் மாவை விஷயமாக்குகின்றமையின் ஜீவன் தனது பிரஹ்மத் தன்மையை யுபதேச மின்றி யறியமாட்டானென யுக்திகூறி இனி விந்திரியங்கள் வெளிமுகமுடையன என்பன முதலிய சுருதி வாக்கியங்களும் ஈண்டுப் பிரமாண மெனக் கூறுகின்றார்.

வெளிமுக முதலவாக வெகுமறை வசனத்தோடு
முளம்விட யமதி னுவாய் நதியினி லுடற்றல் போல
வுளமது தன்னு லைந்து பொறியொளி யொடுக்கல் போன்ற
வளவறு மிருதி யீதின் மானமென் றறி திநீயும். (82)

(ப-ரை)—வெளிமுக முதலவாக-வெளிப் பார்வையையுடையனவாக வென்பது முதல், வெகு மறை வசனத்தோடும் - அநேக வேதவசனப் பிரமாணத்தோடும், நாவாய் - படகை, நதியினில் - ஆற்றில், உடற்றல் போல - காற்று இழுத்துச் செல்லுவது போன்று, விடயமதில் உளம் - விடயத்தைக் கருதுகின்ற மனம், (என்றும்) உளமது தன்னுல் - மனதால்; ஐந்து பொறியொளி யொடுக்கல் - ஐந்திந்திரியங்களின் ஞானத்தை யடக்குதல், (என்றும்), போன்ற - (இவை) போன்ற, அளவறுமிருதி - அநேக ஸ்மிருதியும், ஈதின் - ஈதற்கு, மான மென்றறிதிநீயும் - பிரமாண மென நீ அறிவாயாக:

(ப-ம்)—இப்பொருளில் "சுயம்பு இந்திரியங்களை வெளி முகமாகப் பீடித்தார் ஆகையால் வெளி நாட்டமுடையன ஆன்மாவை யன்று, என்பன முதலியவைதிக வாக்கியங்களும், "எங்ஙனந் தண்ணீரிலுள்ள ஓடத்தைக் காற்று இங்கு மங்கு மலைக்கின்றதோ அங்ஙனம் விஷயங்களிற் செல்லுகின்ற விந்திரியங்களின் பின் வெளி விஷயங் குறித்தும் மனஞ் செல்லுகின்றதோ அது விந்த நிர்ப்பாக்கிய புருஷனது பிரக்ஞையை யழிக்கின்றது. ஆகையா லெவனது விந்திரியங்கள் வெளிவிஷயங்களினின்று மடக்கப்பட்டனவோ அந்தப் பரம விரக்தசன்னியாசிக்குக் குருவாலுபதேசிக்கப்பட்ட வித்தை நன்றாய் நிலைத்துப் பல முடையதாகின்றது.'' என்று பரம குரு பகவான் வாக்கியமான ஸ்மிருதியும் பிரமாணமாம் "மனதோடும் இந்திரிய சமூகத்தை சர்வதேசத்தினின்றுந் திருப்பித்தைரியமுடைய புத்தியினால் மெள்ள மெள்ள அடக்கவேண்டும்'' என்னும் வாக்கியம் உளமது தன்னாலைந்து பொறியொளி யொடுக்கல் எனச் சூசிப்பிக்கப்பட்டது, இந்திரியங்கள் வெளி விஷய முடைமையானும் அனாதி அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டமையானும் ஜீவனது பிரஹ்ம வடிவத்தன்மையின் உபதேச மின்றி அறியப் படுவதின் றென்பது பொருள். (83)

(அ-கை)—ஆக்ஷேபம் ஜீவன் மூன்று காலமும் பிரஹ்ம வடிவனேல் இக்கற்பனை யுண்டாகாது. ஆதலின் அஃதன்றென வாசங்கித்து ஜீவனுக்குப் பிரஹ்மத் தன்மை எப்போது முண்டென்பதிற் சுருதியைப் பிரமாணிக்கின்றார்.

இம்மாத் திரத்திற் பேதமுளதினிய வுயிர்க்குப் பரமான்ம, சின்மாத் திரத்தி னுடுமெனவே செப்பாதிதனை யொழிந்திடுநீ, நன்மாத் திரத்தை யுபதேச நவிலுமுனம் பின் னனந்தலையுஞ், சன்மாத் திரத்தி னிவனயலன் றெனவே சாற்றக் கேட்பதனால் (84)

(ப-ரை)—இம்மாத்திரத்தில் - இவ்வளவு பிரமாண மாத்திரத்தால் - இனிய வுயிர்க்கு - இனிய ஜீவனுக்கு, பரமான்ம

சின்மாத்திரத்தினெடும் - சைதன்னியவடிவ பரமான்மாவோடு, பேதமுளது, எனவே - என்று, நீ இதனைச் செப்பாது ஒழிந்திடு - நீ இப்பேதத்தைக் கூறாது ஒழிவாயாக, நன் மாத்திரத்தை - பெருமையுடைய ஜீவபரங்களின் ஐக்கியத்தை - உபதேசம் நவிலு முனம் - உபதேசிப்பதற்கு முன்னும், பின் - பின்னரும், நனந்தலையும் - மத்தியிலும், இவன் - இச்சீவன், சன் மாத்திரத்தின் - சத்தா மாத்திர பிரஹ்மத்தினும், அயலன்றெனவே - அன்னிய னன்றெனவே, சாற்றக் கேட்பதனால் - சுருதி கூறக் கேட்கப்படுவதனால்.

(ப-ம்)—இப்பிரமாண மாத்திரத்தான் ஜீவன் பிரஹ்மத்தினன்னிய னன்றெனக் கூறத்தக்கதன்று. உபதேசத்தின் முன்னும் பின்னும் மத்தியுமாகிய மூன்று காலத்திலும் ஜீவன் பரமான்மாவினு மனன்யனாக "பிரஹ்மமாகவே யிருந்துகொண்டு பிரஹ்மத்தை யடைகின்றான். விமுக்தனும் விடுபடுகின்றான்" என்னுஞ் சுருதியாற் கேட்கப்படுகின்றான், ஆகையாற் சீவன் பரமான்மாவினு மற்பமு மன்னியனன்றெனப் பொருள். (84)

(அ-கை)—அங்ஙனமா மேல் எப்போதும் பிரஹ்மமாயிருத்தலும் உபதேசத்தை விரும்புதலும் ஜீவனுக்கு விருத்தமெனவாசங்கித்து அவ்விரண்டு மவிரோத மெனத்திருஷ்டாந்தத்தோடுங் கூறுகின்றார்.

விரும்பிக் குருபோதனை யான்ம விமல ஞானம் பரம்
பொற் சிவத் தன்மையு மென்றும் பகைய தின்றாய்க், குரம்
பைக் குளனுக்கிவ் விரண்டையுங் கூறலாகுந், தரம்பெற்
றவிரகு நந்தனன் றன்னின் மாதோ. (85)

(ப-ரை)—குரு போதனை விரும்பி - ஆசாரியனுபதேசத்தின் அபேக்ஷையால், விமல ஆன்மஞானம் - பரிசுத்த ஆன்மாவின் யதார்த்த ஞானமும், பரம்-மேலான, பொன்-அழகிய, சிவத்தன்மையும் - எப்போதுஞ் சிவமாயிருத்தலும், என்றும் - எக்காலத்தும், பகையதின்றாய் - விரோத மின்றி, குரம்பைக் குளனுக்கு - சரீர தாரியான ஜீவனுக்கு, இவ்விரண்டையுங் கூறலா

கும் - உபதேசவபேக்ஷையும் எப்போதுஞ் சிவமாயிருத்தலுமாகிய இவ்விரண்டையும் கூறலாகும், [எங்ஙனமெனின்] ரகுநந்தனன் ராமபிரான், தாம் பெற்ற அரிதன்னில் - மேலாகிய விஷ்ணுத் தன்மையை அடைந்தாற்போல.

(ப-ம்)—சுருதி யுபதேசம் ஆசாரிய வுபதேசம் ஆகிய இவைகளினால் தனக்குப் பிரஹ்மஞானமும் மூன்று காலத்திலும் பிரஹ்மமாயிருத்தலும் ஆகிய இவ்விரண்டும் ஜீவனுக்கு அவிரோதமெனக்கூறத்தக்கது. எங்ஙன மெனின் ஸ்ரீராமருக் கெப்போதும் விஷ்ணுத் தன்மையிருப்பினும் ராவண சம்மாரப் பொருட்டு மித்தையான மனிதவுபாதி வசத்தால் நான் தசரதருடைய புத்திரனாராமனாயிருக்கின்றேன் எனச் சரீர வபிமானியாய்த் தனது விஷ்ணுத் தன்மையை யறிகின்றிலர், இராவண சம்மாரானந்தரம் ஆகாயத்தில் பிரஹ்மாதி தேவதைகள் கூடித் துதித்தலான காரணத்தினால் இராமருடைய விஷ்ணுத் தன்மையை யறிவித்தார்கள். அக்கால் ராமர் தனது விஷ்ணுத்தன்மையை நன்று யறிந்தவரானார். அங்ஙனமே ஈண்டு முபதேச வேட்கையாற் பிரஹ்மத் தன்மை யறியப்படுகின்றதெனப்பொருள். (85)

(அ-கை)—இங்ஙனம் வாக்கியம் அகண்டை காரசவஸ்து பரமாயதெனப்புகன்று இனிச்சிம்மாவ லோகன நியாயத்தால் உபாசனாவிதிபர மென்பதையனுவதித்துத் தூஷிக்கின்றார்.

சத்துபா சனையு யிர்க்கு விதித்திடுந் தகைமைத்தாயே
மெத்துரைக் கருத்த மெற்கு மிளிர்ந்திடு மதனினானே
சித்துயிர் பிரமரூபத் தன்மையைச் செறியவேபோ
தித்திட விலையென் முன்னந் தெரித்தது தெளிவின் றுமால்.

(ப-ரை)—உயிர்க்கு - சீவனுக்கு, சத்து பாச - பிரஹ்மோபாசனையை, விதித்திடுந் தகைமைத்தாய் - விதிக்குந் தன்மையதாய், மெத்து உரைக்கு-உயர்ந்த மகாவாக்கியத்திற்கு, அருத்தம் எற்கு மிளிர்ந்திடும் - பொருள் எனக்கு விளங்குகின்றது, அதனினான் - அவ்வேது வான், சித்துயிர் - சித்துவடிவ சீவன், பிரமரூபத் தன்மையைச் செறிய - பிரஹ்ம வடிவத் தன்மையைப்

பொருந்தும் பொருட்டு, போதித்திடவிலை - மகாவாக்கியம் கூற வில்லை, என் - என்று, முன்னந் தெரித்தது - முன் கூறப்பட்ட ஆக்ஷேபமானது, தெளிவின்றுமால் - சுருதி சுவானுபவங்களை நிச்சயித்துக் கூறுங் கூற்றன்றும்.

(ப-ம்)—இத்தத்துவம சிவாக்கியம் உபாசனையை விதிப்ப தாக எனக்கு விளங்குகின்றமையின் ஜீவனுக்குப் பிரஹ்ம வடிவத் தைப் போதிப்பதின்றெனப் பூர்வவாதியாது பூர்வங் கூறினனே அது பொருத்தமின்றிய தென்பது பொருள்.

(அ-கை)—எதனாலுபாசனை விதிபரத்துவமின்றெனின் விதி பதங் கூறப்படாமையானெனச் சித்தாந்தி கூறுகின்றார். (86)

சத்து யாசியென் றிவண்மறை சாற்றுத லுனக்கின்
றத்து நீயென விம்மறை யறைந்திடு மதனாற்
சத்து பாசனைக் கருமத்தின் விதிநசைத் தகைமை
மெத்த வேயிலை யென்பது மித்தையன் றுணர்நீ (87)

(ப-ரை)—இவண் - ஈண்டு, மறை - இத்தத்துவமசிவாக்கி யத்தில், சத்துபாசியென்று-பிரஹ்மத்தை உபாசிப்பாயாகவென, உனக்கு, சாற்றுதல் - கூறுதல், இன்று - இன்றும். (ஏனெனின்) அத்துநீயென - அது நீயாயிருக்கின்றுயென்று, இம்மறையறைந் திடுமதனால் - இத்தத்துவமசிவாக்கியங்கூறுவதனால், (ஆகையால்) சத்துபாசனைக் கருமத்தின் - பிரஹ்மோபாசனகருமத்தினது, விதிநசைத்தகைமை - விதியை விதிக்கும் விருப்பம், மெத்தவே யிலையென்பது - அக்கியந்தம் இம் மகாவாக்கியத்திற்கின்றென்று யாது எம்மான் முற்கூறப்பட்டதோ அது, மித்தையன்று - சத் தியமென, உணர் நீ - நீ உணர்வாயாக.

(ப-ம்)—இத் தத்துவமசிவாக்கியத்தில் சத்தையுபாசிப்பா யாக வென விதிபதங் கேட்கப்படவில்லை; மற்றியாதெனின் அதுவாக நீ இருக்கின்றாய் என உள்ளதை யுபதேசிப்பதான சுரு தியே யுண்டு. ஆகலின் பிரஹ்மத்தை உபாசித்தலான பிரஹ் மோபாசனகர்மத்தை விதிப்பதன்றென்பது பொருள். (87)

(அ-கை)—விதிபதங் கேட்கப்படாமையான் உபாசனுபரத்துவ முடையதன்றெனின் அக்கால் விதிபதஞ் சேத்துக்கொள்வேமெனின் ஆண்டுக் கூறுகின்ருர்.

அதனினல் வரவை யெவணிருந் தேனு மாற்றிடப் படுமென வாயி, னதுபயன் சிறிதுந் தருவதிங் கிலெ புன் னலெமனப் புருடனு லுஞற்று, மதுதனக் கெதனுன் மறையினற்றகைமை யணுகிட வில்லையா மெனவே, முதுமறை யறியுமுதுவர்தம் மொழியு முளதெனமனந்தனி னுணரே. (88)

(ப-ரை)—அதனின் - அவ்விதிபதத்தினது, நல்வரவை - நன்ருகக் கொண்டுவருதலெ, எவணிருந்தேனும் - எவ்விடத்தினின்றேனும், ஆற்றிடப்படுமெனவாயின் - செய்யப்படுகின்றதெனின், எதனுன் - எக்காரணத்தால், புன்னலெப் புருடனுலுஞற்றும்-அற்பத்தன்மையனுன புருடனுற் செய்யப்படும், அது தனக்கு - விதிபதத்தோடுற்ற அவ்வாக்கியத்திற்கு, மறையினற்றகைமை - நல்ல வேதத் தன்மையானது, அணுகிடவில்லையாம்-பொருதலின்ரும், (அதனுல்) அது பயன்சிறிதுந்தருவதிங்கிலெ-ஈண்டு அதுபயனெ அற்பமேனுந் தருவதின்ரும், எனவே-என்று, முதுமறை யறியும் - அனுதிவேதத்தை யுணர்ந்த, முதுவர்தம் மொழியுமுளதென - புருடனுற் செய்யப்பட்ட வாக்கியம் பலன்றராதென்று முனிவாது வாக்கியமுமுண்டென, மனந்தனிலுணரே - மனதிற் கருதுவாயாக.

(ப-ம்)—அவ் விதிபதத்தை யாண்டிருந்தேனுங் கொணர்ந்து இத்தத்துவமசிவாக்கியத்திற் சேர்த்துக்கொள்வேமெனின் அக்கால் அவ்விதிவதம் அனர்த்தமுடையதேயாகும். எனெனின் வேதம் அபௌர்ஷேயமாதலின் புருடனுற் செய்யப்பட்டதற்குச் சுருதித்தன்மையின்று என வேதத்தை யுணர்ந்தவாது அபிப்பிராயமாம். ஆகலின் விதிபதத்தைக்கொண்டுகூட்டலான அத்தியாகாரஞ் செய்தல் பொருத்தமின்றென்பது பொருள். (88)

(அ-கை)—ஆக்ஷேபம் அங்ஙனமேனும் வாக்கியத்தின் பரிபூர்த்திக்குக் காரணமாதலின் கொண்டு கூட்டல் எங்ஙனம் அனர்த்த முடையதாகுமெனிற் கூறுகின்ருர்.

இந்தநன் மொழியுந் தன்னரும் பொருளை யின்புறப் புருடனின் பொருட்டாய்ச், சந்தத மறிவித்திடுவதற் கரிய சமர்த்தமென் னின்றடா வெதனுன், மந்திர மறைய தறைந் திடா திருந்து மற்றிடத் திருந்தொரு விதியின், றந்திர வரவை யுன்றனுன் மிகவுந்தகுந்திடப் புரிந்திடப் படுமே.

(ப-ரை)—அடா - அடே ! இந்த நன்மொழியும் - இம்மகா வாக்கியம், தன்னரும்பொருளை - தனதருமைவாய்ந்த வர்த் தத்தை இன்புற - வருத்தமின்றி, புருடனின் பொருட்டாய் - முமுக்ஷுவான புருடனின் பொருட்டு, சந்ததம் - என்றும், அறி வித்திடுவதற்கு - போதிப்பிக்க, சமர்த்தம் என் இன்று - சாமர்த் திய முடையதன்றுவென்ன? மந்திரமறையது அறைந்திடாதிரு ந்தும் - இரகசியமான வேதங் கூறாதிருந்தும், ஒரு விதியின் - ஒப்பற்ற அத்தியாகார விதியால், மற்றிடத்திருந்து - வேறோ ரிடத்தினின்றும், தந்திரவரவை - வேதவாக்கியத்தின் கொண்டு கூட்டலை, உன்றனுல் - உன்னுல், மிகவும், தகுந்திடப் புரிந்தி டப்படும், தகுதியாகச் செய்யப்படுகின்றது, எதனுல், (அதனு லென்றவண்ணம்.)

(ப-ம்)—அடே என்றது தாழ்ந்த விளி, இத்தத்துவமசிவாக் கியந் தனது அருத்தமான பிரத்தியக் பிரஹ்மங்களின் ஏகத்தன் மையை அதிகாரிக்குப் போதிக்கச் சாமர்த்தியமற்றதா? எச்சா மர்த்தியமின்மையாற் கேட்கப்படாவிடினும் விதிபதத்தின் அத் தியாகாரஞ் செய்யப்படுகின்றதோ அச்சாமர்த்தியமற்றதாவென ஆக்கிரகம். ஆகலின் விதிபதமின்றேனும் அருத்த பரிபூர்த்தி யாகின்றமையின் விதிபதத்தின் அத்தியாகார வபேக்ஷையின் றென்பது பொருள். (89)

(அ-கை)—விதிபதாத்தியாகார வபேக்ஷையின்றென வே றேதுவைக் கூறுகின்றூர்.

சுருதநன் மொழியை யொழித்திவண் மீண்டுச் சுருதமி லாதகற் பனையுஞ், சுருதியின் பொருளைக் கற்றநற் றவர்கள் சொற்றசம் மதமதன் றதனுற், சுருதியிற் பிரிய முறுமரி யவனுற் சுருதியின் வதனமின் றெழலே, யரிதுற வுளத்திற் கொள்ளறெள் ளிமையா மகத்தெழல் கொளவெறெளி வலவே.

(ப-ரை)—இவண் - ஈண்டு, சுருதநன்மொழியை யொழித்து - கேட்கப்பட்ட நல்ல வசனத்தை நீக்கிவிடுதலும், மீண்டு-பின்னரும், சுருதமிலாத கற்பனையும் - கேட்கப்படாததைக் கற்பித்தலும், சுருதியின் பொருளைக்கற்ற - வேதார்த்தத்தை யுணர்ந்த, நற்றவர்கள் சொற்ற - நல்ல தவ சிரேஷ்டர்கள் கூறுகின்ற, சம்மதமதன்று - சம்மதமும் அதுவன்று, அதனால், சுருதியிற் பிரியமுறும் அரியவனல்-வேதத்திற் சிரத்தையுடைய முமுக்ஷுவால், சுருதியின் வதனநின்றெழலை-சுருதியின் முகத்தினின்று முண்டானதையே, அரிதுறவுளத்திற்கொள்ளல் - அன்போடு மனதிற்கொள்ளுதல், தெள்ளிமையாம் - தெளிவுடைமையாம், அகத்து எழல் கொளல் - மனதிற்றோன்றியவண்ணங் கொள்ளுதல், தெளிவல - ஒழுங்கன்று.

(ப-ம்)—விதிபதாத்தியாகார பக்ஷத்தில் இதுவும் பெரிய தோஷமாம் கேட்கப்பட்ட பொருளின் நீக்கமும் கேட்கப்படாத வருத்த கற்பனையும் வேத வித்துக்களின் சம்மதமன்று. ஆகலின் சுருதியிற் சிரத்தையுடையோனுல் சுருதி கூறியவண்ணங் கொள்ளவேண்டுமன்றித் தனது புத்தி நிச்சவண்ணங் கூடாதென்பது பொருள். (90)

(அ-கை)—தத்துவமசிவாக்கியத்தில் விதிபதங்கேட்கப்படாமையானும் விதிபதத்தைச் சேர்த்தலு நியாயமின்மையானும் அவ்வாக்கியம் உபாசனவிதிபரமன்று. ஆயின் அகண்டைகாசவஸ்து பரமானது என விவ்வளவாற் சாதிக்கப்பட்டது. ஆண்டிஃதா சங்கையாம் தத்துவமசிவாக்கியம் வஸ்து பரமாயின் வஸ்து கொள்ளவும் தள்ளவும் விஷயமாகாமையின் வாக்கியம் புருஷார்த்தமின்றாயதாகும் விதிபரமாயினே புருஷரின் பிரவிருத்தி பிரயோஜனமாம்.எனெனின் பிரயோஜனம் பிரவிருத்தி நிவிருத்திகளாற் சாதிக்கப்படுதலினலாம்.என்பது பொருத்தமின்றியதெனச் சித்தார்த்தவாதிகள் நினைக்கின்றவர்களாய் வாக்கியம் வஸ்துபரத்தன்மையதேனும் சர்வ அனர்த்தகாரண அஞ்ஞான நிவர்த்தியான பரம புருஷார்த்தகாரணமாக நினைக்கின்றார்களெனச் சித்தாந்தி கூறுகிறார்.

மருமறை புருடன் றனக்குவெஞ் சனன மரணகா ரணமதா யனர்த்தம், புரிதரு முடலி னகமெனு மதியைப் போக்கிச் சன்மயமதாஞ் சிவத்தின், பெருமதி யதனை த்தெரிதரத் தருகும் பிரிதரும் புருடனுக் குரிய, பெருமித மதன்றன் பொருட்டதே யாகிப் பிறங்கிடு மெனமனத் துணரே. (91)

(ப-ரை)—மருமறை - இரகசியார்த்தங்களையுடைய வேத வாக்கியமானது, புருடன் றனக்கு-முமூக்ஷு புருஷனுக்கு,வெம்-கொடிய, சனனமரணகாரணமதாய்-பிறப்பிறப்பிற்குக் காரணமானதாய், அனர்த்தம் புரிதரும்-அனிஷ்டத்தைச் செய்வதான,உடலினகமெனுமதியை - சரீரத்துள்ள ஆன்ம புத்தியை, போக்கி - கெடுத்து, சன்மயமதாம் சிவத்தின்பெருமதியதனை - சத்தா மாத்திரமான சிவத்தின் ஒப்பற்றஞானத்தினை, தெரிதரத் தருகும் - நன்றாக உண்டுபண்ணும். (ஆதலின் வாக்கியம்) பிரிதரும் புருடனுக்குரிய - உவமையற்ற புருடனுக்குரித்தான, பெருமித மதன் றன்பொருட்டதேயாகி-பெரிய புருடார்த்தத்தின் காரணமாய், பிறங்கிடுமென மனத்துணர் - விளங்குமென இதயத்தின் கண்ணுணர்வாய்நீ.

(ப-ம்)—புருடனுக்கனந்தவனர்த்தம் புரிவதாயும் பிறப்பிறப்பிற்குக் காரணமாயும் இராநின்ற உடம்பிலுள்ள ஆன்ம புத்தியைக் கெடுத்துச் சன்மாத்திர வான்மஞானத்தைக் கொடுக்குஞ் சுருதியானது பெரிய நன்மைக்கேதுவாகின்றது. எனெனின் வாக்கியத்தாலுண்டாயஞானம் மோக்ஷகாரணமாதலினாலாம் எனப் பொருள். (91)

(அ-கை)—ஆக்ஷேபம் இங்ஙனமேனும் தத்துவமசிவாக்கியம் புருடார்த்த காரணமாகாது. மிக முயன்று தத்துவம சிவாக்கியத்தை யடிக்கடி சிரவணித்தயாங்கள் அனர்த்தகாரண வஞ்ஞானம் நீங்கப்பெற்றிலேமாதலின் என்றாசங்கித்துப் பாபத்தால் மூடுண்ட புத்தியுடையோர்க்கே அங்ஙனமாம், ஈசுவர பத்தர்களான பரமாம்சர்கள் பாபமின்றிய வராதலின் ஒருதாஞ் சிரவ

ணஞ் செம்தவினுனும் அனுபவமுடிவானஞானேற்பத்தி உண்டா கின்றமையின் அங்ஙனம் அன்றென்னு மபிப்பிராயத்தாற் கூறு கின்றார்.

அதுநீ யாவா யிவனின தென்றறையப் படுமா வாக் கியத்தாற், றிதமா யெஞ்ஞான் றறியும்வணந் தெரிக்கப் படுவ னஞ்ஞான்றே, யதமாங் காய மதிலார்ந்த புருடன் றனது வறிவிலதா, மதியா ததும்மன் மடிந்திடுகு மெனவே மதியிற் கருதுதியால். (92)

(ப-ரை)—இவனனினது என்று அறையப்படும்-இப்பரமான் மா உன் வடிவமெனக் கூறுகின்ற, அது நீ யாவாய் - அது நீயா யிருக்கின்றாய் என்ற, மாவாக்கியத்தால் - மகா வாக்கியத்தால், எஞ்ஞான்று - எக்காலத்து, றிதமாய் - பிரதிபந்தமின்றி, அறியும் வணம் - தெரிந்துகொள்ளும்படி, தெரிக்கப்படுவன் - புருடன் போதிக்கப்படுவானோ, அஞ்ஞான்றே - அக்காலத்திலேயே, அத மாங்காயமதிலார்ந்த - இழிந்த சரீரத்துற்ற, புருடன்றனது வறி விலதாமதியாதது - புருடனின் அவிவேக புத்தியாதோவது, மன்மடிந்திடுகுமென - அத்தியந்தம் நாசமாகுமென்று, மதியிற் கருதுதி - புத்தியில் நிச்சயம் பண்ணுவாயாக.

(ப-ம்)—வேதம் அதிகாரிக்கு உண்மை ஞானத்தை யுண் டாக்குவதாதலின் "நீ யதுவாயிருக்கின்றாய். இவ்வான்மா பிரஹ்மம். இஃதுனக்கான்மா. பிரக்ஞானம் பிரஹ்மம்" என்னுமிவை முதலிய மகா வாக்கியங்களினுல் சீடன் எப்போது நீ தேகேந் திரிய பிராணுகங்கார சங்காதனன்று அவை கடம்போன்று திரு சியமாதலின். உன்னிற்றோன்றுஞ் சுக துக்க முதலியவை அந்தக் கரண வுபாதியாலாக்கப்பட்டமையின் நீ சம்சாரியுமன்றெனப் போதிக்கப்படுகின்றானோ அக்காலத்திலேயே உத்தமாதிகாரி சீடன் சரீரத்துற்ற ஆன்ம புத்தியான விபரீத புத்தியை நீக்குகின் றது. ஆகவின் வாக்கியத்தாலுண்டான ஞானத்தா லஞ்ஞானமழி யுங்கால் நிரதிசயானந்தா விர்ப்பாவ வடிவப் பிரயோஜனமுண்டா

கின்றமையின் வாக்கியம் வஸ்து பரமேனும் புருடார்த்தத்தில் முடிவுடையது என்பது பொருள். (92)

(அ-கை)—மீண்டுந் தத்துவமசி வாக்கியம் அஞ்ஞானத்தை க்காதேல் சனன மரண சம்சாரமு நீக்க முடியாதாம் என்று வாக்கிய மஞ்ஞானத்தைக் கெடுக்காதென்னும்) விபக்ஷத்தில் தோடங் கூறுகின்றார்.

புருடனுக் குடற்கட் பொருந்துநா னெனுமிப் பொய்ம்
மதி யதனை மெய்ம்மறை தான், றிருடம துடனிங் கொழித்
தில தாகிற் றிகழ்சுக துக்கமாம் பயனோ, டுருடரு மகமென்
றிடுமதி யேது வுடையபுற் கருமமார் கதியை, மருடரு பரத்
தின் வசமது வாக மன்னியிங் கனுபவித் திடுமே, (93)

(ப-ரை)—புருடனுக்கு, உடற்கட்பொருந்தும் - சரீரத்துற்ற, நானெனும் - நான் என்றுள்ள, இப்பொய்ம்மதியதனை - இந்தப் பிராந்தி ஞானத்தை, மெய்ம்மறைதான் - சத்திய வேதமானது, திருடமதுடன் இங்கு ஒழித்திலதாகில் - அத்தியந்தமிச்சம் சாரத்தில் நீக்காதாயின், திகழ்சுக துக்கமாம் பயனோடு - திருட்டமாய் விளங்குகின்ற சுகதுக்க பலனோடுற்ற, உருள் தரும் அகமென்றிடு மதியேது வுடைய - பிறழ்கின்ற அகங்காரத்தைக் காரணமாக வுடைய, புற்கருமமார்கதியை - இழிந்த கருமம் பொருந்திய மார்க்கத்தை, மருடரு பரத்தின் வசமதுவாக - சுதந்திரமின்றி மயக்கந் தரும் பரவசனாக, மன்னியிங்கனுபவித்திடும் - புருடன் பொருந்தி இச்சம்சாரத்தில் அனுபவிப்பான்.

(ப-ம்)—சுருதி வாக்கியம் புருடனுக்கு அனான்மாவிலுள்ள ஆன்ம புத்தியை யழிக்காதாயின் சுகதுக்க காரண சுரரதிரியக் காதியடைவு வடிவ அகங்காரத்தைக் காரணமாகவுடைய கர்ம மார்க்கத்தைப் பரவசனாயனுபவிப்பான். ஆகவின் வாக்கியத்தா லுண்டாய ஞானத்தால் அஞ்ஞான நீங்குங்கால் அதன் காரிய மான சம்சாரமு நீங்குகின்றது. இதனான் வாக்கியம் அகண்டைகரச வஸ்து பரமாதலின் தோடமற்ற புருடனுக்குப் புருடார்த்த சாதன மென்பதபிப்பிராயம். (93

(அ-கை)—இங்ஙனம் வாக்கியம் வஸ்து பரமாயின் தோடமின்றிய பலமா மெனக் கூறி விதிபரமாயின் பலமின்மையைக் காட்டுகின்றூர்.

தத்துவ மசியென் றிருமொழி பிரமந் தனது பாசனை
புரி கரும, மெத்தவும் புகலுந் தத்துவ மெனநன் மெய்ய
யிக் கியமிழற் றிலதேற்' பத்தியொ டரியசத்துபா சனை
யைப் பயின்றிடு பவர்க்குமேற் பவிக்குஞ், சத்தியப் பலன
தெத்தகை யெனவே சற்றுவி சாரமே புரிவாம். (94)

(ப-ரை)—தத்துவமசி யென்றிருமொழி - அது நீயா யிருக்கின்று யென்னும் அழகிய மகா வாக்கியம், பிரமந்தனது பாசனை புரிகரும மெத்தவும் புகலும் - பிரஹ்மத்தை உபாசிப்பதான கருமத்தையே மிகவுங் கூறுகின்றது, (அதுவல்லாது) தத்துவமென - அது நீயா யிருக்கின்றுயென, நன்மெய் அயிக்கிய மிழற்றில தேல் - நன்மையான சத்திய ஏகவடிவத்தைக் கூறுதாயின், பத்தியொடு - பிரியத்தோடு, அரிய சத்து பாசனையைப் பயின்றிடுபவர்க்கு - செய்தற்கரிய பிரஹ்மோ பாசனையைச் செய்கின்ற பூர்வமீமாஞ்சகர்களுக்கு, மேற்பவிக்கும் - பின் உண்டாகும், சத்தியப் பலனதெத்தகை யெனவே - உபாசனையாலுண்டாய வுண்மையான பலன் எத்தன்மையதென, சற்று விசாரமே புரிவாம் - அப்ப விசாரத்தாற் காண்பாம்.

(ப-ம்)—தத்துவமசி வாக்கியஞ் சத்தையு பாசிப்பாயாகவென வுபாசனுகர்மத்தைப் போதிக்கின்றது ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்தைப் போதிப்பதென்று எனின் பிரஹ்மோ பாசகனுன பூர்வமீ மாம்சகனுக்கு எவ்வாறுய பலமுண்டா மென்பதை விசாரிப்போம். இதனு லுபாசனு பரமாயினற்ப பலமு மின்றெனப் பொருள். (94)

(அ-கை)—ஈண்டு செய்யப்படு மிவ்வாராய்ச்சியான் யாது? பிரஹ்மத்தின் அத்தியந்தம் வேறுன பிரஹ்மோபாசகனுன புருடனுக்கும் பிரஹ்மத்தோடு ஒன்றுகும் பலம் உண்டாகுமென்று சங்கித்துக் கூறுகின்றூர்.

மத்திய குண முடைய மனுடனுக் கரிய தான
சத்துபா சனையி னாலே சத்துருத் தகைமை மேவா
தெத்தகை யவனு மீண்டு மெவ்விதத் தினுந்தா னாகச்
சித்தமா கியசு பாவஞ் சிதைத்தில னெதனி னாலே. (95)

(ப-ரை)—மத்திய குணமுடைய - தாழ்ந்த தருமமுடைய, மனுடனுக்கு - உபாசனை புரியும் புருடனுக்கு, அரியதான சத்து பாசனையினாலே - அருமையாகிய பிரஹ்மோ பாசனையினால், சத்துருத் தகைமை மேவாது - சத்து வடிவப் பிரஹ்ம ரூபத்தன்மை பொருந்தாது, எதனினால் - ஏனெனின், ஈண்டு - சம்சாரத்தில், எத்தகையவனும் - எந்தத் தன்மை வாய்ந்தவனானாலும், எவ்விதத்தினும் - எவ்வுபாயத்தாலும், தானாகச் சித்தமாகிய சுபாவம் - இயல்பாகச் சித்தித்த தர்மத்தை, சிதைத்திலன் - அழிக்க வன்மையனன்றாதலினாலாம்.

(ப-ம்)—பரமார்த்தமாகத் தாழ்ந்த தர்மமுடைய புருடன் பிரஹ்மோ பாசனையால் பிரஹ்ம வடிவ மாகான். ஏனெனின் ஈண்டு யாதொரு பொருளும் இயல்பாகப் பொருந்திய சுபாவத்தை எதனாலும் விடுகிறதில்லை; ஆகலின் சத்து பாசனையால் சத்துவடிவ மடையப்படா தென்பது பொருள். (95)

(அ-கை)—உபாசனா பாத்துவவாதி மதத்தில் பந்தஞ் சத்திய மா யறியப்படுதலின் தனது மரண சுபாவத்தின் நெருப்பின் சூடு போன்று நீங்கங் கூடாமையின் அமிர்தவடிவப் பிரஹ்மப் பிராப்தி யுபாசனையின் பலமாக வுண்டாகாதெனக் கூறப்பட்டது. இனி மீண்டும் அபிநிவேசத்தால் (மரண பயத்தினின்றும் விடும்பொருட்டு) பிரஹ்மப் பிராப்தியே வுபாசனையின் பலமாகக் கற்பிக்கப் படுமாயின் அக்கால் ஜீவனது சொரூபம் நாசமாகும் ஏனெனின் அத்தியந்த விருத்த சுபாவமுடையவைகளுக்கு ஐக்கியம் விரோதமாதலினாலாம். என்று சித்தாந்தி கூறுகின்றார்.

சத்துபா சனையி னாலே சத்துருத் தகைமை யிந்தச்
சித்துயி ரடையு மாயிற் செறிதன துருவிச் சீவன்
மெத்தவும் விடுவ தின்றே மெய்யயிக் கியஞா னந்தா
னெத்தின மிருவ ருக்கு மியைந்திட லிலது தானே. (96)

(ப-ரை)—சத்து பாசனையினுல் - பிரஹ்மோ பாசனையால், சத்துருத்தகைமை - பிரஹ்மவடித் தன்மையை, இந்தச் சித்து யிரடையுமாயில் - இச்சீவனடைவனேல், இச்சீவன் செறிதன துருவு - பொருந்திய தனது மரண வடிவை, விடுவதின்றே - விடமாட்டானு, எத்தினுல் - எதனுல், இருவருக்கும் - விருத்த வியல்புடைய விருவருக்கும், மெய்யயிக்கிய ஞானந்தான் - உண் மையான அபேத ஞானமானது, இயைந்திடலிலது - பொருந் துவதின்றே அதனுல்,

(ப-ம்)—இச்சீவன் பிரஹ்மோ பாசனையாற் பிரஹ்மத்தை யடைவானெனின் தனது மரணவியல்பை விடுவான். ஏனெனின் மிகவிலக்ஷணமான விரண்டு வஸ்துக்களுக்கு விருத்த தருமமிருத் தலினுல் ஐயிக்கியஞான மூண்டாகாதாதலினுலாம், ஏகவடிவ பலத்தை அங்கீகரிக்கில் மரணவடிவ வியல்பு நீங்கும் அதனுல் சொருபத்திற்கும் நாசம் வருகின்றமையானும் மரணவியல்பு நீங்கி லும் ஒன்று ஒன்றன் வடிவை யடைதல் கூடாமையானும் ஜீவ னுக்குப் பிரஹ்மப் பிராப்தி யுபாசனுபலமன்று. ஆகவின் இரண்டு பிரகாரத்தானும் பிரஹ்மத்தினடைவுவுபாசனு பலமன்று. "ஒன்று ஒன்ருகாதாகையால் ஒன்றை ஒன்ருச் சிந்திக்கலாகாது. ஒன்று மற்ருென்றன் வடிவமேல் நாசமதற் குண்மைமயாகும்" என வாசார்யரவர்களாலும் புகலப்பட்ட தென்பது பொருள். (96)

(அ-கை)—ஆக்ஷேபம் உலகில் ரசத்தோடுற்ற விரும்பு சொ ரூப நாசமன்றி பொன்றன்மையை யடைவது போன்று ஜீவனும் சுபாவமான மரண வியல்பை விட்டுத் தனது சொருப நாசமின் றிப் பிரஹ்மப் பிராப்தி வடிவ பலமுடையவனுகின்ருனெனக் கேட்கின்ருன் பூர்வ பக்ஷி.

இயல்ப தாகிய பிரகிரு தியைவிடுத் திரதமொடியை பான, வயமதாயது கனகத்தின் றகைமையை யடைந்திடு மதுபோல, நியம மாகிய சத்துபா சனையினு னிமலன துரு வாக, நயம தார்புரு டனுமன வரதமு நண்ணறிண் ணம தாமே. (97)

(ப·ரை)—இரதமொடியை பான அயமதாயது - வேதனை யான் ரசத்தோடுங் கூடிய விரும்பு, இயல்பதாகிய பிரகிருதியை விடுத்து - உடன்பிறந்த இரும்பின் தன்மையைவிட்டு, கனகத்தின் றகைமையை யடைந்திடுமதுபோல - பொன் றன்மையை யடைவதுபோன்று, நயமதார் புருடனும் - நன்மையை விரும்பும் புருடனும், நியமமாகிய சத்து பாசனையினால் - நியதியாக இடைவிடாது செய்யும் பிரஹ்மோ பாசனையால், நிமலனது உருவாக- பரமான்மாவின் வடிவாக, அனவரதமும் - என்றும், நண்ணல்திண்ணமதாம் - பொருந்துவது சத்தியமாகும்.

(ப-ம்)—இரதத்தோடுங் கூடின இரும்பு இயல்பான இரும்புத் தன்மையைவிட்டுத் தனது நாசமின்றி பொன்னின் றன்மையை யடைவதுபோன்று புருடனும் நான் பிரஹ்மமா யிருக்கின்றேனெனச் சந்ததஞ் செய்யும் பிரஹ்மோ பாசனையால் தனது வியல்பான மரணதருமத்தைவிட்டு நாசமின்றியவனுப்ப் பிரஹ்ம வடிவத்தை யடைகின்றான். ஆகலின் வாக்கியத்தா லுண்டாம் நன் ஞானமின்றியும் பிரஹ்மோ பாசனையாகிய கர்மத்தானேயே ஜீவன் பிரஹ்மத்தை யடைகின்றானென்பது பூர்வ பக்ஷிகளின் அபிப்பிராயம். (97)

(அ·கை)—இரும்பு பொன் றன்மையை யடைந்ததென்பது பிராந்தியாகலின் இத்திருட்டாந்தம் வித்துவான்களின் சம்மதமன்றென அதனைப் பரிகரிக்கின்றார் சித்தாந்தி

இரத மும்மிக விரும்பின தவயவ மிதைமறைத் திருந்தேபின், னெரித ழலினல் லனுக்கிர கமதடைந் திரும்பினிற் பொனின் பான்மை, யொருதிண் ஞானத்தை யுதிதரப் புரிந்திடு முயர்கன கமதாகக், கருதிற் புல்லிய வயம்பொருந் துறலெந்தக் காலத்து மிலையாமே. (98)

(ப-ரை)—இரதமும் - இரசம், மிகவிரும்பின தவயவமிதை- மிகவும் இரும்பினது அவயவத்தை, மறைத்திருந்து - அடக்கி வைத்துக்கொண் டிருந்து, எரிதழலின்நல் அனுக்கிரகமது அடை

ந்து - ஜொலிக்கின்ற நெருப்பின் உதவியை யடைந்து, பின் - அதன்பின்னர், இரும்பினில் - அயத்தில், பொன்னின்பான்மை - பொன் றன்மைபோன்ற, ஒரு திண் ஞானத்தை - ஓர் திடமான ஞானத்தைமட்டில், உதிதரப் புரிந்திடும் - உண்டாகும்படி செய்திடும், கருதில் - சோதிக்குமிடத்தில், புல்லியவயம் - இழிந்த இரும்பு, உயர் கனகமதாக - உயர்ந்த பொன்னாக, பொருந்துறல் எந்தக் காலத்துமில்லையாம் - பொருந்துவது ஓர் போதுமின்று.

(ப-ம்)—இரும்பின் அவயவங்களை மறைத்திருக்கின்ற ரசம் அக்கினியிலிட்டபின் அதன் அனுக்கிரக பலத்தாற் பிராந்தர்களுக்குக் கேவலம் கனகத்தன்மை ஞானத்தைமட்டில் இரும்பிலுண்டாக்குகின்றது. அவ்விரும்பு பொன் றன்மையை யடைந்திலதென்பது பொருள். (98)

(அ-கை)—இப்பொருளையே திருட்டாந்தத்தால் விளக்குகின்றார்.

சுதையுஞ் செம்பொனு முதகத்தி னவயவஞ் சுத்த
வெள் ளியதாதா, மதனு றுப்பையு மறைத்தய லறிவினை
யரியவெண் பொனினூடு, முதகந் தன்னினு முதிதரப் புரியு
மிங் குண்மையிவ் வணம்போல; முதுவி ரும்பினின் மாழை
யென் றிடுமயன் முழுமதி யுளதாமே. (99)

(ப-ரை)—சுதையும் - அமிர்தமான பாலும், செம்பொனும் - செம்மையான பொன்னும், உதகத்தின் அவயவம் - தண்ணீரின் அவயுவத்தையும், சுத்த வெள்ளிய தாதாம் அதனுறுப்பையும் - பரிசுத்த வெண்ணிறத் தாதுவான வெள்ளியினது அவயவத்தையும், மறைத்து - காணாது செய்து, அரியவெண் பொனினூடும் - அருமையான வெண்ணிறம் வாய்ந்த வெள்ளியினிடத்திலும், உதகந் தன்னினும் - தண்ணீரினிடத்திலும், அயலறிவினை-பால் பொன் என்னும் வேறு ஞானத்தை, இங்கு - ஈண்டு, உதிதரப் புரியும் - உண்டாகும்படி செய்யும், உண்மை இவ்வணம் போல - இவ்வுண்மையைப் போன்று, முதுவிரும்பினில் - பழமையான இரும்பில், மாழையென்றிடு முழுமதி - பொன்னென்

னும் ஞானமெல்லாம், மயல் உளதாம் - மயக்கத்தால் உண்டாகின்றன.

(ப-ம்) —பால் உதகாவயவங்களை ஆச்சாதித்துபயோமதியை யுண்டாக்குவது போன்றும் ஹேமம் ரஜதா வயவங்களை யாச்சாதித்துக் கனக புத்தியை யுண்டாக்குவது போன்றும் இரசம் இரும்பி னவயவங்களை யடக்கி யேம புத்தியை யுண்டாக்குகின்றது. பொன்னாக * செய்கின்றதன்று. ஆகவின் பொன் மயக்கான் இரும்பறியப் மட்டதென்பது பொருள். (99)

(அ-கை)—ரச வீரியத்தாலாய பாகம் நாசமடைந்தபின் விளங்காமையாகிய விதனுனும் இரும்பில் பொன்தன்மை பிராந்தியாலாயது. போக்குவரவுடைய அப்பொன் பாவம் அனுமானத்தால் வஸ்திராதி பொன்று அவசியம் போன்றுவதாமெனக் கூறுகின்றார்.

இழியயந்தனக்குப் பொன்மை யிரதவீ ரியவிபாக
மழியவு மழியுங் கூடு மதுமிகத் திண்ண மாக
முழுவதும் பிரியு மெத்தான் முதுதொழி லினிலுண் டாகு
மழிபொரு ளநித்த மாமென் பதுபிர சித்த மாமே. (100)

(ப-ரை)—இழியயந் தனக்கு - இழிந்த இரும்பிற்கு, பொன்மை - பொன் றன்மை, இரத வீரியவிபாக மழியவுமழியும்-இரசவீரியத்தா லுண்டான பாகம் அழியவும் அதுவும் அழியும், எத்தால் - எனெனின், கூடும் அது - சேர்க்கையை யடைந்தது, மிகத் திண்ணமாக - அவசியமாகவே, முழுவதும் பிரியும் - எல்லாம் பிரிவை யடையும் என்பதாலாம், முது தொழிலினி லுண்டாகும் - பழமையான கருமத்தா லுண்டாகின்ற, அழிபொருள்-அழியும் பொருளானது, அநித்தமாமென்பது பிரசித்தமாம்-அழியுமென்பது பலருமறியக் கிடக்கும் வெளியாம்.

(ப-ம்)—ரச வீரியத்தின் விபாகம் நாசமாங்கால் காஞ்சனத் தன்மையின் றேற்றமு நாசமுறும். பிறக்கும் வத்தென்று முளதாகாதென வத்திராதியிற் காண்டலின் பிறந்ததி னழிவு பிரசித்

தமேயாம். ஆகலின் இரும்பிற்குப் பொன் றன்மை பிராந்தியா லாயதெனப் பொருள். (100)

(அ-கை)—இங்ஙனம் ஒன்ரொன்றாதல் மயக்கமானதால் உண்மையில் ஒன்று ஒன்றன் வடிவாகாது. ஆதலின் மரண வியல்புடைச் சீவன் பிரஹ்மோ பாசனு கருமத்தால் அமிர்தவடிவப் பிரஹ்மத்தை யடையானெனக் கூறப்பட்டது. ஆண்டிஃதா சங்கையாம் அமிர்தத் தன்மையென்பது முன்னின்றியதாய் உபாசனு கர்ம சாமர்த்தியத்தா லாகின்றது. யாகாதியாற் சாதிக்கப் பட்ட சுவர்க்காதிபலம் போன்று என்றவிடத்துச் சித்தாந்திகூறு கின்றார்.

முன்னில தமுதத் தன்மை யிவனது முடிவின் மூலந்
தன்னுபா சனையி னலே சாதிப்பன் வேள்வி போல
வென்னிலத் துறக்கம் போது மிதுமழிந்திடுமெ தாலே
மன்னிடு மநித்த த தன்மை செயற்கைக்கு மயக்க மின்றும்.

(ப-ரை)— இவனது - இவ்வுபாசகனது, அமுதத் தன்மை - அமிர்த வடிவத்தை, முன்னிலது - முன்னில்லாததாய், முடிவு இல் மூலந்தன் னுபாசனையினல் - அழிவற்ற காரணப் பிரஹ்மோ பாசனையினல், சாதிப்பன் - சம்பாதிப்பான், வேள்விபோல வென்னில் - முன்னடையப்படாத சுவர்க்கம் யாகத்தாற் சம்பா திப்பதுபோல என்றால், அத்துறக்கம்போல இது அழிந்திடும்- அச்சுவர்க்கம் போன்று இவ்வுபாசனு பலமும் அழிந்திடும், எதால் - ஏனெனின், செயற்கைக்கு - இடையி லுண்டாயதற்கு, அநித்தியத் தன்மை மன்னிடும் - அநித்தியத் தன்மை பொருந் திடு மாதலினலாம் மயக்கமின்றும் உண்மையே.

(ப-ம்)—புருடன் முன்பின்றிய சுவர்க்காதியை யாகத்தா லடைவதுபோன்று முன்பின்றிய அமிர்தத் தன்மையையும் உபா சனையா லடைகின்றனெனின் அக்கா லக்காரிய சுவர்க்கம் அழி வதுபோன்று அவ்வமிர்தத் தன்மையும் முடிவுடையதாகும். "எங் ஙனம் ஈண்டு கன்மத்தாற் சாதிக்கப்பட்ட வுலகம் நாசமாமோ இங்ஙனமே புண்ணியத்தாற் சாதிக்கப்பட்ட அப்பரலோகம் நாச

மாகின்றது'' என்னுஞ் சுருதியானும் ; யாது பாவ வடிவ காரிய மோ அது அநித்தியம் கடம்போன்று என்னு மனுமானத்தாலும் காரியமான சுவர்க்காதி பலனில னத்தத்தன்மை யறியப்படுகின்றது. ஆகையா லமிர்தத் தன்மை கிரியையாற் சாதிக்கப்படின் அது அவசிய மழியுமெனப் பொருள். (101)

(அ-கை)—ஆக்ஷேபம் யாகசாத்திய சுவர்க்காதி போன்று அவ்வுபாசனையின் பலமுண்டாவதின்று ஆனால் ஜீவப் பிரஹ்மங்களின் சம்போகமென்னும் பலமுண்டாகின்றது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

ஒத்திலத் தருமமேய வுயிருக்குஞ் சிவன்ற னக்குஞ்
சத்துபா சனையினு லே சம்பந்தம் பவித்தி டாதாஞ்
சித்திரு வருக்கும் யோகஞ் செப்புத றகுமே யென்னி
னித்தசை யொகத் தோடு நீள்பக னின்றிடாதே. (102)

(ப-ரை)—ஒத்திலத் தருமமேய - விருத்த தருமமுடைய, உயிருக்குஞ் சிவன் றனக்கும் - ஜீவனுக்கும் பிரஹமத்திற்கும், சத்து பாசனையினுலே சம்பந்தம் பவித்திடதாம் - பிரஹ்மோ பாசனையாற் சம்பந்த முண்டாகாது, சித்திருவருக்கும் - சைதன்யரான ஜீவேசுவரர்களுக்கு, யோகஞ் செப்புல் தகுமே என்னில்- உபாசனையா லுண்டாஞ் சம்பந்தஞ் சொல்லத்தக்கதெனின், இத தசை யோகததோடு - இங்ஙன மாயசம்பந்தத்தோடு கூடியதாகச் சிவன், நீள்பகல் நின்றிடாது - நெடுங்காலம் நில்லான்.

(ப-ம்)—சம்சாரித் தன்மை அசம்சாரித் தன்மை என்னும் விருத்த தருமமுடைய ஜீவப் பிரஹ்மங்களுக்கு பிரஹ்மோபாசனு கன்மத்தால் சம்பந்தமேலாது. அல்ல துண்டாயின் அஃதழி வின்றி சிரகால நில்லா. “ சம்யோகம் பிரிவை முடிவாக வுடையது ” என்னு நியாயத்தால் உபாசனு பாத்துவ பக்ஷத்தில் நாசமின்றிய பலனின்றென்பது பொருள். (102)

(அ-கை)—மோக்ஷம் நான்குவித கர்ம பலத்தினும் விலக்ஷணமாதலின் உபாசனுகர்மம் மோக்ஷ சாதனமாகாதெனக் கூறுகின்றார்.

பலம தித்தகை சத்துபா சனேயினுற் பவிக்கு
நலபு ருடனுக் கிதையொழித் தன்னிய நணுகா
தலேகு றைவற வதுவம லருக்கயி மதாந்த
னிலேயெ லேயிலாத் றுகளுக ளிலங்கக்கண் டிடலால். (103)

(ப-ரை)—சத்து பாசனேயினுல் - பிரஹ்மோபாசனேயினுல், இத்தகை பலமது - இங்ஙனமனத்திய பலமே, பவிக்கும் - உண்டாகும், நலபுருடனுக்கு - உபாசகனுக்கு, இதை யொழித்து - இவ்வனித்ய பலனே மின்றி, அன்னியம் - நணுகாது, நித்திய மானவேறு பலமின்று - எலேயிலாத்துகனு களிலங்கக் கண்டிடலால் - அப்பலத்தி லளவற்ற தோடங்காணப்படுகின்றமையின் அலே குறைவு அற அது - அது போக்குவரவாகிய குறைவு நீங்கியதாக, அமலருக்கு அபிமதந்தானிலே - புண்ணியவான்களாகிய பெரியோர்களுக்கு அபிமானிக்கப்பட்டதன்று.

(ப-ம்)—பிரஹ்மோபாசனுகர்மத்தால் உபாசகனுன புருடனுக்கு இஃதிவ்வாருயதாகவே யுண்டாகின்றது. இதனினும் வேறு நித்தியமாயுண்டாகாது. எவ்வெப்பலங் கற்பிக்கப்படுகின்றதோ அவ்வப்பலந்தோட மற்றதாக வித்துவான்களின் அபிமத விடய மன்று. எனெனின் சாதான சாத்திய சகலமும் அநித்தியத்தன்மை ஜடத்தன்மை, துக்கத்தன்மை முதலிய தோடக் குழிவோடமைந்து கிடக்கக்காண்டலி னென்பது பொருள்.

(அ-கை)—இங்ஙனந்தத்துவ மசிவாக்கியம் உபாசனுவிதிபரமாயின் நற்பல மின்மையின் அவ்வுபாசனு விதிபரமன்றென மிவ்வளவாற் கூறப்பட்டது. இனி, பொருத்தமானது யாது என்னுமபேக்ஷையில் அவ்வாக்கியம் வஸ்துவின் யதார்த்த வடிவத்தைக் கூறி அதனஞ்ஞானத்தை நீக்கி மோக்ஷசாதனமே யெனச் சித்தாந்தி கூறுகின்ருர்.

அவ்வுரை யதனி னுனே சத்துபா சனேய தான
செவ்விய தொழிலேச் செப்பும் விதிபரஞ் செறிந்திடாதா
மிவ்வுட னுறு மென்று மெமதென் று மெண்ணுகின்ற
வெவ்வவி வேக மான மதியினே விலக்குந் தானே. (104)

(ப-ரை)—அதனிஞன் - ஆகையிஞல், அவ்வுரை - அத்தத்துவ வசிவாக்கியம், சத்துபாசனேய்தான - பிரஹ்மோபாசனேயாகிய, செவ்விய தொழிலேச் செப்பும் விதிபரஞ் செறிந்திடாதாம் - செம்மையான கருமத்தைக்கூறும் விதியுடையதாகப் பொருந்தாதாம், (மற்ருே இவ்வுடல் நாஞம் என்றும் - இவ்வுடம்பு நாஞக விருக்கின்றே னென்றும், எமதென்றும் - தாரபுத்திராதிகளே என்னுடைய தென்றும், எண்ணு நின்ற - கருதுகின்ற, வெவ்வவிவேகமான மதியினே - கொடிய அவிவேக புத்தியை, விலக்கும் - ஒழிப்பதாம்.

(ப-ம்)—தத்துவ மசிவாக்கியம் உபாசஞபரத்துவ முடையதாயின் அதற்குத்தோட மற்ற பலமின்று. ஆகவின் பிரஹ்மத்தின் உபாதஞ கர்மவிதிபரமானதன்று. மற்றெப் பரத்துவ முடையதெனின் இவ்வுடஞன் மனிதன் நான் பிராஹ்மணன் நான் க்ஷத்திரியன் நான் விரதி நான் சன்னியாசி நான் என்று சரீராதிகளில் இருக்கின்ற அகம்புத்தியையும் என்னுடைய தென்னும் புத்தியையும் நீக்குகின்றது. அஞன்மாவை விவேகித்து ஆன்ம ஞானத்தை யுண்டாக்குகின்ற தென்பது பொருள். (104)

(அ-கை)—இங்ஙன மிதுகாறுந தத்துவ மசிவாக்கியத்திற்கு அகண்டை காசவஸ்து பரத்தன்மை புகலப்பட்டது. இனிச் சர்வ சாஸ்திரங்கள் சர்வ வுபநிஷதங்கள் ஆகிய இனவகளிலுள்ள சர்வ மகா வாக்கியங்களேயும் இங்ஙனமே பொருத்தவேண்டு மெனக் கூறுகின்ருர்.

சீவனேச் சிவனேச் செப்பிடும் பதங்கள் செறிந்திடு மேகவேற் றுமையான், மேவிய சகல வுபநிடங் களினுமினி ருப தேசமா மொழிக, ளாவதிற் புகன்ற நெறிகொடே யறிஞ னளவினல் லுத்திக ளோடும, மோவலில்லரிய மான மதோடு முற்றுணர்ந் தடைந்திட லுரித்தே. (105)

(ப-ரை)—சீவனேச் சிவனேச் செப்பிடும் பதங்கள் - சீவேசுவார்களேப் பிரதிபாதிக்கு பதங்கள், செறிந்திடும் ஏகவேற்றுமை

யால் - சமான வேற்றுமையை யுடையனவாக, மேவிய சகல வுப நிடங்களினும் - பொருந்திய எவ்லாவுப நிஷதங்களில், மிளிருப தேசமா மொழிகளாவதில் - விளங்கா நின்ற உபதேச மொழி களை, புகன்ற நெறிதொடே - தத்துவ மசிவாக்கியத்திற்குப் பொருள் கூறிய வண்ணமே, அறிஞன் - நல்ல விவேகியானவன், அளவில் நல் உத்திகளோடும் - அநேக யுக்தியோடும், ஒவலில் அரியமான மதோடு - ஒழிதலின்றிய அரிய பிரமாணத்தோடும், முற்றுணர்ந்து அடைந்திடலுரித்து - முழுவதும் நன்குணர்ந்து பொருள் கொளளுதல் உரிமையாகும்.

(ப-ம்)—சிவவாசக பதத்திற்குப் பிரஹ்மவாசக பதத்தோடு சமான வேற்றுமையையுடையனவாக எல்லா வுபநிடதங்களிலு முள்ள உபதேச வாக்கியங்களாகிய எம்மகா வாக்கியங்கள் ஏகத் துவப் பிரதி பாதகங்களாகவுள்ளனவோ அவைகளையும் உபநிட தங்களின் சத்திதாத் பரியமுணர்ந்தோன் எங்ஙனந் தத்துவமசி வாககியம் குணவாதம் துதிவாதம் விபரீதபோகத்தன்மை உபா சனுபாத்துவத்தன்மை என்பன முதலியவற்றைப் போதிப்பதன் றென்றும் சிவபரங்களின் ஏகத்தன்மையைப் போதிப்பதென் றுஞ் சாதிக்க பட்டதோ அங்ஙனமே சாதிக்கவேண்டும் எனப் பொருள். (105)

(அ-கை)—சம்ப்ரதாய மறிந்த ஸ்ரீசங்கர பகவத் பூஜ்ஜிய பாதா சார்யரவர்களாலுங் கூறப்பட்ட வசன மீண்டுப் பிரமாண மெனக் கூறுகின்றூர்.

வெருவில் வேடனு லளித்திடு மிறைசிசு வினுக்குத்தன்
னுதயாதி, தெரிவ தானவன் றிகழ்மொழி யெனுமித்திட்
டாந்தமா மதனுலே, திரவி டாரியப் பெருமனுந் தத்துவ
மசியெனுந் திருவேத, மிருமஞ் ஞானத்தை யொழித்திட
லொருதலை யெனமலர்ந் துளனுமால். (106)

(ப-ரை)—வெருவில் வேடனுலளித்திடும் - பிதியற்ற வேட னுகிய வசனஞ்சாரனுல் வளர்க்கப்பட்ட, இறை சிசுவினுக்கு -

இராஜபுத்திரனுக்கு, தன்னுதயாதி தெரிவதானவன் - தனது உற்பத்தியாகிய இராஜத் தன்மையைத் தெரிந்தவனது, திகழ் மொழி எனுந்திட்டாந்தமதனால் விளங்குகின்ற வாக்கியத்தின் திட்டாந்தத்தினால், திரவிடாரியப் பெருமனும் - திரசுவிட சார் யாளான ஸ்ரீசங்கர பூஜ்ஜிய பகவற் பாதாசார்யாளும், தத்துவ மசியெனுந் திருவேதம்- தத்துவ மசி என்னும் அழகிய மகாவாக் கியமான வேதமும், இரும் - பெரிய, அஞ்ஞானத்தை யொழித் திடல் - தனது வடிவத்தை மறைக்கு மஞ்ஞானத்தை அழித்தல், ஒரு தலை என மலர்ந்துளனும் - நிச்சயமெனக் கூறியிருக்கின் றார்கள்.

(ப-ம்)—ஸ்ரீசங்கர பூஜ்ஜியூ பகற்பாதாசார்யாளும் உப தேச ஸஹஸ்ரியில் "சுருதி வத்துவ மசியெனக் கூறினது கேட் போன் மோக நீக்கப்பொருட்டு" என்னுமிது முதலிய வற்றால் தத்துவ மசி என்ற வாக்குயம் அஞ்ஞான நாசகாரணமாகக் கூறி னார்கள். ஆண்டெத்திருட்டாந்தத்தானெனின் யாதோவோர் காரணத்தால் வனமடைந்து வேடனால் வளர்க்கப்பட்ட இராஜ புத்திரனது ஜன்மத்தினுண்மை யுணர்ந்தோனது வாக்கியத்தைத் திருஷ்டாந்தமாக்குதலினால் இதனான் தத்துவமசிவாக்கியம் அஞ் ஞான நாசத்திற்கேதுவெனக் கூறப்பட்டதெனப்பொருள். 106

(அ-கை)—இங்ஙனந்தத்துவ மசி வாக்கிய மஞ்ஞான வழி விற் கேதுவாதலின் நீதேக முதலியவற்றில் நானென தென்னு மபிமானத்தை விட்டு அகண்ட வாக்கியார்த்த ஞானத்திற் கனு கூலமாக விருப்பாயாக வெனச் சீடனைக் குரு சிக்ஷிக்கின்றார்.

யாதினு லிவண மதனினு லுனது யாக்கையில் யானென வுளதா, மேதமே மிகுந்த விருளவி வேக மென்னுமித் துன் மதி விடுத்தே, யாதுதான் பரம வக்கர மாகி யாண்டுமெத் துவிதமா யிலகுந், தீதி லாக்குமர வதைகின துருவாய்த் திகழுளத் தினிற்றெளிந் திடுநீ. (107)

(ப-ரை)—யாதினு லிவணம் - எதனாலிங்ஙன் தத்துவ மசி வாக்கியம் அஞ்ஞான வழிவிற்குக் காரணமோ, அதனினால் - அவ் வேதுவால், உனது ஆக்கையில்- உன் சரீரத்தில், யான் என வுள

தாம் - நானென்றிருக்கின்ற, ஏதமே மிகுந்த - குற்றமலிந்த, இருள விவேக மென்னும் - அஞ்ஞான சொரூப அவிவேகமாகிய, இத்துன்மதி விடுத்து - இக்கெட்ட புத்தியைவுட்டு, யாது எவ் வத்துவானது, பரம வக்கரமாகி - மேலானதாயும் அழிவற்ற தாயும், யாண்டும் அத்துவிதமாகி - எவ்விடத்து மென்றுன தாயும், இலகும்-விளங்குகின்றதோ, நீதிலாக்குமார - ராதிதோட மற்றமைந்தனே! நீ, அதை - அப்பரவஸ்துவை, நினதுருவாய்- சச்சிதானந்தமாய் அவஸ்தாத்திரய சாக்ஷியாய் துரியமாய்இருக்கு முனது அன்மவடிவாக, நிகமுவத்னிதில் - விளங்குமந்தக்கரணத் தில், தெளிந்திடு - நிச்சயித்தறிவாயாக.

(ப-ம்)—வாக்கியம் அஞ்ஞானத்தைக் கெடுக்கவே துவாத வின் தனது சரீரத்துள்ளதாய் மிகத்திடமானதாய் இருக்கும் அனுதிசித்தமாய் யானென்ன தென்னும் அவிவே புத்தியையை நீக்கி லுஜாதி விஜாதி சுவகத பேதமற்றதாய் அழிவற்றதாய் யாதொரு பிரஹ்மமிருக்கின்றதோ அதனை உன் சொரூபமாக வறிவாயரக வென்பது பொருள். (170)

(அ-கை)—அவ்வக்ஷரத்தை நீ ஆன்மாவாக வறியெனப் பிரத் தியக் பிரஹ்மங்களுக்கு யோகத்தன்மை சொல்லப்பட்டது. அது சிததியாகும் பொருட்டுத் தத்துவம் பதார்த்தங்களை முதலில் ஆறு செய்யுட்களாற் பரிசோதனஞ் செய்கின்றூர். ஆண்டு முத விரண்டு-செய்யுட்களால் தத்பதார்த்த பரிசோதனை செய்கின் றூர். ஆண்டுமுதற் செய்யுளால் தத் பத லக்ஷிய பிரஹ்மம் மன முதலியவற்றின் விலக்ஷணத்தன்மையுடையதெனக் கூறுகின்றூர் இரண்டாவது செய்யுளால் மனமுதலியவற்றேடு சம்பந்தமின் மையதெனக் காட்டுகின்று ரென்பது விபாகமாம்.

மனம தியொடு கரணங்கண் மருட்டம மலவா
மனிய சத்துவ மன்றிரா சதமன்று மகியும்
புனலும் வன்னியு மன்றலே புன்சமீ ரணனுங்
கனமு மன்றுமெய்ப் பரமநற் பதங்கரு திடினே. (108)

(ப-ரை)—மனம் அன்று, மதியொடு கரணங்கள் அன்று - புத்தியோடுங் கூடின ஞானேந்திரிய கருமேந்திரியங்களான கரணங்களுமன்று, மருட்டமமலவாம் - மயக்கமான தமோ குணமுமன்றும், அனியசத்துவமன்று - அன்னியமான குணமுமன்றும், இராசதமன்று - இரஜோ குணமுமன்று, மகியும் - பூமியுமன்று, புனலுமன்று, வன்னியுமன்று, அலைபுன் சமீரணனும் - சஞ்சலமுடைய விழிந்த காற்றும் அன்று கனமுமன்று - ஆகாயமுமன்று, கருதிடின், மெய்ப்பரமசுற்பதம் - சற்தியமான பரமபதம். பரமபத மன்றெனச் சம்பந்தம்.

மனப்ப கையொடு மதிபொறி மற்றிரா சதத்தின்
றனிப்பெ ருந்தமஞ் சத்துவ மகிசலந் தழலின்
பனிப்பு றும்பவ மானனம் பரத்தின்பற் றிலதாங்
கனப்ப ரமவக் கரமுன தருவெனக் கருதே, (109)

(ப-ரை)—கனப்பரமவக்கரம் - ஏகமாய் மேலாம் யிருக்கும் நாசமற்ற பரமான்மாவானது, மனப்பகையொடு - விரோதமான மனதோடு, மதி - புத்தி, பொறி - பத்து இந்திரியங்கள், மற்று-மேலும், இராசதத்தின் - இரஜோகுணம், தனிப்பெருந்தமம்-ஒப்பற்ற பெரியதமோகுணம், சத்துவம்-சத்துவகுணம், மகி-பிருதிவி சலம்-தண்ணீர், தழலின்-அக்கினி, பனிப்புறபவமானன் நடுக்கமுடைக்காற்று, அம்பரத்தின் - ஆகாயம் ஆகிய இவைகளின், பற்றிலதாம் - சம்பந்த மற்றதாம், உனதருவெனக்கருதே - இங்ஙன மாயபரமான்மாவை அவஸ்தாத்திரய சான்றாய வுனது ஆன்மவடிவாயறிவாயாக.

(ப-ம்)—பிரதிபாதித்தவிரண்டு செய்யுட்களின பிப்பிராயம் மனமுதலியவை ஆன்மாவன்று. ஏனெனின் திருசிய மாதலின் கரணமாதலின் காரியமாதலின் வேறு பிரிக்கப்பட்டனவாதலின் பரிச்சின்னமாதலின் ஆதியந்தமுடைமையின் என்னு மிவ்வேதுக்களாலாம். இங்ஙன மனமுதலியனவனுன் மாவாகுங்கால் அதன் சான்றான ஆன்மா நிரவயமாயும் அசங்கவியல்பான் அகங்காரமகாரமற்றதாயும் நித்தியமாயும் சுத்தமாயும் புத்தமாயும் முக்த

மாயும் நித்தியஞான வடிவாயும் அவஸ்தாத்திரயசான்றாயும் உள தெனச் சித்தித்தது. யாது விங்ஙன மேலான பிரஹ்மமோ அதனை ஆன்மாவாக ஆசிரயிப்பாயாக வென உபதேசப் பிரகார மெனக் கருத்து. (109)

(அ-கை)—இனித்துவம்பத பரிசோதனத்தின் பொருட்டுச் சாக்கிராவத்தையைக் காண்பிக்கின்றார்.

மதிபொ றிகளை விடயத்தி னபிமுக மருவ
விதிபு ரிந்தழி விடயங்க டம்மிலே விசிரியும்
புதர துதனைச் சாக்கிர மென்னவே புகல்வ
ரதுவறிவெனக் கிலையென வகத்தறிந் திடுநீ. (110)

(ப-ரை)—மதி - புத்தியானது, பொறிகளை - இந்திரியங் களை, விடயத்தினபி முகமருவவிதி புரிந்து - விடயநாட்டமுடை யனவாகச் செய்து, அழிவிடயங்கடம் மிலேவிரியும்-அநித்தியப் பொருள்களில் உலவும், புதர் - விவேகிகள், அதுதனை - புத்தி அங்ஙனமிருத்தலை, சாக்கிரமென்னவே புகல்வர் - சாக்கிராவத் தையெனக் கூறு நிற்பர், அது அறிவு எனக்கு - அதனை அறி கின்ற ஆன்மாவான வென்றனுக்கு, இலையென வகத்தறிந்திடு நீ - சாக்கிராவத்தை எனக்கின்றென நீ மனதினில் நிச்சயித்தறி வாயாக.

(ப-ம்)—புத்தி இந்திரியங்களை விஷய பரவசமாகச் செய்து விஷயங்களிற் சஞ்சரிக்குங் காலத்தைப் புத்திமான்கள் சாக்கிரா வத்தையாகக் கூறுகின்றார்கள். அதனை யறியுந்திருக்கு வடிவ ஆன்மாவான வெனக்கின்றென நீயறியெனப் பொருள். (110)

(அ-கை)—இனி ஸ்வப்பனவஸ்தையைக் காண்பிக்கின்றார்.

தடையு றும்பொறி யுபரதி தனையடைந் ததன்பின்
விடய மெய்யனு பவமதின் விரிந்தவா சனையால்
விடய மின்றியே விடயதுல் லியத்தின்புன் விளக்க
நெடும தியினர் கனவென நிதநிகழ்த் துவரே. (111)

(ப-ரை)—தடையுறும் - தடுக்கப்படுவதான, பொறி உபாதி தனை யடைந்து - இந்திரியங்கள் சாந்தமாய், அதன் பின் - அதன் பின்னர், விடய மெய்யனுபவ மதின் விரிந்த வாசனையால் - விடயங்களைச் சத்தியமாக அனுபவித்ததாலுண்டான வசனையால் விடயமின்றியே - விடயங்கள் இன்றாயினும், விடய துல்லியத்தின் புன் விளக்கம் - விடயங்களுக்குச் சமானமான அற்ப விளக்கமுண்டாவதனை, நெடுமதியினர் - மிகப்புத்தியுடையோர், கனவென நிதம் நிகழ்த்துவர் - நிதம் சொப்பனவஸ்தை எனக் கூறுவர்.

(ப-ம்)— நனவின் திதிக்கு நிமித்தமான கன்மசாமங்கால் இந்திரியங்கள் வெளி விடயங்களினின்றும் நிவர்த்தி யடைகின்றன. அக்கால் வெளிவிடயங்களின்றிக் கேவல விஷயானுபவ ஜனிதச மஸ்கார மாத்திரத்தால் விஷயம் போன்ற விளக்கமுண்டாகின்றது. அதனை விவேகிகள் ஸ்வப்பனவத்தையாகக் கூறுகின்றார்கள். எனின் அடங்கிய கரணம் சாக்கிர வாசனை நிமித்தத்தால் அங்ஙனமாய யானை குதிரைகளாதி விடயங்களின்ஞானமுடையதாகின்ற தெனப்பொருள். (111)

(அ-கை)—இனிச் சுழுத்திய வஸ்தையைக் காண்பிக்கின்றார்.

ஆசு புத்தியுட் காணக்கு விடய வாகார
வேசி னற்பிர தீதியற் றிலங்குமெத் திதத்வ
மாசு ழுத்தியென் றிதுதனை மலருவர் மனத்தி
னசை யற்றொளி ரருமறைப் பொருளறி யறிஞர். (112)

(ப-ரை)—ஆசுபுத்தியுட்காணக்கு-குற்றமுடையபுத்தியாகிய அந்தக் காணத்திற்கு, விடயவாகார வசு இல் நல் பிரதீதியற்று - விடயாகாரமான குற்றமற்ற நல்ல விளக்கமின்றி, இலங்கும் எத்திதத்வம்- விளங்குகின்ற யாதொரு திரத்தன்மையுண்டோ, இது தனை- இவ்வவத்தையை, மாசுழுத்தி யென்று - பெரிய சுழுத்திய வத்தை யென, மனத்தினசை யற்று - சகல விடயவாசைகளை மனத்தால் விட்டு, ஒளிர் அருமறைப்பொருள் - விளங்குகின்ற

அரியவேதப் பிரதிபாத்திய பரமான்மாவை, அறிஅறிஞர் - ஆன்மாவாக வறிந்த தூயஞானிகள், மலருவர் - கூறுகிற்பர்.

(ப-ம்)—அந்தக்கரணமாய புத்தி விஷயாகாரமாக விளங்காமலிருக்கும் திதியினை ஆரோபிதமனைத்து மழியுந்தன்மையாதவின் பார்க்கப்பட்ட கேட்கப்பட்ட விடயங்களினின்றும் ஆசையற்றவர்களும் "சத்தியக்ஞானானந்தம் பிரஹ்மம்" என்பது முதலிய சுருதிப் பிரதிபாத்திய சத்திய வடிவப் பிரஹ்மத்தை ஆன்மசொரூபமாக வுணர்ந்தவர்களும் ஆன ஞானிகள் சுழுத்தியெனக் கூறுகின்றார்கள். புத்தி தனது காரணவஞ்ஞானத்தில் உபாதியையடைவதே சுழுத்தி யென்பது பொருள். (112)

(அ-கை)—இங்ஙன மவத்தாத்திரயங்களைக் காண்பித்து இனியவற்றின் சான்றான சிதான்மாவை அவையற்றதாகக் காண்பிக்கின்றார்.

இவண நன்முறை முறையின்றி யியைந்திடு நனவு
மவமு றுங்கன வுறக்கமு மலைமதி யதற்கா
மிவணொ ருபொழு தினுமும்மை யவத்தைக ளெமக்கின்
றுவமை யின்றிய துரியனு யுளனென வுணரே. (113)

(ப-ரை)—இவணம் - இம்மாதிரி, நன்முறை - நல்ல கிரத்மாகவும், முறையின்றி - அக்கிரமமாகவும், இயைந்திடும் - வந்து பொருந்து வனவான, நனவும் - சாக்கிரமும், அவமுறும் கனவு உறக்கமும் - வீணாயுண்டாங்கனவும் சுழுத்தியும் ஆகிய இவ்வவத்தைகளும், அலைமதியதற்காம்-சஞ்சலமான புத்திக்காம், (ஆகவின்) - இவண் ஈண்டு, ஒரு பொழுதினும் - ஓர் காலத்திலும், மும்மை அவத்தைகள் - மூன்றவத்தைகளும், எமக்கு இன்று - எனக்கு இன்றாம், (நான்) உவமையின்றிய துரியனுயுளன் - சமானமற்ற துரியனாகவிருக்கின்றேன், எனவுணர் - என்று அறிவாயாக.

(ப-ம்)—இங்ஙனங் கிரமமாகவும் அக்கிரமாகவும் சென்றதும் வருவதும் இருப்பதுமான அவஸ்தாத்திரயம் புத்தியின் தருமமேயாம். அதன் சான்றாய்ச் சிதான்மவடிவான எனக்கு அவ்வவத்

தாத்திரயம் ஒரு போது மின்றென வறிவாயாக. மற்றும் என்றுந் தேகேந்திரியமனுதிகளின் வியாபாரங்களினும் உபரமங்களினும் சுயம்பிரகாசமாய்ப் பரமானந்தமாய், சித்கனமாய், அவத்தாத்திரய வதீதமாயிருக்கும் பதத்தை நானுகவிருக்கின்றேனென வறிவாயாக. "ஜாக்கிரத்ஸ்வப்பன சுழுத்திகளும் அவற்றின் றரிசனமும் எனக்கற்பமுமின்று. தனது போலீண்டுமோகம். அவைகள் சுதந்திரமாகவும் பரதந்திரமாகவும் அசத்தியங்களாதலின். என்றுந்திருக்காகவும், துரியமாகவும், அத்வைதமாகவும் இருக்கின்றேன்" எனவது ஆசார்யர்களாலுங் கூறப்பட்டதெனப் பொருள்.

(அ-கை)—இங்ஙனமான்மாவிற்குத் துரிய மென்னுஞ் சதுர்மதமாகிய பெயர் உண்மையாக வங்கீகரிக்கப்படுமேல் அதனுனும் ஆன்மா நிர் விசேஷ மென்பதெங்ஙனமென வாசங்கித்து அது மித்தை யென்பதற்கு அவஸ்தாத்திரயத்தை யபேக்ஷித்து ஆன்மாவிற்குத் துரியத்தன்மை எனக் கூறுகின்றூர்.

மூட புந்திய னூற்றனி னனவதே முதலாக்
கூடு மும்மையுங் கற்பிக்கு மதுதனேக் குறித்தே
பாடு நற்பர மான்மமெய்ப் பதமது தனக்கும்
பீடு றுந்துரி யம்மெனப் பெயரிதென் றுணரே. (114)

(ப-ரை)—மூடபுந்தியனுல்- அவிவேகியால், தனில் - ஆன்மாவில், நனவதே மூதலாகக்கூடும் - சாக்கிர முதலாகப் பொருந்திய, மும்மையுங் கற்பிக்கும் - மூன்றவத்தைகளுங் கற்பிக்கப்படுவன, அது தனேக்குறித்தே - அவ்வவத்தாத்திரயத்தைக் குறித்து, பாடு நற்பரமான்ம மெய்ப்பதமது தனக்கும் - புகலப்படுவதான சத்தியபரமான்மாவிற்கும், பீடுறும் : பெருமை பொருந்திய, துரியம் எனப்பெயர் - துரிய மென்னு நாமம், இது என்று உணரே- இங்ஙனமாமென வுணர்வாயாக.

(ப-ம்)—விவேகமின்மையனுல் பிரத்திய கான்மாவில் ஜாக்கிராதியவத்தை கற்பிக்கப்பட்டது. அதை யபேக்ஷித்துப் பரமான்மாத் துரியமெனப் படுகின்றது. அதனுற்றுரிய சத்தவாச்

சியமானது உண்மையான அவஸ்தாந்தரமன்று. கொள்ளுதல் தள்ளுதல்களுக்கு அவிஷயமும் சுயம்பிரகாச பரமானந்த சித்கன மும் ஆனபரமாத் மதத்துவம் துரிய சத்தத்தாற் கூறப்படுகின் றது. வேறோரவஸ்தை யன்றுதலினாலும் ஆன்மா நிர்விசேஷ மாகச் சித்திக்கின்ற தென்பது பொருள்.

(அ-கை)—ஆக்ஷேபம் அவஸ்தாத்திரயத்தை யபேக்ஷித்துத் துரியமுளதேனும் அது சத்தியமாகுகவெனவாக்ஷேபித்து அவஸ் தாத்திரயம் மாயாமயமாதலின் அதை யபேக்ஷித்துண்டானது ரிய முமத்தன்மையதாகு மென்னு மபிப்பிராயத்தாற் கூறு கின்றார்.

துதிபி ரமத்தின் பதத்திற்குத் துரியம தெனவே
யெதுகு றித்தபி தானம திதுபவித் திடுகு
மதுவ சத்திய மசத்திய வதன்குண மதனுன்
மதிநி ருமித மதகரி மயற்செயன் மானும். (115)

(ப-ரை)—துதிபிரமத்தின் பதத்திற்கு - துதிக்கத்தக்க பிர ஹ்ம பதத்திற்கு, துரியம தெனவே - துரிய மென்று, எது குறி த்து அபிதானமது இதுபவித்திடுகும்-எந்த அவத்தாத்திரயத்தை யபேக்ஷித்து இப்பெயரானது வுண்டாகுமோ, அது அசத்தியம்- அப்பெயர் மித்தை, அசத்திய வதன் குணமதனால்-மித்தையாகிய மனதின் குணமாதலின், (எங்ஙனமெனின்) மதிநிருமித - புத்தி யாற் கற்பிக்கப்பட்ட, மதகரி - மதத்த யானையினிடத்தில் காண ப்படும், மயல் செயல்மானும் - மயக்கத்தாலுண்டான சேஷ்டை க்கு வொப்பாகும்.

(ப-ம்)—எவ்வவத் தாத்திரயத்தை யபேக்ஷித்துப் பரமான் மாவிற்குத் துரியம் என்னும் பெயருண்டாயிற்றோ அவ்வவத் தாத்திரயம் மித்தை. ஏனெனின் அசத்திய மனதின் குணமா தலினாலாம். அஃதெங்ஙனங் காணப்பட்டதெனின் மதத்த யானைகள் நிறைந்த வனப் பிரதேசத்திற் சஞ்சரிக்கும் யானைக் குப் பயமுடைய ஒருவனால் யானையின் வடிவொத்த வோர் கல் லில் ஆரோபிக்கப்பட்ட யானையும் அதனது காசாணுதிகளும்

அதன் கிரியையும் எங்ஙன மசத்தியமோ அங்ஙனம் மாயா மய மான மனதின் குணமானதால் அவஸ்தாத்திரயம் மித்தை. அங் ஙனமே அதை யபேக்ஷிக்கப்பட்ட துரியத் தன்மையும் பரமான் மாவிற் கன்னியமாக வுண்மையி லின்றென்பது பொருள். (115)

(அ-கை)—அசத்தியமான மனதின் தருமமாதலின் சாக்கி ராதி மூன்றும் மித்தையெனக் கூறப்பட்டது. இனி அதைச் சாதிக்க மன முதலிய வுலகை மித்தையெனப் புகல்கின்றார்.

விடய மிந்தியம் புந்தியும் விரைமன மதனோ
டடை ககனம தாதிமண் ணந்தம தாய்த்தோன்
றிட லு டைச்சக மிதுவசத் தியமென மறைக
டடைய றவுப மானநற் சதங்களாற் சாற்றும். (116)

(ப-ரை)—விடயம் - விடயமும், இந்தியம் - இந்திரியங்க ளும், புந்தியும் - புத்தியும், விரை மனமதனோடு - சர்வத்திற்கும் பீஜமான மனதோடு, அடைககனமதாதி - எங்கு நிறைந்த ஆகாய முதல், மண்ணந் தமதாய் - பிருதிவி முடிவானதாயும், தோன்றிட லுடைச்சகமிது-உற்பத்தியுடைய இவ்வுலகை, அசத் தியமென மறைகள் - மித்தையென வேதங்கள், தடையற - யா தொரு பிரதிபந்தமுமின்றி, உபமான நற்சதங்களால் - நல்ல நூறு உபமானங்களால், சாற்றும் - பிரதி பாதியா நிற்கும்.

(ப-ம்)—ஆகாய முதல் பிருதிவி யந்தமான விஷயேந்திரிய புத்தி மன முதலிய சர்வ வுலகஜாலமும் அசத்தியமெனச் சுருதி கள் அநேக வுபமானங்களாற் கூறுகின்றன. மன முதலிய வுல குற்பத்தி யுடைமையின் மித்தை யெனக் கூறுகின்றன வெனப் பொருள். (116)

(அ-கை)—ஆண்டு திருஷ்டாந்தங் காண்பிக்க வுபோற்கா தஞ் செய்கின்றார் அதாவது பிரதி பாதிக்கும் பொருளை மனதில் வைத்துக்கொண்டு முன்னமே அதன்பொருட்டு வேறு பொரு ளைக் கூறுவது உபோற்காதமாம். அதனை ஆசிரயித்து மன முத லிய வுலகிற் கனித்தியத்தன்மை கூறப்படுகின்றது.

தீத திவ்வுட றனேயெந்த வணந்தினந் தினமும்
வாத பித்தசி லேட்டும தாதுவே வகிக்கு
மோது முற்பன முதலொழி பவதியவ் வணந்தா
னீது லகினை யெரியிர வியுமிந்தும் வகிக்கும். (117)

(ப-ரை)—தீதது இவ்வுடல்தனை - குற்றமுடை இச்சரீரத்தினை, எந்தவணம் - எங்ஙனம், தினந் தினமும் - எப்போதும், வாதபித்த சிலேட்டும தாதுவே வகிக்கும்-வாதபித்த சிலேட்டுமமென்னும் மூன்று தாதுக்களே நிலைபெறச் செய்கின்றதோ, ஓதும் உற்பனமுதல் - சொல்லாநின்ற சிருஷ்டி முதல், ஒழிபு அவதி - பிரளயத்தை முடிவாகவுடைய, ஈதுலகினை-இவ்வுலகை, எரியிரவியு மிந்தும் - அக்கினி சூரியன் சந்திரன் என்னும் மூன்றும், அவ்வணந்தான் - அத்திருட்டாந்தம் போன்று, வகிக்கும்-காக்கும்.

(ப-ம்)—இவ்விழிந்த வுடல் எங்ஙனம் வாதபித்த சிலேட்டுமமென்னு முத்தாதுக்களுஞ் சமமாயின்நிலைபெறுவதும் இன்றேல் நிலை பெருததாயு மிருத்தலின் அம்மூன்று தாதுக்களால் இருப்புடையதாமோ அங்ஙனமே இவ்வுலகுஞ் சோம சூரியாக்கினியென்னு மூன்றனுள் யாதானு மொன்றின்றேல் குருடாதலினுனும் திதி யுண்டாகாமையானும் சோமசூரியாக்கினிகளாற் றரிக்கப்படுகின்றதென்பது பொருள். (117)

(அ-கை)—இவ்விழிந்த வுடலைத் தரிக்கும் மூன்று தாதுக்களைப் போன்று இவ்வுலகைத் தாங்கும் அக்கினியாதி மூன்று மசத்திய மென்பதில் சுருதி திருஷ்டாந்தத்தோடுங் கூறியதெனக் கூறுகின்ருர்.

இவணமிவ் விரவி வன்னி யிந்துவென் றுரைத்த மூன்றும்
பவசகத் திதியி னேதென் பதுபிர சித்தமாகு
முவமையின் மிருதி வேத முலகினல் வெளிய தேது
சிவமறை யசத்த தென்னுச் செப்பிய ததனை மன்னே.

(ப-ரை)—இவணம் - இங்ஙனம், இவ்விரவி வன்னி இந்துவென்றுரைத்த மூன்றும்-இச்சூரியன் அக்னி சந்திரன்என வுரைக்

கப்பட்ட மூன்றும், பவசகத் திதியி னேதென்பது - உற்பத்தி யுடைய உலக திதிகாரணமென்று கூறப்படுவது, உவமையில்-சமானமற்ற, மிருதிவேத மூலகில் - ஸ்மிருதியிலும் வேதத்திலும் உலகத்திலும், நல்வெளியது பிரசித்தமாகும் - மிகவும் வெளிப் படையாகக் காணலாம், எது அதனை - காரணமான அச்சூரியன் முதலிய மூன்றையும், சிவமறை அசத்ததென்ற - மங்கலவடிவ வேதம் மித்தையென்று, செப்பியது - கூறியது.

(ப-ம்)—கூறியவண்ணம் ரவி வன்னி சசி மூன்றும் உலக திதி காரணமென்று மிருதி வேதம் முதலியவற்றை யறிந்தோ ரிடம் வெளிப்படையாம் “இந்த அக்ஷரத்தின் ஆணையினனே ஏகார்க்கி! சூரிய சந்திரர்கள் தாங்குகின்றவர்களாக நிறுத்தப்பட் டார்கள். நான் வைசுவான ராக்கினியாய்ப் பிராணிகளின் தேக த்தை ஆசிரயித்துப் பிராணபானனேடுங் கூடி நான்குவித அந்நத் தைச் சீரணிப்பிக்கின்றேன். எந்த் தேஜஸ் சூரியனை யடைந்து சர்வ லோகத்தையும் விளக்குகின்றதோ எவ்வொளி சந்திரனிட த்தில் எவ்வொளி அக்கினியில் அவ்வொளி என் சம்பந்தமென வறி. அக்கினியிற் பெய்யப்பட்ட ஆகுதி நன்று யாதித்தனே யடைகின்றது ஆதித்தனினின்றும் விருஷ்டி விருஷ்டியினின் றும் அன்னம் அதினின்றும் பிரஜைகள் உண்டாகின்றன” என் னும் வேதம ஸ்மிருதி ஆகிய இவைகளை அறிந்தோரால் கூறப் படும் உலக காரண சந்திர சூரியாக்கினிகளை சுருதி அநிர்தமெ னக் கூறியதென்பது பொருள். (118)

(அ-கை)—எவ்வண்ணம் சுருதி அக்கினியாதி மூன்றையு மசத்தியமெனக் கூறினதென்னும் வேட்கையில் அச்சுருதியின் வாக்கியப் பிரகாரத்தைக் காண்பிக்கின்றார்.

எவ்வெழிற் சிவப்பு வெண்மை கருமையிவ் வுருவ மூன்றுஞ்
செவ்வழ லாதி தம்மிற் செகத்துள ரறிவர் தாமே
யவ்விது தைச சத்தோ டாப்பிய மன்ன மென்ன
மூவ்வகை யவையே நித்த மெனமறை மொழியுமாதோ.

(ப-ரை)—எவ்வெழில் சிவப்பு வெண்மை கருமை - எந்த அழகிய செம்மை வெண்மை கருமை என, இவ்வுருவ மூன்றும்-இம்மூன் றுருவமும், செவ்வழ லாதிதம்மில் செகத்துள ரறிவர்-செவ்விய அக்கினி சந்திரன் சூரியன் என்னு மிவைகளிடத்தில் உலகத்தோ ரறியா நிற்பர், அவ்விது-அங்ஙன மாய செம்மையாதி மூன்றும், தைசசத்தோடு ஆப்பியம் அன்னம் என்னு - தைசசம் (தேஜஸ் காரணம்) என்றும் (சந்திர காரணம்) ஆப்பியமென்றும் (சூரிய காரணம்) அன்னமென்றும் கூறப்படுவனவாம், மூவ்வகை யவையே நித்தம் என - அச்செம்மையாதி மூன்றுமே நித்தியங் கள் என்று, மறை மொழியும் - வேதங் கூறுகின்றது.

(ப-ம்)—" யாது அக்கினியின் சிவப்பு ரூபம் அந்த ரூபம் தேஜசிற்கு, யாது சுக்கிலமோ அது ஆப்பியத்திற்கு, யாது கிரு ஷ்ணமோ அது அன்னத்திற்கு" என்று சாந்தோக்கிய சுருதி கூறு கின்றது. அக்கினி முதலியவற்றில் அனுகதமாக எச்சிவப்பு வெண்மை கருமை ரூபங்களை ஜனங்கள் அறிகின்றார்களோ; அவற்றில் யாது சிவப்புரூபமோ அது தேஜஸ் சம்பந்தி என்னும் தைஜஸமாம் அதாவது அக்கினிக்குக் காரணம் சிவப்பு ரூபமாம். அவற்றன் யாது வெண்மை ரூபமோ அது அப்பு சம்பந்தி என் னும் ஆப்பியமாம்; ஈண்டு அப்பின் அபேதத்தால் அமிர்த கிரண முடைய சந்திரன் லக்ஷிக்கப்படுகின்றான் இதனாற் சந்திரனுக்குக் காரணம் வெண்மை ரூபமாம். அவற்றுள் யாது விளக்கமான கருமை வர்ணமோ அது, திவாகரன் அன்ன காரணனுதலின் அன்ன சத்தத்தால் லக்ஷிக்கப்படுகிறான் ஆகலின் அவனுக்குக் காரணமாம். என்று சுருதி கூறியவண்ணம் " கருமையோடுங் கூடிய செம்மையாலாவரிக்கப்பட்டோனாய்ச் சூரியனாகிய தேவன் இரணியவடி வாதத்தைப் பூலோகத்திலும் தேவலோகத் திலுஞ் செலுத்திக்கொண்டு புவனங்களைப் பார்க்கின்றவனாய் அந்த ரதத்தாற் செல்லுகின்றான்" என்னுஞ் சுருதியால் திவா கானுக்குக் கிருஷ்ண ரூபம் அறியப்படுகின்றது. இங்ஙனஞ் சந் திர சூரியாக்கினிகள் வெண்மை கருமை செம்மைகளின் காரி யங்களெனக் கூறிய சுருதியே வெண்மையாதிகள் சத்தியமெனக்

கூறியது. இதனல் காரண வடிவ அருணாதி மூன்றுஞ் சத்தியம் அதன் காரியவடிவ வன்னியாதி மூன்றும் அசத்தியம் எனச் சித்திக்கையில் இத்திருஷ்டாந்தத்தாற் காரியமான மன முதலிய வுலகு அனித்தியமெனவும் காரணவடிவப் பிரஹ்மஞ் சத்தியமெனவும் சாதிக்கக் கூடுமென்ப தபிப்பிராயம். (119)

(அ-கை)—இங்ஙனஞ் சுருதி எத்திருஷ்டாந்தத்தாற் காரணவருணாதிகள் சத்தியமெனவும் காரிய வன்னியாதிகள் அசத்தியமெனவுங் கூறிற்றென்னும் அவா நிகழ அதற்குத் திருஷ்டாந்தத்தைக் கூறும்பொருட்டுக் கனகாதிகள் சத்தியமெனவும் ஆபரணாதிகள் அசத்தியமெனவுங் கூறுகின்றார் பின்னிரண்டு செய்யுட்களால், ஆண்டு முதற் செய்யுளால் ஆபரணாதிகள் அசத்தியமெனக் காண்பிக்கின்றார்.

பொன்மய மாதி யான பூடண மாதி யெல்லா
நின்மல வணிமுன் னும நிமித்தம தெனினும் பொய்யாந்
தன்மைய தாக வென்றுந் தடையற வறியலாகு
மின்மணி யணிமுன் புந்தி யிவண்பிறந் திடுமெதாலே.

(ப-ரை)—பொன்மய மாதியான - பொன்னின் வடிவமாகவே யிருப்பது முதலிய, பூடண மாதியெல்லாம்-கடககுண்டல ஆபரணாதிகளெல்லாம், நின்மல வணிமுன்னும நிமித்தம தெனினும் - பரிசுத்தமான கடககுண்டல ஆபரணாதிகளின் பெயருக்குக் காரணமாயினும், பொய்யாந் தன்மையதாக - மித்தையாத் தன்மையினையுடையனவாக, என்றுந் தடையற வறியலாகும்-எப்போதுஞ் சந்தேகமின்றி யறியத் தக்கனவாம், எதால் - எனெனின், இவண் - ஈண்டு, இன்மணி யணிமுன் புந்தி - மகிழ்வு தரும் அழகிய கடககுண்டல ஆபரணாதிகளின் புத்தி, பிறழ்ந்திடும் - பிறழ்ச்சியை யடைந்திடு மாதலினாலாம்.

(ப-ம்)—கனகாதி காரிய வாபரணாதிகள் தமது நாம காரணமதேனும் அவற்றின் ஞானம் பிறழ்வுடைமையின் அசத்தியமா யறியப்படுகின்றன வென்பது பொருள், (120)

(அ-கை)—காரியமான வாபரணாதிக ளசத்தியமெனக் கூறி இனிக் காரணமான கனகாதிகள் சத்தியமெனக் கூறுகின்றார்.

கனக முன்மதி யதுபுரு டனுக்கெந்தக் காலு
முனிற் பிறழ்ச்சிய துடையதிங் கலவுய ரதனற்
கனக முற்பொரு ளபிமதங் கருதுசத் தியமாய்
நினையி வைதமில் விபர்யய மதுவிலை நீயே. (121)

(ப-ரை)—கனகமுன்மதியது - பொன் முதலிய புத்தி, எந்தக் காலும் உனில் - கருதுமிடத்து எப்போதும், புருடனுக்கு - காரணவாராய்ச்சி செய்யும் புருடனுக்கு, பிறழ்ச்சியது உடையது இங்கு அல - ஈண்டுப் பிறழ்வை யடைவதன்று, உயர் அதனல் அபிமதம்-காரணமாக அங்கீகரிக்கப்பட்ட, கனகமுற்பொருள் - பொன்னாதி பொருள்களை, நீ சத்தியமாய் கருது - சத்திய வஸ்துக்களாக நினைப்பாயாக, நினை இவைதமில் - இங்ஙனங் கருதப் பட்டவைகளில், விபர்யயமதுவிலை - பிராந்தியின்று.

(ப-ம்)—உண்மையைக்காண விரும்பியோனது பொன்னாதி புத்தி எக்காலும் பிறழ்வுடையதன்று. ஏனெனின் கனகாதிகாரிய வாபரணாதிகளில் அநுசூதமா யிருத்தலினாலாம். கனகாதிகளும் ஆபரணாதிகளும் வித்தியாசமின்றியதேனும் கனகாதி சத்தியம் ஆபரணாதி யசத்தியமெனப் பொருள். (121)

(அ-கை)—அங்ஙனமாயின் திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களில் எது எதற்குச் சமானமென்னும் வேட்கையில் கூறுகின்றார்,

அணியாதி சமந்தழ லாதிய தாம நித்த
குணமாமத னாற்சுட ராதி குலா விடுங்கா
ரணமா மருணாதிய மூன்று மநித்த மின்றாந்
துணிவாற்கன காதிய தோடு துலிய மாமே. (122)

(ப-ரை)—தழலாதியதாம் - நெருப்பாதி மூன்றும். அநித்த குணமதனல் - அநித்தியகுண முடையதனால், அணியாதிசமம் - ஆபரணாதி துல்லியமாம், சுடராதிகுலாவிடும் - அக்கினி முதலிய வற்றில் விளங்குகின்ற, காரணமாம் அருணாதிய மூன்றும்- காரணமான செம்மையாதி மூன்றும், அநித்தமின்றாந் துணிவால் - சத்

தியமென்னு நிச்சயத்தால், கனகாதியதோடு துலியமாம் - பொன் ஞதிகளோடு சமானமாம்.

(ப-ம்)—அக்கினியாதி மூன்றும் அசத்தியகுண முடைமை யின் ஆபரணுதி யொத்து மித்தையாம். அக்கினியாதி காரண செம்மையாதி சத்தியகுணமுடைமையின் கனகாதி யொத்து சத் தியமாம் என்பது பொருள். (122)

(அ-கை)—இக்கனகாபரண வுபமானத்தால் காரணமான செம்மையாதி சத்தியமென்றும் காரியமான வக்கினியாதி யசத் தியமென்றுஞ் சுருதியே கூறினதென்று கூறுகின்றார்.

உவமான மிதுகொடு தீயுடு நாத னேடுஞ்
சவிதாவெனு மூன்றற் கநித்த மறைகள் சாற்றுந்
துவராதிய மூன்றற் கநித்தமி றாய்மை யுஞ்சீர்
நவமாகிய நான்மறை நாளு நவிலு மாதோ. (123)

(ப-ரை)—உவமான மிதுகொடு - இவ்வுபமானத்தானேயே- தீ - அக்கினி, உடுநாதன் - சந்திரன், சவிதா - சூரியன், எனு மூன் றற்கு - என்ற மூன்றிற்கும், மறைகள் - வேதங்கள், அநித்தம் - மித்தையாத்தன்மையினே, சாற்றும்-பிரதிபாதிப்பன, துவராதிய மூன்றற்கு - செம்மை முதலிய மூன்றினுக்கும், அநித்தமில் றாய் மையும் - நித்தமான பரிசுத்தத் தன்மையினேயும், சீர் - சிறப்பு வாய்ந்த, நவமாகிய - அழகிய, நான்மறைநாளும்-நான்கு வேதங் களெப்போதும், நவிலும் - கூறுகின்றன.

(ப-ம்)—"காட்சிக்கினியனே! எங்ஙனமோர் மட் பிண்டத் தை யறிதலினுல் சர்வமும் மண்வடிவா யறிப்பட்டதாகின்றதோ நாமரூப விகாரம் வாக்கை யாரம்பித்தது மண் மாத்திரமே சத்தி யம் எங்ஙனம் எ சௌமியனே! ஓர் லோகமணியை யறிதலினுல் சர்வமும் லோகவடிவா யறியப்பட்டதாகின்றதோ நாமரூப விகா ரம் வாக்கு மாத்திரம் லோகமாத்திரமே சத்தியம்" என்பது முத லிய சுருதிகளினுல் சர்வ காரியமும் காரணமாத்திரமே யெனக் கூறப்பட்டது. இக்கனகாபரண திருஷ்டாந்தத்தால் அக்கினியா

திகள் மித்தை என்றும் செம்மையாதிகள் சத்தியமென்றுங் கூறப் பட்டதென்பது பொருள். (123)

(அ-கை)—அநேக வுப்மானங்களால் மன முதலிய வுலகநித் தியமெனச் சுருதி கூறியதென முற்கூறப்பட்டது. அவ்வுபமானம் அனேகங்களை வேறு பிறித்தறிவிக்கின்றார்.

அனலாதிக் கநித்தியம் யாது மறைக ளாடும்
பனுமீதத னற்றிருட் டாந்த மதாய்ப் பவிக்கு
நனிகாரியம் யாதுமெஞ் ஞான்று மநித்த மோத்தின்
கனமாந்துணி வாலது போன்றல கார ணந்தான். (124)

(ப-ரை)—யாது அனித்தியம் - எவ்வனித்தியத் தன்மை யினை, அனலாதிக்கு - அக்கினி முதலியவற்றிற்கு, மறைகள் ஆடும் - வேதங்கள் கூறுகின்றனவோ, பனும்ஈது - அனலாதி யனித்தியமெனக் கூறப்பட்ட வீது, அதன் நற்றிருட்டாந்தம தாய்ப் பவிக்கும் - சர்வ காரியமுமனித்த மென்பதற்கு நல்ல வுப மானமாகும், (எனெனின்) நனிகாரியம் யாதும் - மிகவும் யாது காரியமோ, எஞ்ஞான்றும் அநித்தம் - அது எப்போதுமநித்த மாதலினாலாம், (இந்நியம மெதனுனெனின்) ஓத்தின் கனமாந் துணிவால் - வேதத்தின் திடமான நிச்சயத்தால், அதுபோன்று காரணம் அல - வேத நிச்சயத்தால் காரணம் காரியம் போன்று அநித்தியமாகாது நித்தியமாம்.

(ப-ம்)—சுருதியி னிச்சயத்தாற் சர்வ காரியமும் ஆபர ணதிபோன்று மித்தையாம் காரண மங்ஙனமன்று என்பது பொருள். (124)

(அ-கை)—காரணத்தைக் கொள்ளல், காரிய திரவியத்தின் நீக்கத்தில் சாதகமென்பது உலகிலும் விளங்குகின்றதெனக் கூறு கின்றார்.

புடவை தனக்குப் பொய்ம்மைதனைப் போதித்திடும் வேட்கைய னூலின், மடிய வுறுங்கா ரியமதனை மருவா தொழிக்கு மதுபோல, நெடிய நூலின் சமமாகி நிகழு மூன்றை நிலைநி றுத்திக், கொடிய கனலாதிய வதற்குக் கூறுமறைக ளொழிவி னையே (125)

(ப-ரை)—புடவை தனக்கு-புடவையின், பொய்ம்மைதனைப் போதித்திடும் வேட்கையன் - மித்தையாத் தன்மையினை அறிவிக்க விரும்பியோன், நூலின்மடியலுறுங் காரியமதனை மருவாதொழிக்கும் - நூலினது நாசமாகுங் காரியத்தைக் கொள்ளாது நிராகரிப்பன், அதுபோல - அவ்வுவமைபோன்று, நெடியநூலின் சமமாகி நிகழும் மூன்றை - நீண்ட நூலையொத்துச் சத்தியமாய் விளங்கும் அருணாதி மூன்றனையும், நிலைநிறுத்தி - நிலைபெறச் செய்து, கொடியகனலாதியவதற்கு - கொடியதாகிய அக்கினியாதி மூன்றிற்கும், மறைகள் - வேதங்கள், ஒழிவினை - அநித்தியத்தன்மையினை, கூறும் - பிரதிபாதிக்கும்.

(ப-ம்)—வஸ்திரத்தின் உண்மையைக்காண விரும்பியவன் எங்ஙனம் நூலின் காரியமான படம் நூல் மாத்திரமே யெனப் படத்தை நிராகரிக்கின்றானோ அங்ஙனமே ஈண்டுஞ்சுருதி நூலிற்குச் சமமான செம்மை முதலிய மூன்றையு மங்கீகரித்து அக்கினியாதி மூன்றையும் மித்தையெனக் கூறியதெனப் பொருள். (125)

(அ-கை)—இங்ஙனம் அக்கினியாதி திருஷ்டாந்தங்களால் மன முதலிய வுலகிற் கசத்தியத்தன்மையும் செம்மையாதி திருஷ்டாந்தங்களாற் பிரஹ்மத்திற்குச் சத்தியத் தன்மையும் சுருதியினபிப்பிராயமெனக் கூறப்பட்டன. இனி ஆண்டேது வினவில் காரியமாதலினானும் காரணமாதலினானும் என விரண்டிடத்து மேது கூறுகின்றார்.

மேதினி யாதி யாக விண்வரை யபர மான
வீதுயர் பாத்து டைய காரிய மென்ன லாகும்
யாதினா லபர மாகுங் காரிய மழிய லாகும்
யாதினாற் பரம தாகுங் காரண மழியா தாமே. (126)

(ப-ரை)—மேதினியாதியாக - பூமிமுதல், விண்வரை - ஆகாய முடிவான, அபரமானவீது, தாழ்ந்ததானவீது, உயர்பாத்துடைய காரியமென்னலாகும் - உயர்வான பரமான்மாவின் காரியமென்று கூறத்தக்கது, அபரம் - உலகு, யாதினால் - எக்காரணத்தால், காரியம் - காரியமாகுமோ, (அதனால்) அழியலாகும் -

அநித்தியமாம், பரம் - பிரஹ்மம், யாதினுல் - எக்காரணத்தால், காரணமாகும் - காரணமா யிருக்கின்றதோ, (அதனுல்) அழியா தாமே - அழிவற்ற நித்தியப் பொருளாம்.

(ப.ம்)—பிருதிவி முதலாகாயம் வரையான தாழ்ந்த வில்வுலகு பிரஹ்மத்தின் காரியமாம். இதனுற் காணப்படு முலகனைத்தும் பிரஹ்மத்தின் காரியமாதலின் மித்தை காரணமான பிரஹ்மமெனினே பிரகிருதியாதலின் சத்தியம். திருசிய மன முதலிய வுலகனைத்தும் அநித்தியம் காரியமாதலின் அக்கினியாதி போன்று. மேலான பிரஹ்மமோ சத்தியம் காரணமாதலின் செம்மையாதி போன்று, அக்கினியாதி மூன்று மசத்தியம் காரியமாதலின் ஆபரணுதி போன்று. செம்மையாதி மூன்றும் சத்தியம் காரணமாதலின் கனகாதி போன்று. என்பது சமுதாயார்த்தம். (126)

(அ-கை)—கூறிய வேதுவாற் சாதித்த பொருளை முடிக்கின்ருர்.

ஆதலாற் பிரம மான சத்தசத் தாத லின்ரும்
பேதமா மன்னி யங்கள் பெட்டெனல் சித்த மாகு
மாதலா லுதய முற்ற சகமசத் தென்ன முன்ன
மோதிய தென்னு லீண்டுச் சித்தமுற் றதுநீ யோரே. (127)

(பதை)—ஆதலாற் பிரமமான சத்து - ஆகலின் பிரஹ்மமான சத்வஸ்து, அசத்தாதலின்ரும் - பொய்யாகாதாம், பேதமாம் அந்நியங்கள் - சைதன்னியத்தினும் வேருன காரியமனைத்தும், பெட்டெனல் சித்தமாகும் - மித்தை என்று சித்தித்தது (இதனுலென்ன வந்தது எனின்), ஆதலால்-இங்ஙனம் கூறியதால், உதயமுற்ற சகம் - உற்பத்தியுடைய வுலகு, அசத்தென்ன - மித்தையென, (என்னுல்) முன்னம் ஓதியது - முன் கூறப்பட்டது, ஈண்டுச் சித்தமுற்றது - இங்ஙனம் நிலைபெற்றது, நீ ஓர் - நீ தெரிந்து கொள்ளுவாயாக.

(ப.ம்)—காரணஞ் சத்தியம் காரிய மசத்திய மென்பதனுல் பிரஹ்மஞ் சத்தியம் அதனினும் வேருன சர்வகாரியமு மசத்திய

மெனப்பட்டது. அதனால் உற்பத்தியுடைய வுலக னித்தியமென யாது எம்மால் முன் கூறப்பட்டதோ அது இங்ஙனம் நிலை பெற் றது என்பது பொருள். (127)

(அ-கை)—ஆக்ஷேபம் கூறியவேது வானுலகு மித்தையா குக மனமும் அதன் சஞ்சாரமான சாக்கிராதிகளும் மித்தையன் றென வாக்ஷேபித்துக் கூறுகின்றார்.

முனம்பு கன்றிடு மேதுவி னுன்முளைத் தெழுந்த
மனந்த னக்கும சத்தியத் தன்மையே மருவு
மனந்தி னம்புரி சரிதமும் பொய்ம்மையாய் வயங்கு
மனங்கு யிற்றிடு மதகரி மயற்செயன் மானும். (128)

(ப-ரை)—முனம் புகன்றிடு மேதுவினுன் - முன் சொல்லப் பட்ட காரியத் தன்மையாகிய வேதுவினால், முளைத்தெழுந்த மனந் தனக்கும் - காரியமாய் ஜனித்த மனதிற்கும், அசத்தியத் தன்மையே மருவும் - மித்தையாந் தன்மையே பொருந்தும், மனம் - மனதும், தினம்புரி சரிதமும் - தினந்தோறுஞ் செய்யுஞ் சரித்திரமாகிய அவஸ்தாத்திரயமும், பொய்ம்மையாய் வயங்கும்- மித்தையாகவே நிகழும், (எங்ஙனமெனின்) மனங் குயிற்றிடு மத கரி - மனதின் மயக்காற் செய்யப்பட்ட மதத்த யானையினது, மயல்செயல் மானும் - மயக்கத்தாற் காணப்பட்ட சேஷ்டையை யொப்பாக என்பதாம்.

(ப-ம்)—மனதுங் காரியமெனக் கூறப்பட்ட வேதுவானே மித்தையாம். அதனுன் அதன் சஞ்சாரமாகிய அவஸ்தாத்திரய மும் கற்பித யானை மித்தையாதலின் அதன் சேஷ்டையும் மித் தையாவது போன்று மித்தையாம். (128)

(அ-௯க)—ஆக்ஷேபம் மனங் காரியமாயின் மித்தையாம் ஆனல் அதனுற்பத்தி கேட்கப்படாமையால் அது வின்றெனப் பூர்வ வாதி சங்கிக்கின்றான்.

ககன மாதியி னின்றறி வினினின்றுங் கருத்தினுக் கரும்வேத, மிகலு நீள்பிறப் பறைந்தில தாதலா லெவ்வித மதனலே, புகும காமன மிதனது வசத்தியப் புந்தியுற் றிடல்கூடும், பகவ னேமிக வுறுதிய தாயெனக் கருளொடும் பகர்வாயால். (129)

(ப-ரை)—அரும் வேதம் - அரிய வேதமானது, கருத்தினுக்கு - மனதிற்கு, இகலும் நீள் பிறப்பு - விரோதமான நெடிய வுற்பத்தியை, ககன மாதியினின்றும் - ஆகாயாதிகளி னின்றேனும், அறிவினினின்றும் - பிரஹ்மத்தினின்றேனும், அறைந்திலதாதலால் - கூறவில்லையாதலின், அதனால் - அங்ஙனங் கூறுமையான், புகும் மகா மனமிதனது - சஞ்சலமுடைய பெரிய விம்மனத்தினது, அசத்தியப் புந்தியுற்றிடல் - மித்தையாகிய ஞானத்தை யுடையவனாதல், எவ்விதம் - எப்பிரகாரம், கூடும்- பொருந்தும், (இதனை) பகவனே ! - ஷட்குண ஐசுவரிய சம்பன்னரே !, மிக வுறுதியதாய் - மிகவும் உண்மையாக, அருளொடும்- கிருபையால், எனக்கு - தங்கள் சீடனான வடியேனுக்கு, பகர்வாயால் - தேவரீர் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

(ப-ம்)—மனதி னுற்பத்தியைச் சுருதி பரமான்மாவி னின்றேனும் அல்லதா காயாதிகளினின்றேனுங் கூறவில்லையாகலின் மனம் எங்ஙனம் மித்தையாக வறியப்படல் கூடும் பகவனே இதனை விசாரித்துத் தாங்கள் கூறவேண்டுமென்பது அபிப்பிராயம். (129)

(அ-கை)—சாந்தோக்கியத்தின் எழாவது அத்தியாயத்தில் "ஆன்மாவினின்று மனம்" என்பது முதலியவற்றால் மனம் பரமான்மாவின் காரியமெனக் கேட்கப்படுதலினால் இக்கேள்வி பொருத்தமின்றியதெனச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்.

சாந்தோக் கியத்தின் சத்தமத்திற் சத்தாம் பிரமமதி
னின்றும், போந்த பான்மை மனந்தனக்கு முயிர்ப்பி
னோடும் புகன்றிடலாற், சாந்த மாகுங் காரியத்தின் றருமம்
வாய்ந்த மனமிதற்கே, காந்தியான மெய்ம்மையது மெவ
ணம் பவிக்குங் கழறுதியால். (130)

(ப-ரை)—சாந்தோக்கியத்தின் - சாந்தோக்கிய வுபநிடதத்தின், சத்த மத்தில் - எழாவது அத்தியாயத்தில், சத்தாம் பிரமமதினின்றும் - சத்தாகிய பரமான்மாவினின்றும், உயிர்ப்பி

ளுேடு - பிராணனேடுங் கூட, மனந் தனக்கும் - மனதிற்கும், போந்த பான்மை - உற்பத்தியான தன்மையை, புகன்றிடலால்- கூறுகின்றமையின், சாந்தமாகுங் காரியத்தின் றருமம் வாய்ந்த - நாசமாகும் காரியத்தன்மையையுடைய, மனமிதற்கு - இம்மன திற்கு, சாந்தியான மெய்ம்மையதும் - பிரகாசமுடைய சத்தியத் தன்மையும், எவணம் பவிக்கும் - எம்மாதிரி யுண்டாகும், கழறுதி - கூறுவாயாக வென்பதாம்.

(ப-ம்)—சாந்தோக்கிய வுபநிஷத்தி னேழாவது அத்தியாயத்தில் ஆன்மாவினின்றும் பிராணனேடு மனதினது வுற்பத்தியைச் சுருதி கூறுவதால் காரிய தருமமுடைய மனதைச் சத்தியமா யறித லெங்ஙனங் கூடும்? ஆகலின் பரமான்ம காரியமாதலின் மனம் அத்தியந்த மசத்தென்பது பொருள். (130)

(அ-கை)—பரமான்மாவினின்றும் மனதி னுற்பத்தி முண்டகத்திலுங் கேட்கப்படுகின்றதெனக் கூறுகின்றார்.

கரணம்முயிர்ப் பதனேடு நுண் ககனுதியி னேடுந்
தெருணற்பர மான்மாவெனத் திகழும்புரு டனினின்
றுருணும்மன முதிதம்மென வுயர்முண்டக மொழியும்
பொருணுங்கிடு மனமாதலிற் பொய்யாமென வுணர் நீ

(ப-ரை)—கரணம் - கரணத்தோடும், உயிர்ப்பதனேடும் - பிராணனேடும், நுண் ககனுதியி னேடும் - சூக்குமமான வாகாயாதிகளோடும், தெருள் - ஞானவடிவ, நற்பரமான்மா வெனத் திகழும்-நல்ல பரமான்மாவென விளங்குகின்ற, புருடனினின்று - புருடனிடத்தினின்றும், உருள் நும்மனம் உதிதம் - சஞ்சலமுடைய வுமது மன முற்பத்தியானது, என - என்று, உயர்முண்டக மொழியும் - உயர்ந்த முண்டக வுபநிடதம் புகலும், பொருள் நுங்கிடு மனமாதலில் - மனம் பரமான்மாவினு லழிக்கப்படுமாதலின், நீ பொய்யாமென வுணர் - பொய்யென நீ தெரிந்துகொள்.

(ப-ம்)—"இதனினின்றும் பிராணன் மனம் சர்வ இந்திரியங்களு முண்டாகின்றன. ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, சர்

வத்தையுந் தாங்குகின்ற பிருதிவியும்" என்பன முதலிய முண்டக வுபநிடதத்திலும் பிராணுதிகளோடு பரமான்மாவினின்றும் மனமுண்டாயிற் றென்பதனல் நீ மனதை மித்தை என வுணர் எனப் பொருள். (131)

(அ-கை)—இங்ஙனம் மனம் பரமான்மாவின் காரியமாகக் கேட்கப்பட்டமையின் மித்தை எனப்பட்டது. இனி பௌதிகமாகக் கேட்கப்படுதலினுனும் மித்தை எனக் கூறுகின்றூர்.

மனமோவன மயப்பான்மைய தெனவேமறை மொழியு
நனியாதலி னுலேயுட லதுபோலநற் றிடமாய்க்,
கனபூத மென் னதன்காரியங் கசடேயற வுறலா,
மனமானது வதனுன்மலி பொய்யாமென மதிநீ. (132)

(ப·ரை)—மனமோ - மனமானது, அனமயப் பான்மைய தெனவே - அன்னமயத் தன்மையது என்று, மறை மொழியும் - வேத வாக்கியமும், நனியாதலினுல்-மிகவுங் கூறுகின்றதா யிருப்பதினுல், நற்றிடமாய் - நல்ல நிச்சயமாக, உடலதுபோல - சரீரம் போன்று, கனபூத மென்னதன் - பருத்த பூதமென்பதினது, காரியம் - காரியமாக, கசடே யறவுறலாம் - குற்றமற அடைகின்றது, அதனுல் - பூத காரியமாதலின், மனமானது, மலிபொய்யாமென மதிநீ - அத்தியந்தம் பொய்யென நீ அறிவாயாக.

(ப-ம்)—"ஹே! காண்டற் கினியோனே! மனம் அன்னமயம். பிர்ாணன் ஜல மயம். உண்ட வன்னம் மூன்று பாகம் அதன் மிகச் சூக்குமம் மனம்" என மனமன்ன மயமா யறியப்படுதலினுனும் மித்தை என வறிவாயாக வெனப் பொருள்.(132)

(அ-கை)—இங்ஙனங் காரியத்தன்மையாகிய எது வுடைமையின் மன முதலிய வுலக னித்திய மெனப்பட்டது. இனி ஆதியந்த முடைமையானுமெனவேறனுமானத்தினுனும் மன முதலிய வுலகிற் கனித்தியத்தன்மை சாதிக்கத் தக்கதாம் எனச் சிஷியனைச் சிக்ஷிக்கின்றூர்.

ககனாதிய வுதயஞ்செறி யிவையா வையுங் கருதில்,
உகுமா பொய்ம்மை யெனுமீதினைப் பிரதிஞ்ஞை யென்று
ஞற்றாய், தகுமீறினின் முதலில்லிலை யெனவே துவதாகும்,
புகுபூடண மதுபோலெனல் புகல்வாயுவமமெனா. (133)

(ப-ரை)—ககனாதிய - ஆகாய முதலிய, உதயஞ் செறி-உற்பத்தியுடைய, இவை யாவையும்-இப்பூதாதி யாவையும், கருதில்-எண்ணுமிடத்தில், உகுமா பொய்ம்மையெனு மீதினை - அழிவான மித்தை யென்னுமிதனை, பிரதிஞ்ஞை என்றுஞற்றாய்-பிரதிக்ஞைபாகச் செய்வாய், தகும் - தகுதியுடைய, ஈறினின் (இலை) முடிவிலுமின்று, முதலில் இலை - உற்பத்திக்கு முன்னுமின்று, என - என்பது, ஏதுவதாகும் - ஏதுவாகும், புகுபூடண மதுபோலெனல் - அழியும் ஆபரணத்தைப்போன்று என்பது, புகல்வாய் வுவமமெனா - உவமானமென்று கூறுவாய்.

(ப-ம்)—விண்முத லுண்டா முலகனைத்து மனித்தியம் உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னு மின்மையால் ஆபரணாதி போன்று என்பது பொருள். (133)

(அ-கை)—கனக ஆபரண திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களை விரித்துரைக்கின்றார்.

கனகந்தனி லெழுபூடண முனமுண்டல கருதிற்
பினுநன்முடி வதிலிங்கிலை யெனபேரிழு தையதே
மனுமிவ்வுழி வனினும்மிதை மானும்மிவை யெவையாஞ்
சனிதம்பெறு நபமாதிக டையில்லசத் தாமே. (134)

(ப-ரை)—கனகந் தனில் - பொன்னினிடத்து, எழுபூடணம் - உண்டாகின்ற வாபரணமானது, கருதில் - விசாரிக்குமிடத்தில், முனமுண்டல - உற்பத்திக்கு முன்னின்று, பினும் நன் முடிவதில் - நன்றாக அழிந்த பின்னரும், இங்கிலையென பேரிழுதை - ஈண்டு இன்று என்றுமிகப் பொய்யாம், அதே-அதனானேயே, மனும் இவ்வுழி தனினும் - பொருந்திய நிகழ்காலத்திலும் இன்று, இதை மானும் - இப்பொன்னாபரணம் போன்று,

இவை எவையாம் சனிதம்பெறு நபமாதிகள் - இவ்வுற்பத்தி யுடைய எவ்வாகாயாதிக ளுண்டோ அவைகள், தடையில் அசத் தாம் - தடையின்றித் துச்சமாம்.

(ப-ம்)—காரண வடிவ கனகத்திற் காரியவடிவ ஆபரணாதி கள் முன்னும் பின்னுமின்று "முன்னும் பின்னும் யாதின்றே நிகழ்விலு மஃதங்ஙனமே" என்னு நியாயத்தால் நிகழ்காலத்தி லுங் கனகவிய திரேகயாக ஆபரணாதியின்று, அங்ஙனமே உற் பத்தியுடைய வுலகு மூன்றுகாலத்து மின்றென்பது பொருள்.

(அ-கை)—இங்ஙனங் கனகாபரண திருட்டாந்தத்தினால் காரியங் காரணத்தினு மன்னியமாக வின்றெனத் தனது சித்தாந் தங் கூறப்பட்டது. ஆண்டிஃதா சங்கையாம். காரிய காரணங் களுக்கு அத்தியந்த பேதமுண்டு அவற்றின் அபேத விளக்கமோ சமவாய சம்பந்தத்தாற் றோன்றுகின்றது என வைசேஷிகாதிக ளின் சங்கை அவர்களைக் குறித்துச் சித்தாந்தி கூறுகின்றார்.

கனகாதியி லுளதாகிய களிபூடண முதலுஞ்
பொனின்வேறென வுளதாயிடிற் புகலும்பரி மாண
நனிகூடிட லிலதேனிவை தமினாடிடி னலமாய்ப்
பனல்வேண்டிடுந் தடையொன்றறப் படிமீதிது தனையே.

(ப-ரை)—கனகாதியி லுளதாகிய - பொன்னாதிகளிலுண் டான, களிபூடண முதல் - பிரியமான ஆபரணாதிகள், பொனின் வேறெனவுளதாயிடில் - காரணமான பொன்னினும் அன்னிய மாயின், புகலுப் பரிமாணம் - பிரதிபாதியா நிற்கும் பருமன் ஆனது, நலமாம் நாடிடில் - நன்றாக வாராயுமிடத்து, இவைதமில் இவ்வாபரணாதிகளில், நனிகூடிடல் இலது என் - என் மிகவும் அதிகமாகக்காணப்படவில்லை, படிமீது - இப்புவியில், இதனை - காரணத்தினு மன்னியமான காரியத்தில் பரிமாணகுணம் அதிக மாகக் காணப்படாமையை, தடை யொன்றற - யாதொரு தடை யுமின்றி, பனல் வேண்டிடும் - கூறவேண்டும்.

(ப-ம்)—கனகாதிகளினும் ஆபரணாதிகளன்னியமாகவே யுண்டாயின வெனின் அக்காலிவ்வாபரணாதிகளில் என் அதிக

குருத்துவமுண்டாகவில்லை என்று கேட்கின் குசலர்களான தார்க்கிகர்கள் இவ்வினாவிற்கு அவசிய முத்தரங் கூறவேண்டும் கூற முடியாதென்பது பொருள். (135)

(அ-கை)—இதனானுங் காரிய காரணங்களுக்குப் பேதம் பொருத்தமன்று.

கனகாதியி லுளவாதலிற் கனகாதிக டமின்வே
றெனவேயணி முதலாயன வுளவேயில வெதனாற்
றனியேகன கமதாதிய கொளலே தகவிலதா
லெனகாரண மதுவேநிச மிதில்வேறிழு தையதே. (136)

(ப-ரை)—கனகாதியிலுளவாதலில் - பொன்னாதிகளிலிருக்கின்றமையின், கனகாதிகள் தமின்வேறெனவே - பொன்னாதிகளினும் வேறாயிருக்கின்றன வென, அணிமுதலா யனவுளவேயில - ஆபரணாதிகள் இருப்பனவேயில, எதனால் - ஏனெனின், தனியே - அன்னியமாக, கனகமதாதிய - கனகாதிகளைக் காரணமாகவுடைய (ஆபரணாதிகள்), கொளலேதகவிலதால் - கொள்ளுதலுக்குத் தகுதியுடையதன்றாதலினால், என - என்று, காரண மதுவே நிசம் - காரணமே சத்தியம், இதில் வேறு- காரணத்தினு மன்னிய காரியம், இழுதையது - பொய்யானது.

(ப-ம்)—ஆபரணாதி கனகாதியினு மன்னியமா யறியப்படாமையின் வேறன்று. ஆகவின் காரணமேயுண்மைப் பொருள் அதினன்ய காரிய மசத்தியமெனப் பொருள். (136)

(அ-கை)—ஆக்ஷேபம் அங்ஙனமேனும் நாமரூபாகாரங்களாற் காரிய காரணங்களுக்குப் பேதமே யென்று பூர்வவாதி சங்கிக்கின்றான்.

தருகாரண மதினுமமொ டுருவந்தனி னேடும்
விரிவேறென வுளதாகலின் வினைகாரியம் வேறே
யிரிகாரிய முறுகாரண மிதின்வேறதிங் கிலதா
மருமாமதி யெங்ஙன்னுள ததுவாமிதை யறைவீர். (137)

(ப-ரை)—தருகாரணமதின் - உண்டாக்கும் காரணத்தின் வேருன, நாமமொடு - பெயரோடும், உருவந்தனிஞேடும் - ரூபத்திஞேடும், விளைகாரியம் - உண்டாகும் காரியமானது, விரி வேறெனவுளதாகலின் - விரிந்த பேதத்தினுல் வேருகவுண்டாவ தனுல், வேறே - அன்னியமேயாம், இரிகாரியம் - அழியுங்காரிய மானது, உறுகாரணமிதின் - பொருந்திய காரணத்தினும், வேறது இங்கு இலதாம் - வேருக வீண்டு இன்ருயதாகும், அருமாமதி - அரிய பெரிய புத்தியானது, எங்ஙனுளது - யாண்டு இருக்கின்றது, அதுவாம் இதை - அங்ஙனமுண்டாகு மிப்புத்தியினை, அறைவீர் - கூறுவீராக.

(ப-ம்)—காரணத்தினுங் காரியத்திற்குப் பெயர் ஆகாரம் வேருகக் காணப்படுகின்றமையின் வேறன்றெனவறியப்படுத லெங்ஙனம் பொருந்து மிதனைப் புகலல் வேண்டும். காரணத் தினுங் காரியம் வேறு நாமத்தாலும் வடிவத்தாலும் காரியத்தன் மையாலும் என்பதா க்ஷேபம் எனப்பொருள். (137)

(அ-கை)—இவ்வனுமானம் பிரத்தியக்ஷ விரோதமெனச் சித் தாந்தி கூறுகின்றார்.

ஈண்டு வீரணந் தந்துபொன் மண்ணெனு மிவையே
நீண்ட பாய்பட மாரமுங் குடமதாய் நிகழக்
காண்ட லாயது வுலகராற் கண்டிடு மதனுல்
வேண்டு காரணங் காரியம் வேறிலை யறிநீ. (138)

(ப-ரை)—ஈண்டு, கண்டிடும் - பார்க்கின்ற, உலகரால் - உல கத்திலுள்ள சர்வ சனங்களாலும், வீரணம் - கோரை, தந்து - நூல், பொன், மண், எனுமிவையே - என்னு மிவற்றையே, நீண்டபாய் - நீளமான பாய் என்றும், படம் - வஸ்திர மென்றும் ஆரம் - ஆபரணமென்றும், குடமதாய் - குடமென்றும் (ஆகிய இவைகளாக), நிகழக் காண்டலாயது - விளங்குவதாகப் பார்க்கப் பட்டது, அதனுல் - அங்ஙனங் காரணத்தையே காரியமாகக் காண்டலின், வேண்டு காரணம் காரியம் வேறிலை - வேண்டப் படுங்காரணமும் காரியமும் அன்னியமாகவின்று யென, நீ அறி- நீ அறிவாயாக.

(ப-ம்)—வியவகார காலத்தில் பார்ப்போரால் கோரையாதிகளே பாயாதி வடிவாய்க் காணப்பட்டது. வஸ்திராயின் வடிவம் நூலாதியாகவே காணப்பட்டமையின் காரணத்தினுங் காரியம் வேற்றுமையை யுடையதன் றென்பது பொருள். (138)

(அ-கை)—கூறிப்போந்த பொருளேயே விரிக்கின்றார்.

காரண மதனி னின்றுங் காரிய மனிய மின்றேற்
பேருரு வாதி யாய பேதமும் பொருந்தா தென்ன
வூருன துணர்வு வாளா வுறுமுல கினர்க ளாலே
காரண மண்ண பேதங் காணலாங் காட்சி யாலே. (139)

(ப-ரை)—காரண மதனினின்றும் - காரணத்தினின்றும், காரிய மன்னிய மின்றேல் - காரியமானது அன்னியமாக இராதாயின், பேர் உருவு ஆதியாய பேதமும் பொருந்தாது என்ன - நாமரூப முதலிய வேற்றுமை பொருந்தாது என்று, ஊர் உனது உணர்வு - ஆராய்ச்சி செய்யச்செல்லுகின்ற உன் புத்தியானது, வாளாவுறும் - வீணுகவே பொருந்தியது, (எனெனின்) உலகினர்களாலே - உலகத்தவர்களால், காரணமண்ண பேதங் காணலாங் காக்ஷியாலே - காரிய குடம் காரணமான மண்ணினுமபேதமாகக் காண வமைந்துள்ள பிரத்தியக்ஷத்தினுல்.

(ப-ம்)—காரணத்தினுங் காரியம் வேறுகாதெனின் நாமரூபகாரிய பேதமும் பொருந்தா தென்னு முன்னுடைய புத்தி காரியகாரண பேதத்தைச் சாதிப்பதாகாது. எனெனின் பிரத்தியக்ஷமாய் உலகோரால் காரியமான கடம் காரணமான மண்ணினும் அபேதமா யறியப்பட்டதாலாம். இதனுன் உனது ஞானம் பயனின்றிய தெனப் பொருள். (139)

(அ-கை)—உன தனுமானம் கேவலம் பிரத்தியக்ஷ விரோதமாத்திரமன்று ஆனல் அனேகாந்திகம் (பிறழ்வுடையது) எனச் சித்தாந்தி கூறுகின்றார்.

உருவமு நாமந் தானுங் காரிய மொருந டற்குத்
தெரிவது வேற தாயு நடன்றிக ழனிய னென்னு
மருவுத லேனின் றென்றே வினவிடின் மதிய ராலே
யுரியவுத் தரம தீதை யுரைத்திடல் கடன தாமே. (140)

(ப-ரை)—ஒரு நடற்கு - ஒரு கூத்தாடியான நடனுக்கு, உருவமு நாமந்தானும் - உருவமும் நாமமும், காரியம் - காரியமும், வேறதாயும் - அன்னியமாய், தெரிவது-அறிபப்படுவதினின்றும் திகழ் நடன் - விளங்குகின்ற நடனனவன், அனியனென்ன - நான் வேறானவனென்று, மருவுதல் எனின்று - பொருந்துதலை எனவன் அடையப்படவில்லை, என்றே - என்று, வினவிடில் - கேட்குமிடத்தில், மதியாலே - புத்திமான்களான நையாயிகரால், உரிய உத்தரமது ஈதை - சரியான சமாதானத்தை, உரைத்திடல் கடனதாம் - கூறுதல் கடனாகும்.

(ப-ம்)—உருவம் காரியம் நாமம் ஆகிய இவைகள் நடனுக்கு வேறாயறியப்பட்டன வெனின் அக்கால் நடன்தன்னினும் அவற்றை வேறாகவே னறிகின்றிலன் என எம்மாற் கேட்கப்படின் நியாய குசலர்களான தங்களால் இதனைச் சொல்லவேண்டும். உமது பிதாக்களாலுமுத்தரங் கூறமுடியாதென்பது பொருள்.

(அ-கை)—சத்து அசத்து சதசத்து என்னு மிவைகளுக்கு ற்பத்தியசம்பவமாதலினாலும் காரிய காரணத்தன்மைகள் கற்பிதமாதலினாலும் காரியம் காரணத்தினு மயலன்றெனப் பின்னுள்ள செய்யுட்களாற் கூறுகின்றார். ஆண்டு அசத்தென்பது வைசேஷிகமதம். சத்தென்பது சாங்கிய மதம் சதசத் தென்பது திகம்பரமதம். இவற்றுள் முதல் வைசேஷிகமதத்தைக் கண்டிக்கின்றார்.

சத்திலதிற் கெவ்விதமுஞ் சனனமது சம்பவியாதசத்த
தாலே, சுத்தவிசும் பின்குசும மதுபோலத் தோற்றமுள
பொருட்குத் தானு, மெத்தவுற விலதாகு முனமேயே
மிளிர்வதனு லான்ம னேபோற், சத்ததுதா னிட்டமதா
மதனாற்சத் தசத்தினுக்குச் சனனமின்றே. (141)

(ப-ரை)—சத்திலதற்கு - அசத்தான காரியத்திற்கு, எவ்விதமும் ஜனனமது சம்பவியாது - எவ்வேதுவானு முற்பத்தி கூடாது, அசத்ததாலே - அசத்தாதலினால், சுத்தவிசும்பின்கு சுமமதுபோல- பரிசுத்தமான ஆகாயப் பூப்போன்று, தோற்ற

முள பொருட்குத்தானும் - முன்பே சத்தாயுள்ள பதார்த்தத்திற்கும், மெத்தவுறவிலதாகும் - மிகவும் உற்பத்தியுடைமை பொருந்தாது, முனமேயே மிளிர்வதனால் - முன்னமே விளங்கிக்கொண்டிருத்தலினால், ஆன்மனே போல் - ஆன்மாவைப்போன்று, சத்தது தானிட்ட மதாமதனால் - சத்தான பொருள் உற்பத்திக்கு முன்னமே இருக்கின்ற தென்று விரும்பப்படுவதினால், சத்த சத்தினுக்குச் சனனமின்றே - சத்தாயும் அசத்தாயுமுள்ள வற்றிற் குற்பத்தி பொருந்தாது.

(ப-ம்)—ஆகாயபுட்பம் போன்று உற்பத்திக்கு முன்பே காரியம் அசத்தாதலின் அதற்குற்பவிக்குந் தன்மை யின்றென வைசேஷிக மதகண்டனமும் ஆன்மாவைப்போன்று உற்பத்திக்கு முன்பே இருத்தலின் சத்காரியத்திற்கு உற்பத்தி பொருந்தாதெனச் சாங்கிய மதகண்டனமும் செய்யப்பட்டன வாதலின் அசத்தான காரியத்திற்கும் சத்தான காரியத்திற்கும் உற்பத்தி கூடாதென்பது பொருள். (141)

(அ-கை)—சத்திற்குற் பத்தி பொருந்தா தென்றதைக் கேட்டுச் சத்காரியவாதிகளெல்லாங் கூடி எழுந்திருக்கின்றார்களெனக் காண்பிக்கின்றார்.

கபிலரொடு மாசுரியே பஞ்சசிகா திகளாலே கழறலான, சுபமதத்தைக் கிரகணமே புரிந்திதனைச் சொல்லுவானொருவன் றானுஞ், சபதமிது வொருபொழுதுஞ் சத்ததற்குச் சனனமது சாற்றே னெந்த, நிபமிலதாந் தத்துவமும் யானுரைப்ப நினைவினொடும் வினவுவாய்நீ. (142)

(ப-ரை)—கபிலரொடும் - கபிலராலும், ஆசுரி - அசுராராலும்,பஞ்சசிகாதிகளால்-பூர்வ மீமாஞ்சகரில் ஒருவர் ஆகிய இவர்களால், கழறலான - கூறப்படுவதான, சுபமதத்தைக் கிரகணமே புரிந்து - நல்ல மதத்தை அவலம்பித்துக்கொண்டு, இதனைச் சொல்லுவானொருவன்றானும் - இதனை ஒருவன் கூறுவானாயின், (இதஞ்சத்தப் பொருள் யாதெனின்) இது சபதம் - இது உண்மை, ஒருபொழுதும் - ஓர்காலும், சத்ததற்குச் சனனமது

சாற்றேன் - சத்தான பதார்த்தத்திற்குற்பத்தியை யியம்பேன், எந்த நிபமிலதாம் தத்துவமும் - உவமையற்ற எவ்வுண்மையினை யும், யானுரைப்ப - நான் கூற, நீ நினைவினொடும் வினவுவாய் - நீ கருத்தோடுங் கேட்பாயாக.

(ப-ம்)—ஓர் சத்காரியவாதி சாங்கிய சார்வாக மீமாம்சகர் களின் மதத்தை யங்கீகரித்து நான் சத்திற்குற்பத்தியை யோர் போதுங் கூறவில்லை அவ்வுண்மையைச் சாவதானமாய் நீ கேளெ னக் கூறுவானுயினனெனப் பொருள். (142)

(அ-கை)— நான் கூறுவதைக் கேளெனச் சத்காரிய வாதி யாற் கூறப்பட்டதைக் கூறுகின்றார்.

காரண மதனி லொருசிறப் பிலதாய்க் காரிய மெது
விருந் ததுதான், பூரணச்சிறப்பைப் பொருந்தியிப்பொழுது
புகலது வேபொலிந் திலங்கு, மேருள விதுவெக் குற்றமு
மற்றே யுளதென வெனக்கிலங் கிடுமாஞ். சீரிதிற் குறைக
டெரிந்துளை யாயிற் செப்புதி மெய்ப்படத் தெளிவே:

(ப-ரை)—காரணமதனில் - தனது காரணத்தில், ஒரு சிறப் பிலதாய் - யாதொரு விசேஷமுமின்றியதாய், காரியமெது விருந் ததுதான் - எக்காரிய மிருந்ததோ அக்காரியமே, பூரணச் சிறப் பைப் பொருந்தி - முழு விசேஷத்தை யடைந்து, இப்பொழுது- இக்காலத்தில், புகலதுவே - காரணத்தில் விசேஷணமின்றி யிருந்த அதுவே, பொலிந்து இலங்கும் - காரியமென மிக விளங் கும், எருளவிது - அழகிய விப்பொருள், எக்குற்றமு மற்றேயுள தென - யாதொரு குற்றமு மற்றிருக்கின்றதென்று, எனக்கிலங் கிடுமாம் - எனக்கு விளங்குகின்றது, சீரிதிற்குறைகள் தெரிந் துளையாயில் - இங்ஙனஞ் சிறப்புடைய இவ்வருத்தத்தில் குற்ற முண்டெனத் தெரிந்திருப்பாயானல், செப்புதி மெய்ப்படத் தெளிவே - தெளியும்படி யுண்மையாய்ச் சொல்லுக.

(ப-ம்)—முன்பே காரணத்தில் நிர்விசேஷமாயிருந்தது வுற் பத்தி சமயத்தில் விசேஷத்தை யுடையதாயிற்று. என்ற மத

மெனக்குத் தோடமற்றதாக விளங்குகின்றது. இதிற்றேடமிருப்பதாகக் காணப்படின் கூறுவாயாக. இம்மதத்தில் விரோதமின்றென்பது சத்காரியவாதிகளி னபிப்பிராயமெனப் பொருள்.

(அ-கை)—ஈண்டு விரோதங் கூறுவாயாக வென்றதைக்கேட்டுச் சித்தாந்தி விகற்பித்து விரோதங் கூறுகின்றார்.

உள்ளகா ரியமெக் குணத்தொடுந் தொடர்ந்தே
யொளிர்ந்திடு மிந்தஞான் றொழியாத், தெள்ளுகாரணத்தின்
முனமந்தச் சிறப்புச் செறிந்துள தோவிலதோநீ, விள்ளு
வாய் சிறப்ப துள்ளதே யெனிலோ வியன்பிர கிருதியின்
முனமே, கொள்ளுமிஞ் ஞான்றுஞ் சிறப்பொடுங் கூடுந்
தகைமைய தசத்ததாய்க் குலவும். (144)

(ப-ரை)—உள்ள காரியம் - சத்தான காரியமானது, இந்த ஞான்று - இப்போது, எக்குணத்தொடுந் தொடர்ந்தே யொளிர்ந்திடும் - எந்த விசேஷணத்தோடுங் கூடியதாக விளங்குகின்றதோ, அந்தச் சிறப்பு - அவ்விசேஷணம், முனம் - முன்பு, ஒழியாத் தெள்ளு காரணத்தில் - நீங்காத தெளிந்த காரணத்தில், செறிந்துளதோ விலதோ - பொருந்தி யிருந்ததோ இன்றோ, நீ விள்ளுவாய் - நீ கூறுவாயாக, முனமே - முன்பே, வியன்பிர கிருதியில் - சிரேஷ்டமான காரணத்தில், சிறப்பது உள்ளதே எனில் - அவ்விசேஷண மிருப்பதே என்றால், இஞ்ஞான்றும் - இப்போதும், கொள்ளும் - கொள்ளத்தக்க, சிறப்பொடுங் கூடுந் தகைமையது - சிறப்போடுங் கூடிய தன்மையானது, அசத்ததாய்க்குலவும் - மித்தையாக விளங்கும்.

(பு-ம்)—சத்காரியம் உற்பன்ன சமயத்துடைத்தான விசேஷண குணம் அக்காரியோற்பத்திக்கு முன்னிருந்ததோ? அல்லதென்னின்றோ? காரணத்திருந்ததெனின் இப்போது காரியம் அவ்விசேஷண குணத்தை யுடையதாயதென வுன்னாற் கூறப்பட்டது யுக்தியின்றிய தென்பது பொருள். (144)

(அ-கை)—இன்றென்னு மிரண்டாம் பக்ஷத்தைத் தூஷிக்கின்றார்.

அக்குண முனமே பிரகிரு தியதி லணுகிடா தென வறை தருகிச், பொக்குறு மசத்த தேயுதித் திடுமென் பொலியுனக் கபிமத மாகு, முக்கிர வுதய மதுதனாலேயே யுண்மையை யுற்றகா ரியக்குத், தக்கநற் சனன முடைமையா லேயே தவிர்ந்திட லாதலுந் தகுமே. (145)

(ப-ரை)—அக்குணம் - அவ்விசேஷண குணமானது, முன மே பிரகிருதியதில் - முன்பே காரணத்தில், அணுகிடாது என- பொருந்தி இருக்கவில்லை என்று, அறைதருகில் - கூறுமிடத்தில், பொக்குறும் - குற்றமுடையதாக, அசத்ததே உதித்திடுமென் - அசத்தானது உற்பத்தியாகின்றது என்று, பொலியுனக்க பிமத மாகும் - விளங்குவதே உனது அபிமானமாகும், (மற்றும்) உக்கிர உதயமதுதனாலேயே - குரூரமான வுற்பத்தியான பின்னரே, உண்மையை யுற்றகாரியக்கு - சத்தியமான காரியத்திற்கும், தக்க நற்சனன முடைமையாலேயே - தகுதியினையுடைய நல்ல பிறப் பை யடைந்த வேதுவானேயே, தவிர்ந்திடலாதலுந் தகும் - அழி ந்துபோதலாதலு முண்டாகும்.

(ப-ம்)—அவ்விசேஷகுண முன்பு காரணத்திலின்றெனின் அக்கால் சத்காரிய வாதியானவுன்னால் அசத்தினுற் பத்தியங்கீ கரிக்கப்பட்டதாகும். அது வுனக்கபசித்தாந்தமாம். உற்பத்தி யனந்தரஞ் சத்தையை யங்கீகரித்த வுனக்கு உற்பத்தி மாத்திரை யானே சத்காரிய நாசமுமுண்டாமென்னுந் தூஷணந்தாமுமாகு மென்பது பொருள்.

(அ-கை)—ஆக்ஷேபம் அசத்தினுற்பத்தியும் சத்தினழிவு முண்டாகுகவதனால் யாது விரோதமெனிற் கூறுகின்றார்.

உன்னபி மதமிது வொழிக்க யாவர்க்கு
மின்னுறு வலியிலை யெனுமிவ் வேதுவாற்
பன்னுவை சேடிகர் மதத்தைப் பையவே
மன்னுறு முனதபி மதம தீதுமே. (146)

(ப-ரை)—உன்னபிமதம் இது - அசத்தினுற்பத்தியும் சத் தின் நாசமும் ஆம் என்னு முனதபிமதமான விதனை, யாவர்க்

கும் - ஒருவருக்கேனும், ஒழிக்க - நீக்குவதற்கு, இன்னுறு - நன்கமைந்த, வலியிலை சாமார்த்தியமின்று, எனுமிவ்வேதுவால் - என்ற இவ்வேதுவால், ஈது உனதபிமதம் - உன்னுடைய விந்த நிச்சயம், பையவே - மெள்ள மெள்ள, பன்னுவை சேடி கர்மதத்தை - சொல்லா நிற்கும் வைசேடிகரின் மதத்தை, மன்னுறும் - பொருந்தியது.

(ப-ம்)—அசத்தினுற்பத்தியும் சத்தின் நாசமும் உன்னாலங்கீகரிக்கப்பட்டன, அவற்றை எவ்வாற்றானு நீக்கமுடியாதென்னு மேதுவால் உனது அபிமதம் கணாதர்மத்தோடு படிப்படியாகச் சென்றடைந்ததென்பது பொருள்.

(அ-கை)—அக்காற் கணாதமதமி யாதெனில் அதனைக் கூறுகின்றார். (146)

சத்தழிந் திடுமெ சத்துச் சனித்திடுங் கணாத மார்க்கஞ்,
சுத்தபண் டிதர்க ளாலே சொல்லிடப் படுமிதென்றே,
யுத்தியின் விருத்த மாமென் றுரைத்தன ரதனை மேலோர்,
ரத்தகை விருத்த மாயென் னுலுமே யறைந்த தன்றே.

(ப-ரை)—சத்தழிந்திடும் - சத்து அழிந்துபோகும், அசத்துச் சனித்திடும் - அசத்தானது உற்பத்தியாகும், இது என்றே என்னுமிது, சுத்த பண்டிதர்களால்-சுத்தமான வித்வான்களால், கணாதமார்க்கம் - கணாதரின் மதமென, சொல்லிடப்படும்-கூறப்படுகின்றது, அதனை - அக்கணாதமதத்தை, யுத்தியின் விருத்தமாமென்று - யூகத்திற்கு விரோதமானதென்று, மேலோர் - பெரியோர்கள், உரைத்தனர் - கூறினர்கள், அத்தகை விருத்தமாய் - அங்ஙனம் யுத்திக்குப் பொருத்தமின்றியதாக, என்னுலும் - என்னாலும், அறைந்தது - பிரதி பாதிக்கப்பட்டது.

(ப-ம்)—முன்னில்லாதது சத்தின் சமவாய முடையதாக வுண்டாகின்றதென வங்கீகரிக்கப்பட் டிருத்தலின் அசத்திற்குற்பத்தியும் சத்திற்கு நாசமும் கணாத மதத்தில் யுத்திக்கு விரோதமா யுண்டாகின்றனவென்று பூர்வாசாரியர்களா லறியப்பட்டன. காரியத்திற் கனிர்வசனீயத் தன்மையைக் கூறும் என்னுலும் திருஷ்

டாந்தத்திற்கு விரோதமுடையதாக அவ்விரண்டுங்கூறப்பட்டன. சத சத்துக்களுக் குற்பத்தி பொருந்தாமையின் காரிய மனிர்வச னீய மெனவென்ஞற் கூறப்பட்டதென்பது பொருள். (147)

(அ-கை)—இவ்வேதுவானும் பொருந்தாதெனக் கூறு கின்றார்.

தேசுறு பிருதை பெற்றவுத் தமற்குத் திகழித மருளி ஞற் றெரிக்கு, மேசுறு மசத்திற் குண்மைய திலையென் றியம்பிடு மிவ்வரு மொழியாற், றேசிக ரெவர்க்குந் தேசிக ரான திருமரு மார்பனுற் கணுதன், பேசுறிம் மதமு மதி நிடே தமதாய்ப் பேசிடப் படுமெ வுணர்நீ. (148)

(ப-ரை)—தேசுருபிருதை பெற்ற வுத்தமற்கு - பதிவிரதா தருமமான பிரகாசமுடைய பிருதையினுற் பெற்ற வுத்தமனுகிய அருச்சுனனுக்கு, திகழிதம் அருளினுல் - விளங்குகின்ற தமது கிருபையினுல், தெரிக்கும் - ஞானத்தை யுண்டாக்கும், வசுறு மச[illegible]திற் குண்மையதிலை - நிந்திதமுடைய அசத்திற்குச் சென்ம மின்று, என்றியம்பிடும்-உபதேசமெனக் கூறும், இவ்வருமொழி யால் - இந்த அரிய வுபதேசவாக்கினுல், தேசிகரெவர்க்குந் தேசி கரான திருமரு மார்பனுல் - குருக்களுக்கெல்லாம் பரம குரு வான ஸ்ரீ பகவானுல், கணுதன் பேசுறு இம்மதமும் - கணுதராற் கூறப்படும் இந்த மதமும், அதிநிடேதமதாய் - மிகத் தாழ்மை யுடையதாக, பேசிடப்படுமென வுணர் நீ - பிரதி பாதிக்கப்பட்ட தென நீ வுணர்வாய்.

(ப-ம்)—“அசத்திற் குற்பத்தியின்று சத்திற் கழிவின்று” என்னும் வசனத்தால் அர்ச்சுனனை வஞ்சிப்பவரல்லாத ஸ்ரீ கண் ணனுல் அவனுக்குபதேசித்தவிதனுனேயே கணுதருடைய மத மும் நிராகரிக்கப்பட்டதெனப் பொருள்.

(அ-கை)—சத்தசத்துக்களுக்கு நிராகரிக்கப்பட்ட வுற்பத்தி யை யனுவதித்துத் திகம்பர மதத்தை நிராகரிக்கின்றார்.

சத்தொடு மசத்தி னுக்குச் சன்மஞ்சம் பவித்திடா
தென். றுத்திக ளொடுமெம் மான்முன் னுரைத்திடப் பட்ட
தாகுஞ், சத்தசத் ததுவுஞ் சன்மந் தழுவலே யிலேயே
னென்னி, னத்தகை வத்து வொன்றிவ் வகிலத்து ளிலெயெ
தாலே. (149)

(ப-ரை)—சத்தொடும் அசத்தினுக்கு - சத்திற்கும் அசத்திற்கும், சன்மஞ் சம்பவித்திடாது - உற்பத்தி பொருந்தாது, என்று, உத்திகளொடும் - யுத்திகளோடும், எம்மான்முன் உரைத்திடப் பட்டதாகும் - என்னுல் முன் கூறப்பட்டது, சத்தசத் துவும் - சதசத்தானவத்துவும், சன்மந்தழுவலேயிலே - உற்பத்தியைப் பொருந்தாது, ஏனென்னின் - ஏதனுலெனின், அத்தகைவத்து ஒன்று - அங்ஙனஞ்சதசத்தான ஓர் காயம், எதால் - எதனுல், அகிலத்துள் இலே - உலகில் இல்லே ஆதலினுல்.

(ப-ம்)—சத்திற்கு மசத்திற்கு முற்பத்தியின் றென முன்னென்னுற்றிருட்டாந்தத்தோடுங் கூறப்பட்டது. சதசத்தாத்மக வஸ்து காணப்படாமையின் அங்ஙனமாய வுற்பத்தி வெகுதூரந் தள்ளப்பட்ட தென்பது பொருள். (149)

(அ-கை)—சத்து அசத்து சதசத்து என்னுமிவற்றிற் குற்பத்தி பொருந்தாமையால் பாரிசேஷிக (கூட்டிக் கழிக்கும்) நியாயத்தால் காரியத்திற்கனிர்வசனீயத்தன்மை சித்தித்ததெனச் சித்தாந்தி கூறுகின்றூர்.

சத்தசத் ததைக்க டந்திங் குளமுத றமக்கின் றுகு
மத்தொரு நிலேமை யெத்தா லத்தினு லேம ஞதி
சித்திரக் குதய மின்ரு மென்பதிச் செகத்தெ லார்க்கு
மெத்தவேத் தியம தாகு மிளிரநிர் வசன மாமே. (150)

(ப-ரை)—இங்கு - ஈண்டு, சத்து அசத்து அதைக் கடந்து - சத்து அல்லது அசத்து என்பதினும் வேருய், உளமுதல் தமக்கு - மனமுதலிய உலகிற்கு, மத்தொரு நிலேமை - சதசத்து வடிவமாகவும், எத்தால் - எதனுல், இன்ருகும் - இன்றே, அத்தினுலே - அதனுல், மனுதி சித்திரக்குதயமின்ரும் - மனமுதலிய உலகிற்

குற்பத்தியின்று, இச்சகத்தில் யார்க்கும் - இவ்வுலகிலுள்ளார்களுக்கு, மெத்த வேத்தியமது ஆகும் - மிகவும் விளங்குகின்றது, என்பது - என்று கூறப்படுவது, மிளிர் அநிர்வசனமாம் - விளங்குகின்ற அநிர்வசனீயமாகும்.

(ப-ம்)—ஓர் பொருள் சத்தாகவும் அசத்தாகவும் இன்று ஆதலின் மன முதலிய உலகு சத்து அசத்து சதசத்து என்பவற்றைக் கடந்து வேருேர் விதத்திஞலின்ருேம். மன முதலிய உலகு உற்பத்தி நாசமுடையதாகக் கேட்கப்படுகின்றமையானும் அவை வேறு விதத்தாற் பொருந்தாமையான் அநிர்வசனீயத்தன்மையுடையதென்பது பொருள். (150)

(அ-கை)—சித்தாந்தி சதசத்வாதிகளின் துர்லபத் தன்மையினைக் கண்டுப் ரௌட (பிடி) வாதத்தால் கூறுகின்ருர்.

நும்மத மதிலி வைக்கு நுவல்வகை யெததி ஞனுஞ்
சன்மம துளதா மென்னிற் சத்தசத் தாச ரித்தே
யிம்மன மாதி கட்கிங் காயினு மெய்ம்மை யின்ருஞ்
செம்மறை யிதற்கு மித்தை செப்பிடு மதனி ஞலே. (151)

(ப-ரை)—இங்கு - ஈண்டு, இவைக்கு - இக்காரியக் குழுவிற்கு, நுவல்வகை - பிரதி பாதிக்கப்பட்ட மூவகைகளில், எதனிஞனும் - எவ்வேதுவானும், சத்தசத்தாசரித்து - சத்து அல்லது அசத்து அல்லது சதசத்து என்பவற்று ளொன்றையாசரித்து, நும்மதமதில் - உமது மதத்தில், இம்மனமாதிகட்கு - இந்த மன முதலிய வுலகிற்கு, சன்மமதுவுளதாமென்னில் - உற்பத்தியானது உண்டாகுமேயாஞல், ஆயினும் - அங்ஙனமேனும், இதற்கு - இம்மஞதி வுலகிற்கு, செம்மறை - செவ்விய வேதம், மித்தை செப்பிடுமதனிஞல் - பொய்யாந்தன்மையைக் கூறுகின்றமையின், மெய்ம்மையின்ருேம் - சத்தியமாக இருப்பதன்று.

(ப-ம்)—உம்மதத்தில் மனமுதலிய வுலகு சதசத்திஞ மன்னிய பக்ஷத்தை யாசிரயித்து எவ்வாருயினும் உண்டாகுமேல் “இவ்வெல்லா மான்வே. இவ்வெல்லாம் பிரஹ்மமே. எல்லா நிச்சயமாக பிரஹ்மமே. நாமரூப விகாரம் வாக்கையாரம்பித்தது”

என்பன முதலிய சுருதிகள் இல்வுலகிற் கசத்தியத்தன்மையைக் கூறுகின்றனவாதலின் அம்மனமுதலியவற்றின் இருப்பை அன்வயத்தானும் வியதிரேகத்தானும் (உடன்பாடு எதிர்மறைகள்) பரிகரிக்குமிடத்தில் இப்பிவெள்ளிபோன்று மித்தையாத் தன்மையினை யடைகின்றதென்பதுபொருள். (151)

(அ-கை)—மனுதிகட்க னித்தியத்தன்மை யடையுங்காலுண்டாயதைக் கூறுகின்றார்.

மறையான்மன திற்குப்பொய்த் தன்மை மலர்ந்ததாலே
யுறைமாமன தின்சரி தங்களு முண்மை யன்று
முறையேபொய் யுளச்சரி தங்கள தாத லான்முன்
னறையாங்கதன் சித்திய தாகி யமரு மாலோ. (152)

(ப-ரை)—மறையால் - வேதத்தால், மனதிற்கு - மனதினுக்கு, பொய்த்தன்மை - மித்தையாத்தன்மை, மலர்ந்ததால் - கூறுகின்றமையின், உறைமாமனதின் சரிதங்களுண்மையன்றும் - பொருந்திய பெரியமனதின் சரிதமான அவத் தாத்திரயமும் சத்தியமலவாம், முறையே - கிரமமாக, பொய்யுளச் சரிதங்களாதலால் - மித்தையாசஞ்சாரங்களாதலினுல், ஆங்கு - ஆண்டு, முன்னறை - முற்கூறப்பட்ட, சித்தியதாகியமரும் - நிச்சயித்தது நிலைபெற்றதாய்ப் பொருந்தியது.

(ப-ம்)—சுருதியில் மனதிற் கனித்தியத்தன்மை கூறியதானேயே மனதின் செய்கையாகிய அவஸ்தாத்திரயமும் மித்தையாம். இதனுன் முற்கூறப்பட்ட நிச்சயஞ் சித்தித்ததெனப் பொருள். (152)

(அ-கை)—முற்புகலப்பட்ட தியாதெனினின் அதனைக் காண்பிக்கின்றார்.

எம்மும்மையைநோக்கியிரும்பா மான்ம வின்பச்
செம்மைப்பதத் திற்குத் துரீயநன் னுமஞ் சேரும்
பொம்மும்மவை பொய்யரும் பொய்யின்குணமெதாலே
விம்மும்மதி கற்பித சர்ப்ப விசர்ப்ப ணம்போல். (153)

(ப-ரை)—எம்மும்மையை நோக்கி - எந்த அவத்தாத்திரயங்களை யபேக்ஷித்து இரும்பரமான்மவின்பச்செம்மைப் பதத்திற்கு - பெருமையுடைய ஆனந்தமென்னுஞ் செவ்விய பரமான்ம பதத்திற்கு, துரீய நன்னுமஞ்சேரும் - துரிய மென்னும் நல்ல பெயர் பொருந்தும், பொம் - பொலிவுடைய, மும்மவை - அம்மூன்றவத்தைகளும், பொய்-மித்தையாம், எதால்-ஏனெனின் அரும்பொய்யின் குணம் - அரிய பொய்யாகிய மனதின் குணமாதலினுலாம், விம்மும் மதிகற்பித சர்ப்ப விசர்ப்பணம் போல் - வாசனைமலிவால் மயங்கிய மனதாற் கற்பிக்கப்பட்ட பாம்பின் நகர்ச்சிபோன்று.

(ப-ம்)—எவ்வவத்தாத்திரயத்தைக் குறித்துப் பரமான்மாவிற்குத் துரியமென்னு நாமமுண்டாயதோ அவ்வவத்தாத்திரய மித்தையான பழுதைப் பாம்பின் நகர்ச்சிபோன்று கற்பித மனதின்குணமாதலின் மித்தையென்பது பொருள். (153)

(அ-கை)—அவஸ்தாத்திரயம் மாயாமயமாதலின் அதனுலுண்டான துரியமும் பெயர் மாத்திரமாம். ஆகலின் பிரத்தியக்பதம் நிர்விசேஷமெனக் கூறப்பட்டது. இனிப் பரமப்பிரமேயத் (முடிவாயறியத்தக்க) தை யுபசங்கரிக்கின்றுர்.

நிகமத்தொடு முத்தி பலத்தினி னின்று மென்னு
லகமுற்பொரு ளாமுல கிற்குப்பொய் யான தன்மை
புகலுற்றிட லாயது முன்னம் பொலியு மொன்ருே
மகிமைப்பர மக்கர மேசத் தசத்து மற்றே. (154)

(ப-ரை)—என்னுல் - அநிர்வசனீயவாதியான என்னுல், நிகமத்தொடும் - சுருதியினுலும், உத்திபலத்தினினின்றும் - யூகத்தின் பலத்தாலும், அகமுற் பொருளா முலகிற்கு - மனமுதலிய சர்வ வுலகிற்கும், பொய்யானதன்மை - மித்தையாத் தன்மை, முன்னம் - முன்னமே, புகலுற்றிடலாயது - கூறப்பட்டது, பொலியும் - சுயம்பிரகாசமாய், ஒன்ருேம்-ஏகமாய், மகிமைப்பரம்- மேன்மையான பரமான்மாவாய், (இருக்கின்ற) அக்கரமேசத்து -

அழிவற்ற பிரத்தியகான்மாவேயுள்ளது, மற்று - அதனயலான மனமுதலியன, அசத்து - மித்தையாம்.

(ப-ம்)—மன முதலிய சர்வ வுலகிற்கும் மித்தையாத்தன்மை முன் என்னல் சுருதி யுக்திகளின் வலுவாற் கூறப்பட்டதாதலின் மேலான அத்வைதப் பிரஹ்மமே சத்தியம் அதனினு மன்னிய காரியகாரண வடிவ துவைதப் பிரபஞ்சம் அசத்திய மென்பது பொருள். (154)

(அ-கை)—பிரஹ்மத்தினுமன்னிய சர்வமும் மாயாமயமாத லின் மித்தையெனச் சுருதி யுத்திகளாற் சித்தித்ததெனப் புகலப் பட்டது. இனியந்தச் சுருதியாதென்னும் வேட்கை நிகழ்வுழி "அந்த இந்த பிரஹ்மம் காரணமற்றது காரியமற்றது நாநாத்தன் மையற்றது ஜாதிமுதலியனவற்றது. இவ்வான்மாப் பிரஹ்மம்" என்னுமிவை முதலிய சுருதிகளென இரண்டு செய்யுட்களாற் கூறுகின்றார்.

எதுவதி றந்த பாகிய மாகி யெழில னந்தரமதா மெது தா, னேதது தனக்கிங் கபரமொன் றேனு முண்டென விலையென மிகவும், வேதமெய்ம் மொழி கள்விளம்பிடு மெ தனு லதனினுன் மெய்ப்பொரு ளான, நாதநஞ் சிவத்தை யொழிந்திவை யெவையும் பொய்யென நன்கிலங்கிய வே. (155)

(ப-ரை)—எதுவதிறந்து - காரணமின்றியதாயும், அபாகிய மாகி - ஜாதியாதி யின்றியதாயும், எழில் அனந்தரமதாம் - அழ கிய நாநாத் தன்மையின்றியதாயும், எதுதான் - எப்பரமான்மா வுளதோ, ஓது அது தனக்கு-பிரதி பாதிக்கப்பட்ட அப் பரமான் மாவினின்றும், இங்கு - ஈண்டு, அபரம் - காரியம், ஒன்றேனும்- அற்பமேனும், உண்டெனவிலையென - இருக்கின்றதில்லையெ ன்று, மிகவும், வேதமெய்ம் மொழிகள் - சத்தியமானவனேக சுரு திவசனங்கள், விளம்பிடுமெதனுல் - எதனுற் கூறுகின்றனவோ, அதனினுல் - அங்ஙனங் கூறுகின்றமையின், மெய்ப்பொருளான நாத நம் சிவத்தை ஒழிந்து - சத்தியவத்துவான நமது இறைவ

னென்னுஞ் சிவபெருமானினன்னியமாய், இவையெவையும்-காணப்படுவனவனைத்தும், பொய்யென நன்கிலங்கியவே - மித்தை என்று நன்றாக விளங்கினவே.

(ப-ம்)—முன்னிருப்பதான காரணமின்றியதும் வெளியினதான ஜாதி முதலியனவின்றியதும் இடையினதான நாநாத்தன்மையின்றியதுமான யாதொரு நிர்விசேஷ பரமபதமோ வதனினு மன்னிய மற்பமுமின்று என விங்ஙனம் வேதமாக்ஞாபித்தமையின் அக்ஷரஞான கன பரமான்மாவினும் அன்னியமசத்தியமென னன்றறியலாயது எனப் பொருள். (155)

பரமதன் னதனின் வேறும் பாகியாந் தரங்கணீக்கி,
யருமறை யான்மா விற்கிங் கவபோத கனநற் பான்மை
யொருபுனற் பிறந்தவுப்பவ் வுதகமா முவமையாலே
யுரைபுரிந் திடும தாலே யொழிந்தன வசத்தென் றேரே.

(ப-ரை)—பரம தன்னதனின் - ஆன்மாவினும், வேறும் - அன்னிய வுலகை, பாகியாந்தரங்கள் நீக்கி - வெளியிலும் உள்ளிலும் இன்றெனத் திரஸ்கரித்து, அருமறை-அரிய சுருதியானது, ஆன்மாவிற்கு இங்கு - ஈண்டு ஆன்மாவிற்கு, அவபோதகன நற்பான்மை - பிரக்ஞான கன வடிவத் தன்மையினை, ஒரு புனல் பிறந்த வுப்பு - ஒன்றான நீரிற்றோன்றிய லவணம், அவ்வுதகமா முவமையாலே - அந்நீராகவே யாகின்ற திருட்டாந்தத்தினால், உரைபுரிந்திடுமதாலே - பிரதி பாதித்தமையால், ஒழிந்தன-ஆன்மாவினு மனனியவுலகு, அசத்தென்றேரே - மித்தை என அறிவாயாக.

(ப-ம்)—இங்ஙனம் ஆன்மாவிற்கு அன்னிய சர்வத்தையும் உள்ளிலும் வெளியிலு நீக்கி பிரக்ஞான கனத்தன்மையை எங்ஙன நீர் காரியவுப்பு நீர் மாத்திரமாமோ அங்ஙனம் பரமான்ம விவர்த்த விவ்வுலகு பரமான்மாவேயென "காரணமற்றது காரிய மற்றது அது எப்படி உப்பு யோகம்" இது முதலிய சுருதிகூறிற்றென்பது பொருள். (156)

(அ-கை)—இங்ஙன நிர்விசேஷமாகப் பரிசோதித்த துவம் பதார்த்தத்திற்குப் பரிசோதித்த தத்பதார்த்தத்தோடு ஐக்கியத்தை யீண்டு மகா வாக்கியார்த்தமெனக் கூறுகின்றார்.

விரைவிற்றன் னதனின் வேறும் விடயங்கள் விடுத்தலாலே, திரைபுனற் பிறந்த வுப்புத் தெள்ளறற் சமமதாய்ச் சொற், பரவிஞ்ஞா னகன மான பரமநற் பதத்தை நீதா, னுரையது நான னேனென் றுணருதி யுளத்தெப் போதும்.

(ப-ரை)—விரைவில் - சீக்கிரமாக, தன்னதனின் - தன்னினும், வேறும் - அயலான, விடயங்கள் விடுத்தலாலே - விடயங்களை நீக்குதலினால், திரைபுனல் பிறந்த வுப்பு - அலையையுடைய நீரில் பிறந்த வுப்பு, தெள்ளறல் சமமதாய்ச் சொல் - தெளிந்த நீர் வடிவேமேயென அந்நீரிற்குச் சமமாகப் பிரதி பாதிக்கப்படும், பரவிஞ்ஞான கனமான - மேலான பிரக்ஞான கனமான, பரமநற்பதத்தை - மேலான நல்ல பரமான்வை, நீதான் - துவம்பத லக்ஷிய சான்றான நீ, உரையதுநான் ஆனேன் என்று - சொல்லப்படும் அப்பரமான்மாவாகவே நானிருக்கின்றேனென்று, உணருதி - உணருவாயாக எப்போதும், உளத்து - அந்தக் கரணத்தின்கண்.

(ப-ம்)—பரமான்ம வன்னிய பொருளை நீக்குதலால் காரிய காரண சம்பந்தமின்றிய பிரஞ்ஞான கனமான பரமான்மாவை அது நானாக விருக்கின்றேனென்று எப்பொழுதும் நீஅறிவாயாக தள்ளத்தக்க கொள்ளத்தக்க புத்தியின்றியவனாய்ப் பரமானந்தமாக விருப்பாயென்பது பொருள். (157)

(அ-கை)—எளிதிலறிதற் பொருட்டுக் கூறிப் போந்த அகண்ட வாக்கியார்த்தத்தை விரிக்கின்றார்.

அணுவுமன் றதனின் வேறு மருங்குண மன்றதே போற், றுணிகுறை வன்று நீட்சித் தொடர்ச்சியுமன்றதாகிப், புணருமெச் சிறப்பும் போக்கிப் பொலிதரு பரமமான, நுணியவக் கரத்தை நின்றன் னுருவமாய் நோக்கி வாழ்வாய். (158)

(ப-ரை)—அணுவுமன்று - அணுவடிவன்று, அதனின் வேரு மருங் குணமன்று - அவ்வணுவிற்கு வேருன மகத்து வடிவன்று, அதேபோல் - அங்ஙனமே, துணி குறைவன்று - துணித்த குறில் வடிவன்று, நீட்சித் தொடர்ச்சியு மன்றதாகி - நெடிலாகத் தொடர்ந்த வடிவமு மின்றியதாய், புணரும் எச்சிறப்பும் போக்கி - பொருந்தும் யாதொரு விசேஷணமுமற்று, பொலிதரும் - விளங்குகின்ற, பரமமான - மேலான, நுணி யவக்கரத்தை - சூக்ஷ்மமான அழிவற்ற பரமான்மாவை, நின்றன் உருவமாய் நோக்கி வாழ்வாய் - உனது வடிவாகக் கண்டு சுகித்திருப்பாயாக வென்பது.

(ப-ம்)—தூலசரீரத்தின் றருமமான குறில் நெடிலும் சூக்குமசரீரத்தின் றருமமான அணுத்தன்மையும் ஆகாயத்தின் றருமமான மகத்துவத் தன்மையும் ஆகிய சர்வ விசேஷண தருமமுமின்றிய மேலான பிரஹ்மத்தை உனது சொரூபமாக வாசரிப்பாயாகவென்பது பொருள். (158)

(அ-கை)—இச் செய்யுளால், தத்பதார்த்த முக்கியத்தால் அகண்ட வாக்கியார்த்தத்தை முன் விரித்துத் துவம்பதார்த்தப் பிரதானமாக, விரித்துரைக்கின்ருர்.

புத்தியில் லுலக ராலே பொலிகரித் தருமமாயே
மெத்தவு மருவ லான மிளிருயிர்ப் புடல தோடும்
புத்தியின் குணம தான வாறையும் போக்கிப் பையப்
புத்தமென் கரியே நானென் றுணருதி நீயெப்போதும்.

(ப-ரை)—புத்தியில் உலகாரலே - அவிவேகிகளால், பொலிகரித் தருமமாயே - விளங்குகின்ற சாக்ஷியின் றருமமாக, மெத்தவும் - மிகவும், மருவலான - பொருந்துவதான, மிளிர் - விளங்குகின்ற, உயிர்ப்பு - பிராணன், உடலதோடும் - சரீரத்தோடும், புத்தியின் - புத்தி ஆகியஇவற்றின், குணமதான ஆறையும்-ஷட் குணங்களையும், போக்கி - விவேகத்தா லின்றியதாகச் செய்து, பைய - மெள்ள, நீ எப்போதும் - நீ சர்வகாலமும், புத்தம் என்

கரியேநா னென்றுணருதி - அதிசயமாகிய சாக்ஷியே நானென வுணர்வாய்.

(ப-ம்)— அவிவேக ஜனங்களால் ஆன்மாவின் றருமங்களாக வுணரப்பட்ட உண்ணல் குடித்தல் சோகம் மோகம் சரை மரணம் என்பனவான அனுன்ம குணங்க ளாறையுந் தள்ளிக் கிரமமாக எஞ்சிய சாக்ஷி மாத்திரமான சோதி வடிவத்தைப் பிரத்தியகான்மாவென்று அறிவாயாக வெனப்பொருள். (159)

(அ-கை)—இங்ஙன மகண்ட வாக்கியார்த்தங் காட்டப்பட்டது. இனிப் பிராரப்த கன்ம போகம்வரையில் ஜீவன் முத்தி வடிவினதும் தக்தபட நியாயத்தாற் பாதிதானு விருத்தியாற் றுவைதக் காக்ஷித் தோற்றமானதும் பரமானந்த வேகரூபத் திருப்தியானதுமான வாக்கியார்த்தத்தாலுற்பன்ன ஞானமான பலம் திடமாய் அடையப்பட்ட தாகின்றதெனத் திருஷ்டாந்தத்தோடு இரண்டு செய்யுட்களாற் கூறுகின்றார்.

விடுவதன் முன்னந் தன்ன துருவமாய் விடதரந்தா
னுடலுறை கஞ்சு கத்தை யுணர்ந்தது தனது புற்றில்
விடதரங் கஞ்சு கத்தை விடுத்தபின் னருமே நோக்கி
மடுதன துருவ மாக மனத்தினி னினைத்திடாதே. (160)

(ப-ரை)—விடதரந்தான் - சர்ப்பமானது, உடலுறைகஞ்சுகத்தை-தனதுடம்பிலுள்ள சட்டையை, தனது புற்றில்-தானுள்ள புற்றின்கண், விடுவதன் முன்னம் - நீக்கிவிடுவதற்கு முன்பு, தன்ன துருவமாய் - தனது வடிவாக, உணர்ந்தது - அறிந்திருந்தது, விடதாங் கஞ்சுகத்தை விடுத்தபின்னர் - சர்ப்பம் தனது புற்றில் சட்டையைக் கழற்றிவிட்ட பின்னர், நோக்கி - பார்த்து, மடுதன துருவமாக - மடிப்பாக்கிய தனது வடிவாக, மனத்தினில் நினைத்திடாது - மனதின்கண் நினைக்கமாட்டாது. (160)

பனகம துறழ நீயும் பழியுட லிதனை நாளு
முன துரு வெனவு ணர்ந்தா யுள்ளுணர் விலாத தாலே
யுனுமறி வுருவே யுன்ன துருவம தாயுணர்ந்தே
வினையர வியைய நீயும் விடுதியிவ் வுடலைத் தானே. (161)

(ப-ரை)—நீயும் உள்ளுணர்வி லாததாலே - விவேக வறிவு வின்மையால், பனகமதுறழ - சர்ப்பம்போன்று, பழியுடலிதனை - நிந்திக்கத்தக்க விச்சரீரத்தை, நாளும் - தினந்தோறும், உனதுரு வென வுணர்ந்தாய் - உன்னுடைய வடிவமென்று அறிந்தாய், (ஆகவின்) நீயும், வினைஅர வுஇயைய - தன்புறத்தும் பாம்பு போன்று, உனும் - கருதும், அறிவுருவே - அறிவு வடிவே, உன்னது உருவமதாய் உணர்ந்து - உனது சொரூபமாக அறிந்து, இவ்வுடலை - இச்சரீரத்தினை, விடுதி - ஆன்மா வென்பதை யறத் தள்ளுதி.

(ப-ம்)—"பாம்புச் சட்டைபுற்றில் கெட்டதாகத் தள்ளுண்டு கிடக்கின்றது இங்ஙனமே இச்சரீரந் தூங்குகின்றது." என்னுஞ் ஜீவன் முத்தி சுருதியினால் எங்ஙனஞ் சர்ப்பம் விடுவதற்கு முன்றாகத் தனது சட்டையை யறிந்தது. பின் காலாந்தரத்தில் கஞ்சுகத்தைத் தனது வாசஸ்தானதுவாரத்தில் விட்டுப் பின் தானாக வறிவதின்றே; அங்ஙனமே யுன்னாலும் அன்னமயாதி சட்டை ஆன்மா னன்ம விவேகமின்மையா லான்மாவாகப் பார்க்கப்பட்டது. ஆகலின் நீயும் ஞானவடிவ வஸ்துவை யான்மாவாக வறிந்து பாம்பைப் போன்று இத்தேகாதி யபிமானத்தை விடுவாயாகவெனப் பொருள். (161)

(அ-கை)—ஆன்மாவி னஞ்ஞானத்தா லாய சரீராபிமானம் ஆன்ம ஞானத்தால் நீங்குமெனப்பட்டது அக்காலான்மாவில் ஞானஞ்ஞான சம்பந்த முண்டென வாசங்கித்து இன்றெனக் கூறுகின்றார்.

இரவியிஃ தொளியி னோடு நிரந்தர மியைத லாலே
யிரவிக்கிங் கிரவி னோடும் பகலதுண் டாத லின்றே
திரவுணர் வதனி னோடுந் தெரியாமைக் குணங்க டாமு
மிரவியை நிகர கித்த வறிவுனக் கிலையென் றேரே. (162)

(ப-ரை)—இரவி யிஃதொளியினோடும் - இச்சூரியன் பிரகாசத்தோடும், நிரந்தர மியைதலாலே - எப்போதுங் கூடி யிருத்தலினால், இங்கு - ஈண்டு, இரவிக்கு - சூரியனுக்கு, இரவினோ

டும் - இரவும், பகலதுண்டாதல் இன்று - பகலும் உண்டாவ தின்று, (அங்ஙனம்) திரவுணர் வதனினேடும் - திரமான ஞான மும்; தெரியாமைக் குணங்கள் தாமும் - தெரியாமையான அஞ் ஞானமுமாகிய குணங்கள், இரவியைநிகா - சூரியனைப்போன்று, நித்த அறிவுனக்கு - நித்திய ஞானவடிவ ஆன்மாவான வுனக்கு, இலேயென்றேரே - இல்லையென்று தெரிந்து கொள்ளுவாய்.

(ப-ம்)—சூரிய னெப்போதும் பிரபையோடுங் கூடியவனுகை யின் அவனுக்கு இரவு பகலின் ருயதுபோன்று சதா சாக்ஷியான வுனக்கும் ஞானுஞ்ஞான குணங்களின் சம்பந்தமே யின்றென் பது பொருள். (162)

(அ-கை)—ஆன்மாவில் ஞானுஞ்ஞானங்களின்மையின் பந்த மோக்ஷங்களு மின்றெனக் கூறுகின்றூர்.

பரிசுத்த விபுத்த மாகிப் பரமுத்த வறிவ தான,
வொருநித்த வெனக்கு ஞானுஞ் ஞானம தொழித்ததாலே,
யிருபத்த மோக்கமென்னுங் குணங்கள திலே யெப்போதுந்
தரிசித்த மதனி னென்றே தாற்பரியந்த னுலே. (163)

(ப-ரை)—பரிசுத்த - மிகச் சுத்தமாயும், விபுத்தமாகி-நல்ல புத்தமாயும், பரமுத்த வறிவதான - பரமாயும் முத்தமாயும் அறி வாயும் இருக்கின்ற, ஒரு நித்த வெனக்கு - ஒப்பற்ற நித்தியனுன வென்றனக்கு, ஞானுஞ்ஞானம தொழித்தலாலே - ஞானுஞ் ஞான குணங்களின் ருதலினுலே, இருபத்த மோக்கமென்னும் - பந்தமோக்ஷங்களென்னுமிரண்டு, குணங்கள து-குணங்களானவை, எப்போதும் - சர்வகாலமும், இலே என்றே - இல்லை என்று, தரி சித்தம்-அவ்விரண்டு குணங்களேயும் கண்டனம், அதனின் அவ் வேதுவாலும், தாற்பரியந்தனுல் - தாற்பரியத்தாலும், (எனக் கிலே யென வோர்வாயென வபிப்பிராயம்).

(ப-ம்)—எஞ்ஞான்றும் சுத்தபுத்த முக்த வியல்பான சின் மாத்திர ஜோதிவடிவ வெனக்கு ஞானுஞ் ஞானங்களின்மையால் எப்போதும் பந்தமோக்ஷ குணங்களு மின்றெனவறி யெனப் பொருள். (163)

(அ-கை)—ஆன்மாவிற் பந்தமோக்ஷங்களின்றேனும் தன்னு லேனும் பிறராலேனுஞ் செய்யப்படுவதான கொள்ளுதற் றள்ளு தற்களுக்கு ஆன்மா விஷயமாகின்றதென வாசங்கித்து அங்ஙன மின்றெனக் கூறுகின்றூர்.

அறிவுரு வெனக் கென்னுலே யன்னிய னுலே நீக்கல்
குறியோடுங் கோடல் கூடா குவலயத் தெவர்க்குந் தம்பாற்
செறிதரல் கரும மான தின்றுசெப்பெனே ய லாதே
நெறிபுரி யனியன் வேறு நிகிலத்தி லிலைய தாலே. (164)

(ப-ரை)—அறிவுருவெனக்கு - ஞானவடிவ வென்றனக்கு, என்னுலே - என்னுலேனும், அன்னியனுலே - மற்றொருவனு லேனும், நீக்கல் - தள்ளுதலும், குறியொடுங் கோடல் - இலக் கணத்தோடும் கொள்ளுதலும், கூடா-உண்டாகாது, குவலயத்து- உலகில், எவர்க்கும் - எவர்களுக்கேனும், தம்பால் - தன்னிடத் தில், செறிதரல் - பொருந்திய, கருமமானதின்று - தனது செய் கைக்கு விஷயமான செயப்படு பொருளென்னுங் கருமமாக ஆவ தின்று, (மற்றும்) செப்புஎனையலாது - சொல்லாநின்ற என்னைத் தவிர, வேறு - மற்றொருவன். நெறிபுரியனியன் - கர்ம நெறியை யியற்றுபவனான வேறொருவன், நிகிலத்திலிலை-இவ்வுலகிலில்லை, அதால் - அவ்வேதுவால்.

(ப-ம்)—ஞானவடிவாய் நிரவயவமாய் இருக்கின்ற எனக்கு என்னுல் கொள்ளுதலும் தள்ளுதலும் இன்று. ஏனெனின் ஒன் றில் கருத்துரு கருமபாவ விரோதமாதலின் அதாவது செய்வது செய்யப்படுவதாக ஒன்றின் கண் பொருந்தாமையாலாம். அந்நிய ராலுமின்று ஏனெனின் இவ்வுலகில் என்னினுமன்னிய னொரு வனுமின் றுதலினுலாம். உண்டென்பதிற் றேடமற்ற பிரமாண மின்றென்பது அபிப்பிராயம். (164)

(அ-கை)—ஆக்ஷேபம் பிரஹ்மாதி ஸ்தாவராந்தமான சரீரங் களில் ஆன்மாபேத முடையதாதலின் என்னினு மன்னியனின் றென்ப தெங்ஙனங் கூடுமெனிற் கூறுகின்றூர்.

சரவசர தேகமதிச் சரிதங்க டமதுடைய
வொருகரியிங் கெப்பொழுது முயர்நானே யாவனெனுந்
திரமதனு லென்னைவிடத் திகழனிய னிலையென்றே
தெரிகுதிசு மேதையாய் திடமாக விதைநீயே. (165)

(ப-ரை)—சர+துடைய - சராசர தேகங்களின் புத்தியின் சஞ்சாரங்களுக்கு, இங்கு - ஈண்டு, உயர் நானே - சிரேஷ்டமான நானொருவனே, ஒருகரி - ஒப்பற்ற சான்ருக, எப்பொழுதும் ஆவனெனும் - எஞ்ஞான்றும் இருக்கின்றேனெனும், திரமதனுல்-நிச்சயத்தன்மையால், என்னைவிட - என்னினும், நிகழனியனிலை யென்றே - விளங்குமன்னிய னொருவனுமின்றென, சுமேதையாய்-நல்லபுத்தி யுள்ளோனே!, இதை - இந்நிச்சயத்தை நீ, திடமாக - சந்தேகமின்றி, தெரிகுதி - அறிவாயாக.

(ப-ம்)—சராசர தேகங்களின் புத்திகளின் வியாபார மனைத்தையும் எஞ்ஞான்றுஞ் சான்ருக நானொருவனே காண்போன் என்னினன்ய னொருவனுமின்று. என என்னுலுபதேசிக்கப்பட்டதை நல்ல புத்தியுடையோனே! மிகத் திடமாயறிவாயாக வெனப் பொருள். (165)

(அ-கை)—சராசர தேகாதிகள் அங்ஙனம் வாஸ்தவமாகவங்கீகரிக்கப்படுகையில் அவற்ருலியற்றப்பட்ட யாதானுமோர் விசேடமான்மாவிற் குண்டாகுகவென வாசங்கித்துக் கூறுகின்ருர்.

விமல விண்டலந் தனிற்சல தாதியால் விரித்த
குமல முண்டிலை யென்னினும் பேதங்கூ டிலைபோ
லமைப ரிசுத்த மாகியெங் கணுநிறை யறிவா
முமிற் றுவிதபே தமதுஞற் றுறபிரி விலையே. (166)

(ப-ரை)—விமலவிண்டலந்தனில் - பரிசுத்தமான ஆகாயத்தில், ஜலதாதியால் விரித்த - மேகத்தினுற் பரப்பப்பட்ட, குமலம் உண்டுஇலை யென்னினும் - கெட்ட மாசானது இருக்கின்றதேனு மின்றேனும், பேதங் கூடிலைபோல் - அவ்வாகாயம் பேதமுடையதாகாததேபோல், அமைபரிசுத்தமாகி - பொருந்திய

பரிசுத்தமாய், எங்கணு நிறையறிவாம் - சர்வ வியாபகஞான சொரூபமான, உமில் - உன்னிடத்தில், துவிதபேதமது-இருமை யாகிய பேதமானது, உறுற்றும் - செய்கின்ற, பிரிவு இலே - விபாகமானது இன்று.

(ப-ம்)—பரிசுத்த வாகாயத்தில் மேகமிருப்பினும் மின்றே னும் நிரவயவத்தன்மையால் பேதமுடையதாகாததே போல் தேசகால வஸ்து பரிச்சேதமின்றிய வுன்னிடத்தில் வேற்றுமை யாலாக்கப்பட்ட பேதமின்றென்பது பொருள். (166)

(அ-கை)—இருமையின் பேதத்தாற் செய்யப்பட்ட யாதொரு விசேஷமு மொருபோது மான்மாவிற்கின்றெனக் கூறுபவ ரான வும்மால் இரண்டினிருப்பு அங்கீகரிக்கப்பட்டதெனவா சங்கித்துக் கூறுகின்றார்.

முன்னம் புகன்றேந் துவிதமது முற்று மூன்று கால முமின், றென்ன விவகா ரந்தனேயே யினிது நோக்கி யிதை யிசைத்தே, மன்ன வுளதாம் பொருண்மருவா மாய மான பொருளுடனே' பன்னு கழுதின் றேரதனிற் பரந்த நதிபற் றிடலிலதே. (167)

(ப-ரை)—துவிதமதுமுற்றும் - சர்வதுவிதமும், மூன்று காலமும் - காலத்திரயத்திலும், இன்றென்ன - இல்லவே யில்லே என்று, முன்னம்புகன்றேம் - முன் கூறினேம், விவகாரந்தனே யே யினிது நோக்கி - விவகாரத்தன்மையினே நன்றாக வங்கீகரித்து, இதை இசைத்தேம் - இருமையாற் செய்யப்பட்ட பேத மின்றென்னு மிதனேக் கூறினேம், (எங்ஙனமெனின்) பன்னு - பிரதிபாதியாநின்ற, கழுதின்தேர் அதனில் - கானற்சலத்தோடு, பரந்தநதி - விரிந்து நிரம்பிய நதியானது, பற்றிடல் இலது - சம்பந்தமுடையதாகாது, மன்ன - நிலேயுடைய) உளதாம் பொருள்- சத்தான ஆன்மாவானது, மாயமான பொருளுடனே - மித்தை யான இருமைத் தன்மை முதலிய பொருளோடு, மருவா - சம்பந்தமுடையதாக வோர்போது மாகாது.

(ப-ம்)—முன்னனேக யுத்திகளாற்றுவைத வுலகசத்திய மென யாம் புகன்றே மாதலின் ஈண்டிங்ஙனங் கூறியது விவகார சத்தியத் தன்மையை யங்கீகரித்ததாம். எங்ஙனம் அகாத நீருடை நதி கானற்சலத்தோடு பற்றுக்கொள்ளாது கிடக்கக் காண்பே மோ அங்ஙனம் மித்தையான வியாவகாரிகதுவைதத்தோடு சத்திய மான பாரமார்த்திகவான்மாவும் பற்றாததுதெற்றென விளங்கத் தெளிந்திருக்கின்றதெனப் பொருள். (167)

(அ·கை)—இங்ஙன மிப்பிரகாணத்தில் சமன்வயம் அவிரோதம் சாதனம் பலம் என்னு நான்கத்தியாயங்களின்பொருள் பிரதி பாதிக்கப்பட்டது. இனி அவ்வத்தியாயங்களின் பொருளைச் சுருக் கிப் பிரகாணத்தின் முடிவுவரையான செய்யுட்களாற் கூறுகின் றார். ஆண்டாதியில் தத்துவமசியாதி வாக்கியங்களுக்கு அத்வைதப் பிரஹ்மத்தில் சமன்வயத்தன்மை யுடைமையைப் பிரதிபாதிக் கத்துவம் பதார்த்தத்தைப் பரிசோதிக்கின்றார்.

பலவிதம் பகர்ந்த தாலே பயனதென் னுளது கேணீ
நலவிதிற் சுருக்கநிற்கு நவிலுவ லுனதிடத்தே
யிலகிடு நனவ தாதி மும்மைய தெந்த ஞான்று
மலை செய்கற் பிதம தென்னு வசத்திய மதுவே யாமால்.

(ப-ரை)—பலவிதம் பகர்ந்ததாலே பயன தென்னுளது · அநேக விதமாகக் கூறுவதனால் யாது பலன் இருக்கின்றது, நல விதில் - நன்மையான இதில், சுருக்கம் - சங்கிரகமாக, நிற்குநவி லுவல் - உனக்குக் கூறுவேன், நீ கேள் - நீ கேட்பாயாக, உன திடத்தே - உன்னிடத்தில், இலகிடும் - விளங்குகின்ற, நனவ தாதி மும்மையது - சாக்கிர முதலிய மூன்றவத்தைகளும்; எந்த ஞான்றும் - எக்காலத்திலும், அலை செய் கற்பிதமதென்னு - சஞ்சலப்படுத்தும் கற்பிதமென்னும், அசத்தியமதுவேயாம் - வெறும் பொய்யாம்.

(ப-ம்)—மிகப் பிரயாசத்தாற் பிரதிபாதிப்பதினாற் பயன் யாது? சொல்லிய பொருளின் சுருக்கத்தைச் சொல்கின்றேம். பரிசுத்த சான்றுமான்மாவான வுன்னிற் சாக்கிராதி மூன்றும் மாயாமனதின் றருமமாதலின் மித்தை எனப் பொருள். (168)

மனமென மலர்ந்த தூஉமின் மகிழுன திடத்தி லேயே
புயுனேங்கற் பிதம தென்னுப் புகல்மறை யூகத் தாலே
துனியசத் தியம தென்றே தொகுத்தன மதனி னுனே
யுனேயொழிந் தனியம் யாது முளதிலே யுறுதி தானே.

(ப-ரை)—மனமென மலர்ந்தது உம் - மனமெனக் கூறப் பட்டதும், இன்மகிழ் உனதிடத்திலேயே - இனிய வானந்த வடிவ வுன்னிடத்தில், புனேயுங் கற்பிதமதென்னு - கற்பனேயா லுண்டாயதென, புகழ்மறை - துதிக்கத்தக்க வேதத்தாலும், யூகத்தால் - யுத்தியினுலும், துனி-வெறுப்பைத்தரும், அசத்திய மதென்றே - மித்தையானதென்று, தொகுத்தனம் - கூறினேம், அதனினுன் - அங்ஙன மசத்தியமெனக் கூறினமையின், உனே யொழிந்து - உன்றனேத்தவிர, அனியம் யாது - யாது அன்னிய மோ, (அது) உளது இலே - இருப்பதான சத்தன்று, உறுதிதான்- நிச்சயமே.

(ப-ம்)—சர்வகற்பனு காரணம் மனமெனக்கூறப்பட்டதாயி னும் அஃதுன்னிற் கற்பிதமாகலின் ஆகமத்தாலும் திருஷ்டாந் தத்தாலும் அசத்தியமெனக் கூறப்பட்டது. ஆகலின் உன்னிலன் னியமெல்லா மசத்தியமென்பது பொருள். (169)

(அ-கை)—இங்ஙனந் துவம் பதார்த்தம் பரிசோதித்து இனித் தத்பதார்த்தம் பரிசோதிக்கின்ருர்.

பாகியாந் தரம தற்ற தெதுபகர் துவித மற்ற
தேகமா ரசம துற்ற தெதுசிறப் பெவையு மற்ற
தேகுகா ரியம தோடு காரண மற்ற தேது
வாகறி வுருவ னந்த சத்திய வதுநீ யாவாய். (170)

(ப-ரை)—எது - எப்பரமான்மா, பாகியாந்தரமதற்றது - ஜாதி யாதியற்றதும் அவதியற்றதும், பகர்துவிதமற்றது - பாதிக்கப்படும் இரண்டாவதின்றியதும், ஏக மாரசமதுற்றது - ஒன்ருன பெரிய ஆனந்த வடிவினதும், எது - எப்பரமான்மா, சிறப்பெவையுமற்றது - சர்வ விசேஷண முமின்றியது, எது எகு

காரியமதோடு காரண மற்றது - அழியுங் காரியமற்றதும் காரண மற்றதும், (ஆன) ஆகு அறிவுருவு அனந்த சத்தியம் - பொருந்திய ஞான வடிவமுடிவின்றிய சத்தியமானது எப்பரமான்மாவோ, நீ அது ஆவாய் - நீ எப்போது மதுவாக இருக்கின்றாய்.

(ப-ம்)—ஜாதி யாதி யின்றியதும் இடையின்றியதும் கேவல சிதானந்த ரூபமும் காரிய காரண சம்பந்த மின்றியதும் சசாதீய விசாதீய சுவகத பேத மின்றியதும் கருத்துருத்துவ போக்திருத் துவ விசேஷமின்றியதும் பிரஞ்ஞான கனமும் தேச காலவஸ்து பரிச்சேத மின்றியதும் சத்தியமுமான யாதொரு பரமான்மபத மிருக்கின்றதோ அதுவே நீயா யிருக்கின்றாயாகலின் பிரத்தியக் கான்மாவிற்குப் பிரஹ்மத் தன்மையினை நன்றாக வறிவாயாக வென்பது பொருள். (170)

(அ-கை)—இங்ஙன மகண்ட வாக்கியார்த்த முபதேசித்துக் குருயாது செய்தாரென்னு மவாவிற்குக் கூறுகின்றார்.

இம்மாத் திரமே மறைமுடிக ளவற்றி லெழிலாம் பர மபத, மெம்மா லறியப் பட்டுளதிங் கிதனி லதிக மிலதெ னவே, தம்மா லருளப் பட்டதைவிட் டனிய மதியைத் தவிர்த்திடுவான், பெம்மான் பிப்ப லாதனெனக் குரவர் பெருமான் பேசினனே. (171)

(ப-ரை)—மறை முடிகளவற்றில் - உப நிடதங்களில், எழி லாம் பரமபதம்-அழகிய பரமபதமானது, எம்மால் - என்றனால், இம்மாத்திரமே - இவ்வளவே, அறியப்பட்டுளது - அறியப்பட்டி ருக்கின்றது, இங்கு - ஈண்டு, இதனிலதிகம் இலதெனவே - உபதேசித்த விதனினும் மதிகமாக எஞ்சியதில தென்று, தம்மா லருளப்பட்டதை விட்டு - தன்னாலுபதேசிக்கப் பட்டதினும், அனிய மதியைத் தவிர்த்திடுவான் - அன்னியமாய் எஞ்சி யசில பொருளிருக்கும் என்னும் புத்தியை நீக்கும் பொருட்டு, பெம் மான் பிப்பலாதனென - பெருமானான பிப்பலாதரிஷி போன்று, குரவர் பெருமான் பேசினனே - குரவர்களுக்கெல்லாங் குருவான ஸ்ரீ குருமூர்த்தி யுபதேசித்தார்.

(ப-ம்)—பிப் பலாதரிஷி பெருமான் எங்ஙனம் சுகேசர் முத லிய சீடர்களுக் குபதேசித்த பின் இவ்வளவே பரமபத மெனக் கூறினரோ அங்ஙனமே ஈண்டுங் குருவாலுபதேசிக்கப்பட்ட தினு மதிகமா யுண்டென்றெண்ணும் புத்தியை நீக்கக் குருவும் சீடனைக் குறித்து என்னலுப நிடதங்களி லறியப்பட்ட பரமபத மிவ்வளவே யெனக் கூறப்பட்டது என்பது பொருள். (171)

(அ-கை)—இங்ஙனம் ஸ்ரீ குருமூர்த்திகளாலு பதேசிக்கப் பட்ட சீடன் யாது இயற்றின னென்னுமவா நிகழ்வுழி சீடன் வாக்கியமாக ஜீவன் முத்தியான ஞான பலத்தைப் புலப்படுத்து கின்றார்.

சீடனுங் குரவர் போற்றிச் செறியின்ப துன்ப மான
வாடலை பிறப்பி றப்பா மறலுறிவ் வரியை ஞான
வோடம தாற்க டத்தி யொழித்தனை பகவ னேநீ
மூடனை யெனவே நின்று மொழிந்தன னன்பி னோடே.

(ப-ரை)—சீடனும் - சிஷ்யனும், குரவற் போற்றி - ஆசார் யனை நமஸ்கரித்து, செறி இன்பதுன்பமான ஆடு அலை - நெருங் கிய இன்பதுன்ப மென்னும் ஆடுகின்ற அலைகளையுடையதும், பிறப்பிறப்பாம் அறல் உறு - பிறத்த லிறத்தல்களான நீருடை யதும் ஆன, இவ்வரியை - இந்தச் சமுசாரச முத்திரத்தினின் றும், ஞான ஓடமதால் - ஞானமாகிய தெப்பத்தால், மூடனை - மூடனான என்னை, கடத்தி - தாண்டவைத்து, ஒழித்தனை - அக் கடலை அழித்தாய், பகவனே நீ - ஷட்குண ஐசுவரிய சம்பன்னரே, எனவே - என்று, அன்பினோடே - பிரியத்தோடும், நின்று - நீங் காதவனாயிருந்து, மொழிந்தனன் - கூறினன்.

(ப-ம்)—ஹேஷட் குண ஐசுவரிய சம்பன்னரே மிகத் துக்க மான சமுசார சமுத்திரத்தை ஞானமாகிய தெப்பத்தால் என் னைத் தாண்டச் செய்தீர்களென்று சீடன் குருவை நமஸ் கரித்துக் கூறினனென்பது பொருள், (172)

ஒப்பிலாக் கிருத கிர்த்ய னுபேட்சக னொரும னத்தோ
னிப்பொழு தான்ம ராம னிசைநிரு விருத னானே
னப்பெனக் கான லூடிவ் வழிவிட யமதை நீத்தே,
யிப்புவி யதனி னின்னோ டிருந்துசஞ் சரிப்ப னாயேன்.

(ப-ரை)—இப்பொழுது, ஒப்பிலாக் கிருதகிர்த்யன்—செய்யவேண்டிய முழுதையுஞ் செய்து முடித்தவனாயும், உபேட்சகன், ஒன்றையும் விரும்பாதவனாயும், ஒரு மனத்தோன் - ஒன்றானமனமுடையனாயும், ஆன்மராமன் - ஆன்ம திருப்தனாயும், இசைநிருவிருதனானேன் - நான் பொருந்திய ஸ்வரூபாவரணமின்றியவனானேன், இவ்வழி விடயமதை - அழிந்துபோகும் இவ்விடயத்தை, கானலூடு - பேய்த்தேரில், அப்பென - தண்ணீரைக் கொள்ள விரும்பாமை போன்று, நீத்து - இவ்விடய மனைத்தையும் பரிகசிப் போனாய் நீத்து விட்டு, இப்புவியதனில் - இப்பூமியில், நின்னோடு இருந்து, தேவரீரோடு கூடினவனாயிருந்து, நாயேன்-நாயடியேன், சஞ்சரிப்பன்-சஞ்சாரஞ் செய்கின்றேன்.

(ப-ம்)—சகல வுலங்களிலு மிச்சையற்று ஆன்மதிருப்தனாய யானிருக்கின்றேனாகலின் மிருகதோய துல்லிய விடயங்களைய சட்டை செய்பவனாய்த் தங்களோடு வாசம் பண்ணுகின்றேனென்பது பொருள். (173)

(அ-கை)—"ஆயுளுள்ளளவு மூன்றும் வந்திக்கத் தக்கன வேதாந்தங் குரு வீசுராராம். ஆதியில் வித்தையி னடைவிற்காகச் செய்நன்றி கொன்ற தோடம் பின் நீக்கவும்" என சிவாஞ்ஞை யிருத்தலினால் ஆசார்யனிடத்தினின்றும் வித்தையை யடைந்த சிடன் குருவிற்கு அவசியஞ் செய்பவேண்டியதை உலக சிக்ஷையின் பொருட்டுக் காண்பிக்கின்றார்.

ஐயத்தா னுடலின் றாணை யடைந்தம் மாறெனும் பகமடைந் தவனே, மெய்யைத்தான் விழுத்தும் வரையினு நினது மெய்யடிக் கேவலை நிதமுஞ், செய்யத்தான் முயல்வ லென்றனு விதனைச் செய்திடக் கூடுநின் றனக்குச், செய்யத் தான் வேறொன் றென்றனன் முடியா சிற்பர வீரசேகரனே. (174)

(ப-ரை)—அம்-அழகிய, ஆறெனும் பகமடைந்தவனே - வைராக்கியம் ஞானம் கீர்த்தி செல்வம் வீரியம் ஈசுவரத்தன்மை என்னு மறுகுணங்களான பகத்தையடைந்த ஹேபகவனே! ஐயத்தாலுடலின் ருாணையடைந்து - பிக்ஷயினுல் உடலைத் தரித்துக்கொண்டு, மெய்யைத் தான் விழுத்தும் வரையினும்-உடலைப் பிண மெனப் படுத்துமளவும், நினது மெய்யடிக்கு - தேவரீரது திருவடிக்கு, ஏவலே நிதமும் செய்யத்தான் முயல்வல் - எக்கால மூந் தொண்டுபுரியவே முயலுவேன், என்றனுவி தனைச் செய்திடக் கூடும் - அடியேனுல் இதுவேதான் செய்யவியையும், நின்றனக்கு - நித்ய திருத்தரான - தேவரீருக்கு, வேறொன்று - வேறோர் செய்கையை, செய்யத்தான் - செய்யவும், என்றனுல் முடியா - நாயடியே னுலாகாது, சிற்பர வீர சேகரனே - சோதி ஞான சுயம்பிரகாச சொரூபரான வைராக்கியவீரம் ஞானவீரம் ஈசுவர பக்திவீரம் என்னும் பலவீரங்களைச் சேகரித்துத் தன்னைச் சாணகதி யடைந்த சீடருக் கினிமையோடளித்தருளும் வீரசேகர னென்னுங் குருமூர்த்தியே !

(ப-ம்)—பிறரிச்சையாற் கிட்டிய வன்ன பானுதியாலுடற்ருரணை செய்து சரீர பதனுந்தம்வரை தங்களுக்குத் தொண்டியற்றுகின்றேன். ஆன்மஞானத்தின் பிரதியுபகசார மிதுவல்லது வேறியற்ற யுலகிலின்ருகவினுலாம். "அந்த நான் தங்களுக்குத் தேசாந்தமான வற்றைக் கொடுக்கின்றேன் என்றனையும் பணிவிடையின் பொருட்டு" என்னுஞ்சுருதியினுல் முன்பு தத்வோபதேசஞ் செய்யும் யாக்ஞவற்கியருக்கு ஜனகர் தனது ராஜ்யத்தைக் கொடுத்து அதன்பின் தனது தேகத்தையுங் குருவிற்குக் கொடுத்தார் என்னுமிவ்வவிப் பிராயத்தை மனதில் வைத்துக்கொண்டு இவனும் இங்ஙன மியற்றத்தக்க தெனக் கூறினு னென்பது பொருள். (174)

(அ-கை)—இப்பிரகாணுர்த்தத்தை எவனன்ருக வறிகின்ருனே அவனுக்குச் சம்சார நிவர்த்தியே பலமெனக் காண்பிக்கின்ருர்.

நன்மா ணாக்க ளுசிரிய ஞடு கதையின் சிரவணத்தா,
லெம்மான் மறையை யனையமறை யினிய சாரசமுத்தரண,
மென்மா விதுவிவ் வளவியற்ற லாயதிதனை யெவனுணர்
வான், வன்மாய் வுதய நீராழி மாட்டு விழுவ திலையவனே.

(ப-ரை)—நன்மாணாக்கன்-நல்ல சீடன், ஆசிரியன் நாடுகதை யின் சிரவணத்தால் - குருவைத் தேடியடைந்து கேட்ட கதை யின் சிரவணமாக,எம்மான் மறையை யனைய - எம்பிரான் சுவாச மான வேதத்திற்குச் சமமாய், இனிய - நன்ருக, மறை சாரசமுத் தரணம் என்மாவிது-வேதசாரசமுத்தரணமான பெருமையுடைய விந்நூல், இவ்வளவு இயற்றலாயது - இங்ஙனஞ் செய்தமைக்கப் பட்டது, எவன் - எவ்வதிபுருடன், இதனை-இந்நூலினை, உணர் வான் - அநுபவ முடிவுவரை யுணர்வானே, அவன் - அப்புருடன், வன் - கொடிய, மாய்வு உதய நீராழி மாட்டு - மரித்தல் பிறத் தல் என்னு நீருடைய சமுசார சமுத்திரத்தில், விழுவதிலை-விழ மாட்டான் மோக்ஷமடைவன்.

(ப-ம்)—சுருதி போன்று குரு சீடரின் தத்துவநிர்ணய பல முடைய கதையின் சிரவணமாக வியற்றப்பட்ட விச்சுருதி சார சமுத்தரண மென்னும் பிரகரணத்தை எவன் பொருளோடு மறி வானே அத்தத்துவ வேத்தாவான சீடன் மரிப்போடமைந்த பிறப்புடைச் சமுசாரசாகரத்தி லமிழானென்பது பொருள்.

(அ-கை)—குரு ஈசுவரர்களிடத் தன்புடையார்க்கே விப்பிர கரணத் ததிகாரத்தன்மையாம். ஏனையோர்க்கின்றெனக் கூறு கின்றூர்.

குருபரன் றனது பத்தியை யடைந்து குலவிடும் பக
வந்த ராலே, யொருவிதைப் பயிலத் தக்கதிங் கிவரை
யொழிந்தவ ரோதுதல் கூடா, குருபர னன்பன் றனக்
கெத ஞலே குருவருள் பொருளிலங் கிடுமா, றெரியத
ஞலன் னியத்தினைச் சேவித் திடுபவன் சிரவணம் புரியேல்.

(ப-ரை)—குரு பரன்றனது பத்தியையடைந்து-ஆசார்யனி டத்துப் பக்தியுடையவனுய், குலவிடும் பகவந்தாலே - விளங்கு

கின்ற ஐசுவரிய முடையோரால், இங்கு - ஈண்டு, ஒரு இதை - ஒப்பற்ற விப்பிரகாணத்தை, பயிலத்தக்கது - படிக்கத்தக்கது, இவரை ஒழிந்தவர் - இவரினு மயலாரான சாதனமின்றியவர், ஓதுதல் கூடா - படித்தல் கூடாது, எதனல் - ஏனெனின், குரு பரனன்பன் றனக்கு - குருபத்தி யுடையவனுக்கே, குரு வருள் பொருள் இலங்கிடுமால் - குருவாலுபதேசிக்கப்பட்ட அர்த்தம் நன்ருக விளங்குமாதலினல், தெரியதனல் - இங்ஙன மறியப்படு தலினல், அன்னியத்தினைச் சேவித்திடுபவன்-விடய வபிலாஷை யுடையவன், சிரவணம் புரியேல் - சிரவணஞ் செய்யாதிருக்கக் கடவன்.

(ப-ம்)—இப்பிரகாணம் பரபக்தி ஆசிரியனிடத்தமைந்த பா மாஞ்சர்களாற் படிக்கத்தக்கது. சாதன சதுஷ்டய மென்னும் ஐசுவரிய மின்றியவர்களாற் படிக்கொணுதது. குருபத்தியுடை யோனுக்குக் குருவினுபதேசம் பலமுடையதாகின்றது. விடயா சக்த புத்தியான் படிக்கத்தக்கவனன்றென்பது பொருள். (176)

(அ-கை)—இப்பிரகாணம் குருபக்தியுடைய சந்நியாசிகளா லேயே படிக்கத்தக்கதெனப் புகலப்பட்டது. ஆண்டு யாது பிர மாணமாமென வேட்கை நிகழ்வுழி "அந்தியாவாசிரமிகளுக்கு நன்ருய் ரிஷி சங்கத்தாற் சேவிக்கப்பட்ட மேலான பவித்திரத் தைச் சொன்னர். எவனுக்குத் தேவனிடத்தில் மேலான பக்தி இருக்கின்றதோ தேவனிடத்திற்போல குருவினிடத்தில் மே லான பக்தியோ அந்த மகாத்மாவிற்குச் சொல்லப்பட்ட விவ் வர்த்தங்கள் பிரகாசிக்கின்றன" என்னுஞ் சுருதியே பிரமாண மெனக் கூறுகின்றுர்.

குருபரன் றனக்கன் புடையமா புருடர் தமக்கருங் குருவினு லருளு, மொருபொரு ளொளிரு மெனமறை யதுவு மோதிய தெவற்கென முதலா, யருமது தனிஞ லருளிறை யடியை யகம்புறந் தொழுதிடு மவராற், றெரி தர விதனைக் குருபர னருளாற் றெரிந்துகற் றிடறகுந் திடுமே. (177)

(ப-ரை)—மறையதுவும்-வேதமும், எவற்கு என முதலாய்-எவனுக்கு என்பது முதலிய பதங்களினால், குருபரன் றனக்கு அன்புடைய - குருவிடத்தில் பயத்தியுடைய, மாபுருடர் தமக்கு-மகாத்மாவான புருடர்களுக்கு, அருங்குருவின லருளும் - அரிய குரு மூர்த்தியா லனுக்கிரகஞ் செய்யப்படும், ஒரு பொருள் - ஒப்பற்ற பரமான்மாவானது, ஒளிருமென - விளங்கு மென்று, ஓதியது - புகன்றது, அரும்- அருமையான, அது தனினால் - அவ்வேதவால், அருள் இறை அடியை, அனுக்கிரகஞ் செய்யுமாசார்யரின் திருவடிகளை, அகம் புறம் தொழுதிடுமவரால் - உள்ளிலும் வெளியிலும் சேவித்திடுபவரால், இதனை - இப்பிரகரணத்தை, தெரிதர - விளங்கும்படி, குருபரனருளால் தெரிந்து - ஆசார்யனனுக் கிரகத்தாலறிந்து, கற்றிடல் தகுந்திடும் - கற்கத் தக்கது, மற்றோர் வழியாலன்று.

(ப-ம்)—குருவினிடத் தன்புடைய மகான்மாவிற்கே குருவாலுபதேசிக்கப்பட்ட வான்மதத்துவம் நன்றாய் விளங்குகின்றது. என வேதமுங் கூறிற்றாகலின் இது குருபத்தியுடையோராற் படிக்கத்தக்க தென்பது பொருள். (177)

(அகை)—குருவின் பிரசாதத்தாற் கிரந்தத்தை முடிப்பவராய்ச் சற்குருபத்தியே ஞானத்தி னந்தரங்க சாதன மெனக் காட்டவும் உலகரின் சிக்ஷையின் பொருட்டும் கிரந்தத்தின் முடிவில் குருவை நமஸ்கரிக்கின்றார்.

எம்முடைய பிறப்பிறப்பின் சந்தானத் தாடு
மியல்புடைய மனவேது வானவிரு ளதுதா
னெம்முனிவ னுளவிரவி யொளியாலட் டதுவா
யேகாந்த நாசமடைந் திடுஞ்சுருதி புகலுஞ்
செம்மைசம விநயமதாற் செறிந்தொளிருஞ் சீடத்
திருக்கூட்ட மெவ்விறைவன் பதமடையக் கணமே
வெம்மையறும் பதத்திருக்கு மேதிவரர்க டொழுமவ்
விமலகுரு பதமாயு ளுளவளவுந் தொழுவாம். (178)

(ப-ரை)—பிறப்பிறப்பின்-சனனமரணத்தின், சந்தானத்து-பரம்பரையில், ஆடும் இயல்புடைய - திரிகின்ற வியல்பையுடைய, எம்முடைய - எனது, மனவேதுவான - மனத்திற்குக்காரணமான, இருளதுதான் - அஞ்ஞானமானது, எம்முனிவன் - எந்தக் குருமூர்த்தியினது, உள இரவி ஒளியால் - புத்தியாகிய சூரியப் பிரகாசத்தால், அட்டதுவாய் - காய்ச்சசப்பட்டதாய், ஏகாந்தம் - முழுவதும், நாசமடைந்திடும் - அழிந்திட்டதோ, சுருதி புகலும் - சுருதியாற் பிரதிபாதிக்கப்பட்ட, செம்மை - செம்மையான, சமம் - சாந்தி, விநயமதால் - அடக்கம் முதலிய குணங்களால், செறிந்தொளிரும் - அதிகமாக விளங்குகின்ற, சீடத்திருக்கூட்டம் - அழகிய சீடர்கள், எவ்விறைவன் பதமடை - எந்தக் குருமூர்த்தியின் திருவடிக்கடிமைபூண்டலவும், அக்கணமே -அப்போதே, வெம்மையறும் பதத்திருக்கும்-சாந்தியான பதவியை யடைந்திருக்கின்ற, எதிவரர்கள் தொழும்-சந்நியாசிகளுள் சிரேஷ்டர்கள் அவர்களை வணங்குகின்றார்களோ, அவ்விமலகு ருபதம் - அந்தப் பரிசுத்த குருமூர்த்தியின் றிருவடிகளை, ஆயுளுளவளவும் - சீவனகாலம் வரையில், தொழுவாம் - வணங்குவாம்.

(ப-ம்)—பிறப்பிறப் பென்னும் பரம்பரையில் ஓயாதலையுமெனது மனதின் காரணவஞ்ஞானம் எந்தக் குருமூர்த்தியின் புத்திவடிவ சூரியனுற் றகிக்கப்பட் டழிந்ததோ, - மற்றும் சமதமாதி சாதன சம்பன்ன சீடர்கள் எந்தக் குருவின் றிருவடியை யடைந்து சம்சாரத்தினின்று முடனே விடுபட்டார்களோ அந்த யதிவரர்களாற் பூஜிக்கப்பட்டகுரு சிரேஷ்டரான பகவற்பாதரென்னும் பெயர் வாய்ந்த குருவை ஜீவனகாலம் வரையிலும் நமஸ்கரிக்கின்றே னென்பது பொருள். (178)

(அ-கை)—குருபத்திபோன்று ஈசுவரபத்தியும் ஆன்மஞானத்திற் கந்தரங்க சாதன மெனப் புலப்படுத்த விராட்டுவடிவ ஸ்ரீநாராயணரை நமஸ்கரிக்கின்றார்.

எவ்விறைவன் சிரந்துறக்கம் வதனமனல் விழிக
ளிரவிமதி செவிதிசைக ளுயிர்ப்பாவி யுதர
மிவ்விசும்பு வாத்தவிய நதிபதிய தாகு
மெவருள்ளுள சுரநரர்கள் ககங்கோகந் தருவர்
தவ்வாவு தயித்தியரா லனந்தவித மாகத்
தகும்விசுவ மதிசயமாய் ரமித்திலகுந் தானே
யிவ்வுலக மும்மையையும் வபுவாக வுடைய
வீசனெனு மத்தகைய விண்டுவைவாழ்த் துதுமே.

(ப-ரை)—எவ்விறைவன் - எப்பரமேசுவரனுக்கு, சிரம் - சிரசானது, துறக்கம் - சுவர்க்கலோகமோ, வதனம் - முகமானது, அனல் - ஓமாக்கினியோ, விழிகள் - கண்களானவை, இரவிமதி - சூரிய சந்திரர்களோ, செவி - செவியானது, திசைகள் - திக்குகளோ, ஆவி - பிராணவாயுவானது, உயிர்ப்பு - காற்றோ, உதரம் - வயிறானது, இவ்விசும்பு - இந்த வாகாயமோ, வாத்தவியம் - மூத்திரஸ்தானமானது, நதிபதியதாகும் - சமுத்திரமோ [பாதங்கள் பூமியோ], (மற்றும்) பூமியோ மற்றும் எவருள்ளுள - அந்தப் பரமேசுவரருள்ளில் இருக்கின்ற, சுரநரர்கள் - தேவர்கள் மனிதர்கள், ககம் - பக்ஷிகள் அல்லது இந்திரன், கோ - பசுக்கள், கந்தருவர் - கந்தருவர்கள், தவ்வு - தவழுகின்ற, அரவு - சர்ப்பங்கள், தயித்தியரால் - தைத்தியர்கள் ஆகிய இவர்களால், அநந்தவிதமாகத்தகும் - நானாப் பிரகாரமாகும், விசுவம் - உலகமானது, அதிசயமாய்-ஆச்சர்யமுடையதாய், ரமித்திலகும்-ஆனந்தித்துக்கொண்டு விளங்குகின்றதோ, இவ்வுலக மும்மையையும் - இந்த மூன்றுலகத்தையும், வபுவாகவுடைய- சரீரமாகக் கொண்ட, ஈசனெனும், பரமேசுவரனென்னும், அத்தகைய - அங்ஙனமான - விண்டுவை வாழ்த்துமே - வியாபக வடிவ விஷ்ணு மூர்த்தியை நமஸ்கரிக்கின்றேன்.

(ப-ம்)—விஷ்ணுவை வணங்குகின்றேனென அன்வயம். எங்ஙனமாயவரையெனின் விசேஷண மனைத்துஞ் சேர்க்கப்படுகின்றன. "பாதங்களாற் பூமி" என்னுஞ் சுருதியனுஃ

(ப-ரை)—பிறப்பிறப்பின்-சனனமரணத்தின், சந்தானத்து-பாம்பரையில், ஆடும் இயல்புடைய - திரிகின்ற வியல்லையுடைய, எம்முடைய - எனது, மனவேதுவான - மனத்திற்குக்காரணமான, இருளதுதான் - அஞ்ஞானமானது, எம்முனிவன் - எந்தக் குருமூர்த்தியினது, உள இரவி ஒளியால் - புத்தியாகிய சூரியப் பிரகாசத்தால், அட்டதுவாய் - காய்ச்சப்பட்டதாய், ஏகாந்தம் - முழுவதும், நாசமடைந்திடும் - அழிந்திட்டதோ, சுருதி புகலும் - சுருதியாற் பிரதிபாதிக்கப்பட்ட, செம்மை - செம்மையான, சமம் - சாந்தி, விநயமதால் - அடக்கம் முதலிய குணங்களால், செறிந்தொளிரும் - அதிகமாக விளங்குகின்ற, சீடத்திருக்கூட்டம் - அழகிய சீடர்கள், எவ்விறைவன் பதமடை - எந்தக் குருமூர்த்தியின் திருவடிக்கடிமைபூண்டலவும், அக்கணமே -அப்போதே, வெம்மையறும் பதத்திருக்கும்-சாந்தியான பதவியை யடைந்திருக்கின்ற, எதிவரர்கள் தொழும்-சந்நியாசிகளுள் சிரேஷ்டர்கள் அவர்களை வணங்குகின்றார்களோ, அவ்விமலகு ருபதம் - அந்தப் பரிசுத்த குருமூர்த்தியின் றிருவடிகளை, ஆயுளுளவளவும் - சீவனகாலம் வரையில், தொழுவாம் - வணங்குவாம்.

(ப-ம்)—பிறப்பிறப் பென்னும் பரம்பரையில் ஓயாதலையுமெனது மனதின் காரணவஞ்ஞானம் எந்தக் குருமூர்த்தியின் புத்திவடிவ சூரியனாற் றகிக்கப்பட் டழிந்ததோ, - மற்றும் சமதமாதி சாதன சம்பன்ன சீடர்கள் எந்தக் குருவின் றிருவடியையடைந்து சம்சாரத்தினின்று முடனே விடுபட்டார்களோ அந்த யதிவரர்களாற் பூஜிக்கப்பட்டகுரு சிரேஷ்டரான பகவற்பாதரென்னும் பெயர் வாய்ந்த குருவை ஜீவனகாலம் வரையிலும் நமஸ்கரிக்கின்றே னென்பது பொருள். (178)

(அ-கை)—குருபத்திபோன்று ஈசுவரபத்தியும் ஆன்மஞானத்திற் கந்தரங்க சாதன மெனப் புலப்படுத்த விராட்டுவடிவ ஸ்ரீநாராயணரை நமஸ்கரிக்கின்றார்.

எவ்விறைவன் சிரந்துறக்கம் வதனமனல் விழிக
ளிரவிமதி செவிதிசைக ளுயிர்ப்பாவி யுதர
மிவ்விசும்பு வாத்தவிய நதிபதிய தாகு
மெவருள்ளுள சுரநரர்கள் ககங்கோகந் தருவர்
தவ்வரவு தயித்தியரா லனந்தவித மாகத்
தகும்விசுவ மதிசயமாய் ரமித்திலகுந் தானே
யிவ்வுலக மும்மையையும் வபுவாக வுடைய
வீசனெனு மத்தகைய விண்டுவைவாழ்த் துதுமே.

(ப-ரை)—எவ்விறைவன் - எப்பரமேசுவரனுக்கு, சிரம் - சிரசானது, துறக்கம் - சுவர்க்கலோகமோ, வதனம் - முகமானது, அனல் - ஓமாக்கினியோ, விழிகள் - கண்களானவை, இரவிமதி - சூரிய சந்திரர்களோ, செவி - செவியானது, திசைகள் - திக்குகளோ, ஆவி - பிராணவாயுவானது, உயிர்ப்பு - காற்றோ, உதரம் வயிறானது, இவ்விசும்பு - இந்த வாகாயமோ, வாத்தவியம் - மூத்திரஸ்தானமானது, நதிபதியதாகும் - சமுத்திரமோ [பாதங்கள் பூமியோ], (மற்றும்) பூமியோ மற்றும் எவருள்ளுள - எந்தப் பரமேசுவரருள்ளில் இருக்கின்ற, சுரநரர்கள் - தேவர்கள் மனிதர்கள், ககம் - பக்ஷிகள் அல்லது இந்திரன், கோ - பசுக்கள், கந்தருவர் - கந்தருவர்கள் , தவ்வு - தவழுகின்ற, அரவு - சர்ப்பங்கள், தயித்தியரால் - தைதியத்தியர்கள் ஆகிய இவர்களால், அநந்தவிதமாகத்தகும் - நானுப் பிரகாரமாகும், விசுவம் - உலகமானது, அதிசயமாய்-ஆச்சர்யமுடையதாய், ரமித்திலகும் - ஆனந்தித்துக்கொண்டு விளங்குகின்றதோ, இவ்வுலக மும்மையையும் - இந்த மூன்றுலகத்தையும், வபுவாகவுடைய சரீரமாகக் கொண்ட, ஈசனெனும், பரமேசுவரனென்னும், அத்தகைய - அங்ஙனமான - விண்டுவை வாழ்த்துமே - வியாபக வடிவ் விஷ்ணுமூர்த்தியை நமஸ்கரிக்கின்றேன்.

(ப-ம்)—விஷ்ணுவை வணங்குகின்றேனென அன்வயம். எங்ஙனமாயவரையெனின் விசேஷண மனைத்துஞ் சேர்க்கப்படுகின்றன. "பாதங்களாற் பூமி" என்னுஞ் சுருதியினுனும் "ஆயி

ரஞ் சிரமுடையோன் பொருட்டு'' என்னுஞ் சுருதியினுனும் சித்தமான வியாபக சில விஷ்ணுவை முமுக்ஷுவானயான் நமஸ்கரிக்கின்றே னென்பது பொருள். (179)

விக்கின விருட்கு வெய்யவனுகி விக்கின வனக்குவெவ் வெரியாய், விக்கினவரிக்குக் கலுழன தாகிவிக்கினக் கரிக்கு வெவ் வரியாய், விக்கின வரிக்குக் குலிசம தாகி விக்கின வரிக்குவ டவையாய், விக்கின மொழிக்கச் சமிநிழ லமர்ந்த விக்கினேச் சுரன்பதம் பணிவாம். (186)

வேத சார சமுத்தரண மெனவே விசுவ குருவருளா, லோது மிதனைத் தமிழ்மொழியி லுரையா டினனென் னுள நாண, நாத வீர வாரியனே நல்ல குழவி மொழியெனவே. நீதண் ணுளத்தி லுகந்தருளி நிலையிலேனுக் கருள் புரிவாய். (181)

வாழிசீர் வல்ல பத்தில் வானிநி ழலமர்ந்த வள்ளல்
வாழிமான் மருகன் வாழி மதுமுனி பணியும் வள்ளல்
வாழிநன் முத்தி ராம வள்ளலுக் கருளு மெந்தாய்
வாழிமா வீர வீச னடியவர் வாழி வாழி. (182)

வேதசார சமுத்தரண மூலமும் உரையு முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!





